## அட்டைப்படக் கடிதம்:

# அன்புள்ள பிரதமருக்கு...

தேர்தலில் மகத்தான வெற்றி பெற்று ஆட்சியைக் கைப்பற்றியிருக்கும் உங்களுக்கு இதய பூர்வமான நல்வாழ்த்துக்கள்.

நாற்பது வயது என்பது இளமையும் அநுபவமும் கலந்த ஓர் அருமையான பருவம். முதுமையான பிரதமர்களையே பார்த்து வந்திருந்த மக்களுக்கு, சற்றே கவர்ச்சியான தங்கள் உருவம் ஒரு பரவசத்தை அளித்திருக்கிறது. பொதுக் கூட்ட மேடைகளில் நீங்கள் பாய்ந்து ஏறி வரும் அழகை ரசித்துக் கைதட்டி ஆர்ப்பரிக்கும் பொதுமக்களை (குறிப்பாகப் பெண்களை!) ஆயிரக் கணக்கில் பார்த்துக் கொண்டிருக்கிறேன். உங்களை, ரகசியக் காப்பாளர்கள் மட்டுமின்றி, அருண் நேரு, அருண்சிங், ஃபோட்டேதார் என்று வேறு சிலரும் சதா சூழ்ந்துகொண்டிருப்பதால், தங்களிடம் உரையாட முடியாது. எனவே இக் கடிதம். அதுவும், தேர்தல் வாக்குறுதிகளைத் தேர்தல் முடிந்த கையோடு நினைவுபடுத்திவிட்டால் நல்லதில்லையா?

### ஏழைகள் எங்கேயும் உண்டு

'ஏழைகளாயிருப்பதால் அவமானம் ஏதும் இல்லை ஆனால் அது ரொம்ப அசௌகரியமானது'. என்று ஒரு டேனிஷ் பழமொழி உண்டு ஒரு பிரயாணம் போய்விட்டுவந்தால் பிரமிப்பாய் இருக்கிறது – இவ்வளவு ஏழைகளா இந்த நாட்டில் என்று. இவர்களுக்கு என்றைக்கு விடிவு என்ற அயர்ச்சி உண்டாகிறது. நீங்கள் ஆட்சிப் பொறுப்பை முதன் முதலில் எடுத்துக் கொண்டவுடன் விடுத்த செய்தி நினைவுக்கு வருகிறது: 'நமது திட்டங்களில் இனி கிராமப்புற வளர்ச்சிக்கு அதிக முக்கியத்துவம் கொடுக்கப்படும். சிறு தொழில்கள் கை வினைப்பொருட்கள் இவை ஊக்குவிக்கப்படும். பொருளதார வேற்றுமைகள் குறைந்து சமூக அமைதி நிலவ, கிராம – நகர்ப்புற இளைஞர்களுக்கு வேலை வாய்ப்புகள் அதிகரிக்கப்படும் '– என்று சொல்லியிருக்கிறீர்கள். ரொம்ப சந்தோஷம், ஆனால் இவற்றை எப்படி சாதிக்கப் போகிறீர்கள் என்பதுதான் கேள்வி. இதுவரை பின்பற்றப்பட்டு வருகிற கொள்கைகள் செயல் திட்டங்கள் அவ்வளவாக உதவவில்லை என்பதைப் புரிந்து கொண்டு தொழில், பொருளாதாரத் துறைகளில் நவீன சிந்தனை, புதிய செயல்முறை என்று நீங்கள் ஆரம்பித்தாலொழிய வேலையில்லாத் திண்டாட்டத்தை நீக்கி சுபிட்சத்தை நாட்டில் நிலவச் செய்ய முடியாது. நினைவிருக்கட்டும்.... 'வேலைக்குப் போகாமலே ரிட்டையராகிவிட்டான் என் பிள்ளை!' என்று ஜோக்குக்காகச் சொன்னது இன்று உண்மையாகிக் கொண்டு வருகிறது...

இலவச உணவு, இலவச மனை, இலவச உடை, இலவச கடன் என்று மக்களுக்கு எதையும் இலவசமாக வழங்கிக் கொண்டு போவதால் பொருளாதாரம் உயராது. மக்கள் உழைத்துச் சம்பாதித்து அதேநேரத்தில் உற்பத்தியையும் பெருக்கித் தங்களையும் தங்கள் குடும்பத்தையும் காத்துக் கொள்ள வேண்டும். அவர்கள் உழைக்கத் தயாராக இருக்கிறார்கள். வேலை வாய்ப்புக்கள்தான் தேவை. இதற்கேற்ப தொழில் வர்த்தக பொருளாதாரக் கொள்கைகளை மாற்றி அமையுங்கள்.

### தொழில் வளர்ச்சி

இல்லி பொருளாதார வளர்ச்சிக் கழகத்தில் வெள்ளிவிழாவில், சில வருஷங்களுக்கு முன்னால் தங்கள் அன்னையார் பேசியபோது,



இந்த கண்ட்ரோல்களைக் கட்டாயம் தளர்த்த வேண்டியதுதான் என்றார். சொன்னதோடு நிற்காமல், சில நடவடிக்கைகளும் உடனே எடுத்தார். இண்டஸ்ட்ரியல் லைசென்ஸிங் முறையில் சில கடுமையான கட்டுப்பாடு களைத் தளர்த்தினார். ஆனால் இதை முழுமை யாகச் செய்யாமல் அரை மனசோடு செய்த மாதிரி இருக்கிறது. நீங்கள் முழு மனசோடு செய்யலாமே?

'ஸ்ரீமதி காந்தி, பொருளாதார நிர்வாகச் சீரமைப்புக் கமிஷன் அளித்த முப்பதுக்கு மேற்பட்ட ரிப்போர்ட்டுகளைக் கண்டுகொள் ளவே இல்லையே! கண்ட்ரோல்களைப் பற்றிக் கேட்டதும், வெகு சாமர்த்தியமாக ஒரு 'நரசிம்மன் கமிட்டி' நியமித்து இந்த விஷ யத்தில் உடனடியாக ஒரு முடிவுக்கு வரா மல் பிரச்னையைத் தள்ளிப் போட்டுவிட் டார்.'

தொழில் முன்னேற்றம் முடியாத காரிய மல்ல என்று குஜராத் நிரூபித்திருக்கிறது. குஜராத் முறையை மற்ற மாநிலங்களும் பின்பற்றலாம். இதற்கு உங்களுடைய தூண்டுதலும் வழிகாட்டுதலும்தான்தேவை.

**தேர்தல் அறிக்கை**

சாதாரண பிரஜை என்ற முறையில் உங்கள் கட்சித் தேர்தல் அறிக்கையிலேயே, உங்கள் அழகான அட்டைப்படத்துக்கு அடுத்ததாக எனக்குப் பிடித்தது நிர்வாகத் தில் இனி சுறுசுறுப்பு இருக்கும் என்றும் லஞ்ச ஊழல் பொது வாழ்விலிருந்து விரட்டப்படும் என்றும் நீங்கள் கூறியிருப் பதுதான். வாக்குறுதி அளிப்பது எளிது. நிறைவேற்றுவது கஷ்டம். இன்று ஓர் அரசு இலாகாவுக்கு இன்னொரு இலாகாவில் காரியம் ஆக வேண்டுமானால் அதற்குக்கூட லஞ்சம் பெறுமளவுக்கு லஞ்ச ஊழல் வேரூன்றிப் போயிருக்கிறது. கண்ட்ரோல் களை நீக்குவதும் மக்கள் சுதந்திரமாகச் செயல்பட முடியாமல் எதற்கெடுத்தாலும் அரசாங்கத்தின் தயவை எதிர்பார்க்க வேண்டியிருக்கிற அவலநிலை ஒழிவதும்தான் லஞ்ச ஊழல் விரட்டியடிக்கப்பட ஒரேவழி. இதை உங்களால் செயல்படுத்த முடியு மானால்... அடேங்கப்பா! எவரெஸ்ட் சிக ரத்தை விட உயர்ந்து விடுவீர்கள் எங்கள் மதிப்பில்!

**நிர்வாகம்**

டில்லி வன்முறைக் கிளர்ச்சியில் சொத்துக் களை இழந்த சீக்கியர்கள். இன்ஷ்யூரன்ஸில் கலவரச் சேதங்களுக்கு நஷ்ட ஈடு இல்லை என்று உங்களிடம் முறையிட்ட போது, உடனே நிதியமைச்சரையும், லெப்டினன்ட் கவர்னரையும் அழைத்தீர்கள். விதிகளை








**அருண் நேரு:**

அரசியல் விஷயங்களில் ராஜீவுக்கு உதவு பவர் இதற்குமுன் கல்கத்தாவில் கம்பெனி அதிகாரியாயிருந்தவர். ராஜீவின் கொள் ளுத்தாத்தாவும், அருண் நேருவின் கொள் ளுத்தாத்தாவும் சகோதரர்கள்; ஆக,ராஜீ வின் 'மூன்றுவிட்டு' சகோதரர். வெட் டொன்று, துண்டு இரண்டு என்று பேசக் கூடியவர். பல சமயங்களில் கட்சித் தோழர்களிடையே கூட வெறுப்பைச் சம்பாதித்துக் கொள்ளும் அளவுக்குஅலட் சியமாகப் பேசக் கூடியவர்.ஆனால் இவரை யாரும் அசைக்க முடியாது. கட்சியின் பண விவகாரங்கள் முழுக்க முழுக்க இவர் கையில்தான். இப்போது மின்உற்பத்தி உதவி அமைச்சராகியுள்ளார்.

**அருண் சிங்:**

மெதுவான குரலில் பரிவுடன் பேசக் கூடியவர்.திறமைக்குப் பெயர் போனவர். இவரும் கல்கத்தா நிறுவனம் ஒன்றில் உயர் அதிகாரியாயிருந்தார். ராஜீவின் பார்லிமெண்டரி காரியதரிசி. ராஜீவுக்கு மட்டுமே பதில் சொல்ல வேண்டியவர் பார்லிமெண்ட் விவகாரங்களில் ராஜீவுக்கு உதவுதே இவர் முக்கிய பணி. எந்த இலாகாவிலும், பிரதமர் விருப்பப்பட் டால், தலையிட இவருக்கு அதிகாரம் உண்டு.

**சதீஷ் சர்மா:**

ராஜீவின் நெருங்கிய நண்பர். ராஜீ வுடன் இந்தியன் ஏர்லைன்ஸில் பைலட் டாக இருந்தவர். ராஜீவுக்குத் தினசரி வரு





மாற்றி அமைக்கச் சொன்னீர்கள். அவர்கள் ஒருநாள் அவகாசம் கேட்டார்கள். ''முடியாது. எட்டுமணி நேரத்துக்குள் நடந்தாக வேண்டும்!'' என்று காரியத்தை முடித்தீர்கள். இது உங்கள் நிர்வாகத் திறமையைக் காண்பிக்கிறது. இதுபோல் நிர்வாகத் துறையில் எல்லா மட்டத்திலும் கால நிர்ணயம் செய்து விட்டால், அரசாங்க வேலைகள் எல்லாம் கூட சட்சட்டென்று முடிந்துவிடும். 'நமது நிர்வாக அமைப்பு முடிவுகளை நோக்கி செயல்பட வேண்டும். இழுத்துப் பறித்துக் கொண்டு நிற்காத ஒரு புதிய நிர்வாகச் செயல்முறை உருவாக்கப்பட வேண்டும்' என்று நீங்களே சொல்லியிருக்கிறீர்கள். பேச்சோடு நின்று விட வேண்டாம் என்பதற்காக நான் சும்மா ஞாபகப்படுத்துகிறேன் அவ்வளவுதான்...

### கல்வித்துறை

கல்வித் துறையில் புதிய மாற்றங்கள் செய்ய, தேசிய அளவில் ஒருமித்த கருத்து ஒன்றை அறிந்து கொள்ளுவேன் என்று சொல்லியிருக்கிறீர்கள். கல்வி மந்திரிகளோடு உங்கள் கருத்துப் பரிமாறல் நின்றுவிடாமல், கல்வி நிபுணர்களைக் கலந்து ஆலோசியுங்கள். எத்தனை வருஷங்களாக, எத்தனை தலைவர்கள், எத்தனை தடவைகள் இந்த கல்விமுறை மாற்றங்கள்பற்றிச் சொல்லிச் சொல்லி எங்களுக்குக் காது புளித்துப் போய்விட்டது தெரியுமா? இண்டர் என்றும் பி.யூ..ஸி.என்றும் பிளஸ் டூ என்றும் ஸெமஸ்டர் நான்ஸெமஸ்டர் என்றும் பெயர்தான் மாறுகிறதேயொழிய வாழ்க்கைக்கு உதவுகிற மாதிரியோ தன்னம்பிக்கையுடனும் நேர்மையுடனும் வாழ்க்கையை எதிர்நோக்குகிற மாதிரியோ ஒரு முன்னேற்றமும் காணோம். இப்போது புதிதாகக் கூரைக் கொட்டகை பாலிடெக்னிக்குகள், பெட்டிக் கடைகள் மாதிரி ஏராளமாகப் பரவி, 'எடு எழுபதாயிரம், எண்பதாயிரம் – இதோ ஸீட்!'' என்று சட்டதிட்டங்கள் இல்லாமல், பேராசிரியர்கள் இல்லாமல் கொள்ளையடிக்கின்றனர். கேபிடேஷன் தொகை வசூலிப்பது பற்றியும் உங்கள் மனசில் இருப்பதைத் தெளிவாகச் சொல்லிவிட்டால் நல்லது.

### வருமானவரி சீரமைப்பு

கம்பல்ஸரி டெபாஸிட் ஸ்கீமை ஒழிப்பேன் என்று சொல்லியிருக்கிறீர்கள். அதற்கு ஒரு தனி சபாஷ். மார்ச் மாசக் கடைசியில் மென்னியைப் பிடிக்கும் இந்தப் பிசாசுக்கு ஒரு முடிவு கட்டினீர்களானால் லட்சக்கணக்கானவர்கள் உங்களுக்கு நன்றி சொல்லுவார்கள். அப்புறம் வருமானவரி. இதையும்

---



றை சராசரி 200 பார்வையாளர்களை இவர்தான் கவனித்துக் கொள்ளுகிறார்.

**ரோமி சோப்ரா:**

முன்னாள் விளம்பரக் கம்பெனி அதிகாரி. தேர்தல் பிரசார உத்திகளை வகுப்பதில் ராஜீவுக்கு உதவியவர்.

**எம். எல். ஃபோட்டேதார்:**

காஷ்மீர அரசியல்வாதியாயிருந்தவர். ராஜீவ் காந்தியின் அமேதி தொகுதியில் அவரை அறிமுகப்படுத்தி, ஒரு பாராளுமன்ற உறுப்பினராக உருவாக்கியவர். இன்றும் ராஜீவின் முக்கிய ஆலோசகர்களில் ஒருவர்.

**வி. ஜியார்ஜ்:**

நெ 1. சப்தர்ஜங் சாலையிலுள்ள பிரதமரின் இல்லத்தில், சென்ற வருடத்திலிருந்து கம்ப்யூட்டரை நிர்வகிக்கும் வி. ஜியார்ஜ் கேரளாவைச் சேர்ந்தவர். 1981 தொட்டு ராஜீவின் உதவியாளராக இருந்து வருகிறார். இவருக்கு இன்னொரு பெயர் 'கம்ப்யூடர்ஜி'.

**பி. ஸி. அலெக்சாண்டர்:**

பிரதமரின் பிரதம தனிச் செயலர். இன்டெலிஜென்ஸ் ரிப்போர்ட் முதல் எரிசக்தி, அண்டவெளிஆராய்ச்சி, பாதுகாப்பு முதலிய விஷயங்களைக் கவனிப்பதோடு, காபினெட் மந்திரிகளுக்குப் பிரதமரின் கருத்துக்களைத் தெரிவிப்பவர். திறமைக்கு பெயர் போனவர். முன்னாள் பொருளாதாரப் பேராசிரியர்.

**ஆர். கே. தவான்:**

இந்திராவின் முக்கிய ஆலோசகர் குழுவில் இருந்தவர். ராஜீவின் உதவியாளராகவும் இருந்தார். இருந்தாலும் குழுவில் இப்போது யாரும் இவரைச் சிந்துவதே இல்லை. எனவே கழன்றுகொண்டு விட்டார், ராஜினாமா செய்து.

தொகுப்பு: சாருகேசி







○ மூப்பனார் அணிவித்த மாபெரும் மாலையுடன்...
போட்டோ: ராமநாதன்

சீரமைப்பேன் என்று சொல்லியிருக்கிறீர்கள். போன வருஷமே FICCI கூட்டத்தில், நம் வருமான வரி விதித் தொல்லையை எடுத்துக் கூறி அதைக் குறைக்க வேண்டும் என்றும் சொன்னீர்கள். பிரணாப் முகர்ஜி சிரித்துக் கொண்டிருப்பார் அன்று. இன்று? பிப்ரவரி வந்தால் தெரியும், சொன்னபடி செய்கிறீர்களா என்று!

## பொதுத்துறை நிறுவனங்கள்

ஆமாம், பொதுத்துறை நிறுவனங்கள் நவீனமாக்கப்பட வேண்டும், வளர்ச்சி அடைய வேண்டும் என்றெல்லாம் சொன்ன நீங்கள், அவை லாபமும் ஈட்ட வேண்டும் என்று ஏனோ ஓரிடத்திலும் சொல்லவில்லை. கோடிக்கணக்கான ரூபாய் முதலீடு செய்யப் பட்டிருக்கும் இந்தப் பொதுத் துறை நிறுவனங்கள், நியாயமான லாபம் காட்ட வேண்டாமா? பொதுத் துறை நிறுவனங்கள் என்றால் நஷ்டத்துறை நிறுவனங்களாகத் தான் இருக்க வேண்டுமா? அவை திறமையாக நிர்வகிக்கப்பட்டு, நிர்வாகிகளுக்கும் தொழிலாளர்களுக்கும் கடமைகள் உணர்த்தப்படவேண்டும் என்று குறிப்பிட்டிருக்கிறீர்கள். அந்த மட்டில் மகிழ்ச்சி. STC, எண்ணெய் சுத்திகரிப்பு ஆலைகள், ரெயில்வே, இவை ஈட்டும் லாபம் எல்லாம் திறமையால் வருவது என்று சொல்ல முடியாது. இவற்றுக்குப் போட்டி இல்லை என்பதோடு, அவை வைக்கிறது தான் விலை என்பது உங்களுக்குத் தெரிந்ததே!

## சாதாரணப் பிரஜைகள், சாதாரண குறைகள்

சாதாரணப் பிரஜைகளின் அன்றாடப் பிரச்னைகள் உங்கள் வரை எட்டாதவை. குழாயைத் திறந்தால் தண்ணீர், குண்டுகுழியில்லாத சாலை, எரியும் தெருவிளக்குகள் என்று கார்ப்பரேஷன், முனிசிபாலிடி, பஞ்சாயத்து அளவோடு நின்றுவிடுகின்றன. நகர்ப்புற அபிவிருத்திக்கு, மாநில அரசுகளுக்கு உதவ, தனியாக ஒரு நிதியமைப்பு உண்டாக்குவோம் என்று சொல்லியிருக்கிறீர்கள். இதைவிட, இவற்றுக்குத் தேர்தல் நடத்தி மக்கள் பிரதிநிதிகள் அவற்றில் செயல்பட நீங்கள் வழிசெய்தாலே போதும். பல குறைகள் அவர்களால் கவனிக்கப்பட்டு நீங்கும்.

## உங்களைச் சுற்றி

உங்கள் ஆலோசகர்கள் அருண் நேரு, அருண்சிங், ஃபோட்டேதார், ஜியார்ஜ் (கம்ப்யூட்டர்ஜி), சதீஷ் சர்மா, விஜய்தர், ஆஸ்கார் பெர்னாண்டஸ், தருண் – அடேயப்பா எத்தனை பேர் உங்களைச் சுற்றி, உங்களுக்குக் கீழே, உங்களுக்குப் பின்னால்... அருண் நேருவும், அருண்சிங்கும் பல விஷயங்களில் அவ்வளவாக ஒத்துப் போகாதவர்களாமே! அருண்நேரு சஞ்சய்யால் கொண்டு வரப்பட்டவர், அருண்சிங் நீங்கள் கொண்டு வந்தவர். அதனால்தானோ? எப்படியானால் என்ன? பிரச்னைகளில் நிபுணர்களைக் கலந்தாலோசித்த பின்னர் நீங்களாகச் சிந்தித்து **உங்கள்** முடிவுகளை எடுங்கள். இந்திய பைலட்டுகள் ஏர் பாக்கெட்டுகளைத் தவிர்ப்பதில் சாமர்த்தியசாலிகளாம். நீங்கள் இந்திய பைலட்டுகளில் ஒருவராய் இருந்த காரணத்தால், இப்போதும் தர்மசங்கடமான நிலைமைகளைச் சாமர்த்தியமாய்ச் சமாளிப்பீர்கள் என்று நம்புகிறேன்.

மக்கள் உங்களிடம் பெரும் நம்பிக்கை வைத்துப் பேராதரவை அளித்திருக்கிறார்கள். உங்களுக்கு இப்போதுள்ள பலத்தைக் கொண்டு நீங்கள் அற்புதங்களைச் சாதிக்க முடியும் அல்லது நம்மைத் தட்டிக் கேட்க ஆளில்லை என்ற செருக்கில் சர்வமும், மெத்தனமும் உங்களை ஆட்கொள்ளக் கூடும். இதை அனுமதிக்கமாட்டீர்கள் என்றே நம்புகிறேன். ''நாளைய தினம் எப்படி இருக்கும் என்பதை நாம்தான் இன்று நிர்ணயிக்கிறோம்'' என்று நீங்கள் கூறியிருப்பதால் அந்த நாளைய தினம் மகோந்நதமாக விளங்க வேண்டும் என்ற ஆசை உங்களுக்கு இருப்பதாகவே தோன்றுகிறது.

உங்களிடமும் சரி, உங்களைப் பதவியில் வைத்த மக்களிடமும் சரி, மந்திரம், மாயம் ஏதும் கிடையாது. கடின உழைப்புத்தான் தேசத்தை உயர்த்தும். எனவே முதலாவதாகக் காரிய சாத்தியமான ஒரு சாதனைச் சவாலை மக்கள் முன் வைத்து அவர்கள் ஒத்துழைப்பைக் கோருங்கள். நாட்டின் மேம்பாட்டுக்கு நாம் உதவுகிறோம் உழைக்கிறோம் என்ற பெருமிதத்தை ஒவ்வொரு குடிமகன் உள்ளத்திலும் உருவாக்குங்கள். இரண்டாவதாக நவீன சிந்தனையுடன், தொழில்வர்த்தக, பொருளாதாரக் கொள்கைகளை வகுத்துக் கொள்ளுங்கள். இந்த இரண்டும்தான் உங்களையும் என்னையும் நாட்டையும் உயர்த்தும்.

இப்படிக்கு,
**ஓர் இந்தியப் பிரஜை**

மேலட்டை வண்ணப்படம்: பால்ராஜ்




# கல்கி

1985 ஜனவரி 13

மலர் : 43 இதழ் : 24

ரக்தாக்ஷி மார்கழி 29




## மத்தியில் மதிப்பு; தமிழகத்தில் தவிப்பு!

சிறுபான்மை வோட்டு பெற்றுப் பெரும்பான்மை பலத்துடன் ஆட்சிக்கு வர முடியும் என்பது மீண்டும் ஒரு முறை நிரூபணமாகியுள்ளது. ஐம்பது சத வீதத்துக்கும் அதிகமான மக்கள் இந்திரா அனுதாப அலையையும் மீறி எதிர்க் கட்சிகளுக்கே வாக்களித்துள்ளனர். என்றாலும் 49 சத வோட்டுக்களே பெற்ற இ. காங்கிரஸ் 80 சத இடங்களை நாடாளுமன்றத்தில் கைப்பற்ற ராஜீவ் காந்தி பிரதமராகியுள்ளார். இந்த அபரிமித பலம் ஒரு பக்கம், எதிர்க்கட்சித் தலைவர்கள் பலர் (சினிமா மாயையால்) தோற்கடிக்கப்பட்டது மறு பக்கம் என்று இரண்டு அம்சங்களும் சேர்ந்து கர்வத்தை வளர்த்து விடுவது இயல்பு. ஆனால் ராஜீவ், ஆணவத்துக்குத் தாம் அடிமைப்பட்டு விட்டது போல் இன்று வரை காட்டிக் கொள்ளாததோடு எதிர்க்கட்சித் தலைவர்களை மதித்து நடந்து கொள்ளப் போவதாகவும் வெளிப்படையாகக் கூறியிருக்கிறார்.

இவற்றுக்காக மட்டுமின்றி இன்னும் சில காரணங்களுக்காகவும் நமது பாராட்டுகளுக்கு உரியவராகிறார் ராஜீவ். பிரணாப்முகர்ஜி, கானிகான் சௌத்ரி போன்ற சிலரைப் புதிய அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ளாமல் நழுவ விட்டதிலும் ஆர். கே. தவானின் ராஜினாமாவை ஏற்றுக் கொண்டதிலும் தமக்குச் சுதந்திரமான சிந்தனை உண்டு என்று காண்பித்துக் கொண்டிருக்கிறார். அருண்நேருவை முழு அதிகார பலமுள்ள அமைச்சராக்காமல் சங்கரானந்துக்குப் பதில் கூறும் நிலையில் வைத்ததன் மூலம் தம்மை யாரும் பாக்கெட்டுக்குள் போட்டுக் கொண்டுவிட முடியாது என்று உணர்த்தி இருக்கிறார். ''அமைச்சர்களின் செயலாற்றல் அடிக்கடி கவனிப்புக்கும், அலசலுக்கும் உள்ளாகும்'' என்று 'கடுக்காய்' கொடுத்ததன் மூலம் மக்கள் தம்மிடம் அதிகமாக எதிர்பார்ப்பதை உணர்ந்து அவர்களுக்கு ஏமாற்றமளிக்காமல் செயலாற்ற உறுதி பூண்டிருப்பதைத் தெளிவாக்கியுள்ளார். ஆகமொத்தம் சதா மலர்ந்திருக்கும் புன்சிரிப்புக்குப் பின்னால் ஒரு நிச்சய புத்தி இருப்பதைக் காட்டிக் கொண்டிருக்கிறார் ராஜீவ்.

இதற்கு மறுபுறமாகப் பழைய பெருச்சாளிகள் பலரே அமைச்சரவையில் இடம் பெற்றிருப்பதும் புதுமுகங்களைக் காணாததும் ஏமாற்றமளிக்கிறது. ஏகப்பட்ட முக்கிய இலாகாக்களை (13) ராஜீவ் தம் பொறுப்பிலேயே வைத்துக் கொண்டிருப்பது கவலை தருகிறது. அபரிமித வேலைச் சுமை என்பது ஒருபுறமிருக்கத் தாமதங்கள் தவிர்க்க முடியாததாகி விடும்; பிரதமரை அவரது காரியாலய அறையிலேயே கட்டிப் போட்டு வைப்பதாகி விடும். விரைவிலேயே புதியவர்கள் அமைச்சரவையில் இடம் பெற்று, பிரதமரின் வேலைச் சுமை குறையும் என்று எதிர்பார்ப்போம்.

தமிழகத்தைப் பொறுத்தமட்டில் இன்று (4.1.85) வரை ஒரே குழப்பம்தான். தலைக்குத் தலை யோசனை கூறி வருகின்றனர். அடிப்படைக் கோளாறு என்னவெனில், எம். ஜி. ஆர். என்ற ஒரு மாபெரும் சக்தியை ஒரு விநாடி ஒதுக்கிவிட்டுப் பார்த்தால், கட்சியில் மற்ற அனைவரிடமும் சுய முக்கியத்துவப் போட்டி நிலவுகிறது என்பதுதான். எனவே இவர்கள் ஒருவேளை எம். ஜி. ஆர். ஆசியுடன் அவர் இன்றியே அமைச்சரவை அமைக்கத் துணிந்தாலும் 'டீம் ஸ்பிரிட்'டுடன் ஒத்துழைத்து ஒற்றுமையாய்ச் செயல்படுவார்களா என்பது சந்தேகமே. ஆக, எம். ஜி. ஆர். சீக்கிரம் பூரண குணமடையப் பிரார்த்திப்பது தவிர நமக்கு வேறு கதியே இல்லை!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

# 1

அரவிந்தனுக்குக் கடந்த பலமாதங்களாக ஓர் ஆசை. இந்த ஆசை சென்ற வருடம் இதே ஜனவரியில் பிறந்திருக்கவில்லை. காரணம், வசுமதியுடன் ஏற்பட்டிருந்த பரிச்சயம், வெறும் பரிச்சயமாக மட்டுமே இருந்தது. அதன்பின் அது, அடிக்கடி நேர்ந்த தவிர்க்க முடியாத சந்திப்புகளினுல் நட்பாக மூண்டது. இறுக்கமான சிநேகிதமாக வளர்ந்து கடைசியில் பசுமையான காதலாகத் தழைத்துவிட்டது. தன் காதல் இப்படிப்பட்ட, அப்படிப்பட்ட காதலாக அவனுக்குத் தோன்றவில்லை. 'உயிரைவிடு' என்று வசுமதி நா அசைத்தால் அக்கணமே காதலை நிரூபிக்கவல்ல காதல் அவனிடம் ஏற்பட்டுள்ள காதல். அவளும் அவனைப் போலவேதான் அவன் மீது உண்டாயிருக்கும் உணர்ச்சிகளின் பரிமாணங்களை அளக்கிருள் என்று அரவிந்தன் எண்ணினுன்.

இருபத்தேழு வயதில் இப்படி ஒரு திருப்பம் உண்டாகும் என்று அவன் இருபத்தாறு நடக்கும்போது கனவிலும் எதிர்பார்க்கவில்லை. சினிமா, நாடகம், கதை, தொடர் கதைகளில் வரும் காதல் கட்டங்களெல்லாம் வெறும் பித்தலாட்டம் என்று முடிவு செய்திருந்த அவன், அன்பும் நேசமும் தாம் பத்தியத்திலிருந்துதான் பூக்க முடியும் என்று உறுதியான கருத்துக்குத் தன்னை ஆளாக்கிக் கொண்டிருந்தான். அதுதான் முறை என்றும் எண்ணியிருந்தான். 'நீ ஒரு முட்டாள்; உன் எண்ணமெல்லாம் தப்பு' என்று முகத்தில் அடித்துக் கூறுவதுபோல வசுமதி தோன்றி அவனை ஒரு கலக்குக் கலக்கினுள்.

அந்த வசுமதிக்கு, அவனுடைய ஜனவரி பத்தாம் தேதி பிறந்த நாளை முன்னிட்டு ஓர் அழகிய பரிசு கொடுக்க வேண்டும் என்று அவன் ஆசைப்பட்டான்.

அவனுடைய ஆசை நிறைவேறவேண்டிய அந்த ஜனவரி பத்து அன்று பிறந்தது. முந்தின நாளே வசுமதி அவனை இரவு விருந்துக்கு அழைத்திருந்தாள். பெற்றோர்களையும் சகோதர சகோதரிகளையும் தவிர வீட்டில் யாரும் இருக்கமாட்டார்கள் என்று உறுதி அளித்து உற்சாகமூட்டினுள். இதுவரை விரலால் எண்ணக்கூடிய அளவுக்கே அரவிந்தன் வசுமதியின் வீட்டுக்குச் சென்றிருக்கிருன். இந்திரா நகரில், இரண்டாவது மாடியில் இரு அறைகள் கொண்ட ஒரு பெட்டி. ஒருதடவைகூட ஒரேசமயத்தில் குடும்பத்தை முழுமையாக அரவிந்தன் பார்த்ததில்லை. அம்மா கோயிலுக்குச் சென்றிருந்தாள். அப்பா ஒற்றைத் தலைவலியைச் செல்லமாகக் கடிந்து கொண்டு பால்கனிச் சுவரில் சாய்ந்திருப்பார். இரண்டு அக்காக்களில் ஒருத்திக்கு டெலிபோன் எக்ஸ்சேஞ்சில் 'நைட் டியூடி' இருக்கும். இன்னொருத்தி வீட்டில் கட்டிக் கொண்டிருக்கும் புடவையின் லட்சணத்தைத் தன் தங்கையின் வருங்காலக் கணவன் பார்த்துச் சிரிக்கக் கூடாது என்று சமையல் அறையிலேயே ஒளிந்து கொள்ளுவாள். ஒரு தங்கைக்குக் கல்லூரியில் ஒரு விசேஷம். ஒரு தம்பி கிரிக்கெட்டிலிருந்து இன்னும் திரும்பாமலிருக்க இன்னொருவன், தான் பிறந்த ஜாதியின் காரணத்தால் சராசரி தொண்ணூற்று ஆறு வாங்கியும் என்ஜினியரிங் படிப்புக்கு லாயக்கில்லாதவனுகி, மாலை நேரக் கல்லூரியில் பெருமூச்சு விட்டுக் கொண்டிருந்தான்.

இன்று இரவு எல்லோரும் இருப்பார்கள். அரவிந்தனுக்காகவே குடும்ப ரேஷன் கார்டிலுள்ள அத்தனை பேரும் கூடுவார்கள். இதற்கு வசுமதி உத்தரவாதம் அளித்தாள்.

அரவிந்தன் உள்ளூற மனத்தால் சிரித்துக் கொண்டே, ஃபைல்களைப் புரட்டினுன். மணி மூன்று அடித்துவிட்டது. உயர் பதவி ஆபீசர்களுக்கு வரும் உயர்தர பிஸ்கட்டும் உயர்தர டீயும் வந்து காலியாகிவிட்டன. அவனுடைய அலுவலக என்ஜினீயரிங் பிரிவில் இரண்டு உதவியாளர்களும், மூன்ருவது மாடியில் இளை மானேஜர் அறையில் சக்கரவர்த்தி போல் கம்பீரமாக உட்கார்ந்திருக்கும் கம்பெனி சேர்மனைத் (அவர் நாளைக் காலை விமானத்தில் டெல்லிக்கு நகர்கிருர்) திருப்தி செய்ய அல்லது வசை வாங்கிக் கொள்ளச் சில முக்கியமான புள்ளி விவரங்களைத் தயார் செய்து கொண்டிருக்கிருர்கள். இளை மானேஜர் ஆராமுதன் தாசனும், தாசானுதாசனும், ராமானுஜ தாசனும், கூனிக் குறுகி கைகட்டி வாய் புதைத்து, செங்கோல் முன் நின்று கொண்டிருக்கிருர். பம்பாயிலிருக்கும் சேர்மன் அடிக்கடி அநாவசியமாகச் சென்னைக்கு வரமாட்டார். சென்னை என்ருலே கரப்பு, எட்டுக்கால் பூச்சி மாதிரி. கோடைக்கு ஊட்டி போகும் வழியில் தலை காட்டுவார். பூர்வீகமான சொந்த ஊரில் ஐப்பசி மாதம் பத்து நாள் உற்சவம் நடக்கும். கடந்த எட்டு ஆண்டுகளாக கிராமத்து உற்சவம் அவரைத்தான் நம்பியிருக்கிறது. போகும் போதோ வரும்போதோ சென்னைக் கிளையை, போனுல் போகிறது என்று எட்டிப் பார்ப்பார்.

ஆனுல் இந்த ஜனவரி பத்து விஜயம் யாரும் எதிர்பாராத விஜயம். சென்னை வழியாக எந்தத் தென்னுட்டு ஊரை சேர்மன் அருள்பாலிக்கச் செல்லுகிருர் என்று யாருக்கும் தெரியவில்லை. அரவிந்தனும் கவலைப்படவில்லை. இந்தச் சேர்மன், — இன்றைக்குக் கம்பெனியையே தம் சுண்டு விரல் நுனியில் வைத்துச் சக்கராயுதமாகச் சுழற்றுகிறவர் — ஒரு தடவைகூட பழைய நாட்களை எண்ணிப் பார்த்து அவனைத் தம் அறைக்கு அழைக்கவில்லை. அரவிந்தனுக்கு அவர் மீது கோபமோ எரிச்சலோ உண்டாகவில்லை. ஒரு சின்ன தாபம் மட்டுமே எழுந்தது. ஆனுல் அதே சமயத்தில் அவருடைய பதவியையும் இருக்

பி.வி.ஆர்

கும் நிலையையும் நினைத்துப் பார்த்தான். அரவிந்தன் கம்பெனியின் சேர்மனாக இருந்தாலும் அவன், இந்தச் சேர்மன் இன்று இருப்பது போலத்தான் இருப்பான். தாபத்துக்கிடையே அதீதமான நன்றிப் பெருக்கு அவனுள் பீறிட்டது; அவர் இல்லை என்றால் அவன் எங்கே? அப்பாவின் சடலத்தின் மீது அம்மா விழுந்து மூர்ச்சையாகியிருக்கிறாள். அவனும் அண்ணா ரகுவும் என்ன செய்வது என்று அறியாது சுற்றிச்சுற்றி வருகிறார்கள். திடீரென்று ஒரு கார் வந்து நிற்கிறது. உயரமாய், கம்பீரமாய் ஒரு உருவம் ராஜ நடை போட்டு வருகிறது.

'' என்னடா, ரகு, இன்னும் யாரும் வரலையா ?''

''சாஸ்திரிகள் குளிகன் முடிஞ்சதும் எடுக்கலாம்னார்.''

''இந்தா '' ஒரு கவரை ரகுவின் கையில் திணிக்கிறார். 'எங்கே அந்து?' ரகு கைகாட்டுகிறான். அரவிந்தன் அசையாமல் நிற்கிறான். அவர் அவன் அருகே வருகிறார். கன்னத்தைத் தடவுகிறார். தலையை வருடுகிறார். தோளைத் தொடுகிறார்.

''இப்ப என்ன பண்ணிண்டிருக்கே?''

''ஐஐடி என்ட்ரன்ஸ் எழுதியிருக்கேன்.''

''ஆல் இண்டியாவிலே ப்ளஸ் டு விலே நீ செகண்ட் இல்லியோ ?''

அரவிந்தன் தலை அசைக்கிறான்.

''ரங்கன் எழுதியிருந்தான். ஐஐடி. எப்படி எழுதியிருக்கே?''

'' தெரியலே !''

''லிஸ்ட்லே பேர் வருமா?''

''தெரியலே.''

''பேர் வந்ததும் எனக்கு எழுது.''

''சரி.''

''கோமளியும் மாயாவும் என்னோட வர்றதாக இருந்தது.''

''.................''

''ஆனா வரமுடியாமப் போயிடுத்து.... அம்மாட்டே சொல்லு.''

அரவிந்தன் தலை ஆட்டுகிறான்.

அவர் நிற்கிறார். அவனுடைய தந்தையின் முகத்தையே பார்க்கிறார். கண்கள் கனத்து, நீர் கட்டி நிற்கிறது. பதவியும் கௌரவமும் இரு கண்ணீர்த்துளிகளையும் அணைகளாக்கி விடுகின்றன. அவரிடமிருந்து ஒரே ஒரு வார்த்தைதான் — அவருடைய உள்ளத்துப் பிரதிபலிப்பாக, நட்பின் இலக்கணமாக, அன்பின் சின்னமாக — வெளி வருகிறது.

'' ரங்கா !''

அரவிந்தனுடைய கண்களில் இப்போது நீர் முட்டுகிறது அப்பா, அம்மா இருவரையும் நினைக்கும்போதெல்லாம், உடல் சிலிர்க்கிறது. நரம்புகளெல்லாம் துவண்டுபோகின்றன. கண் குளமாகிறது. அன்று 'ரங்கா!' என்று ஒரே வார்த்தையில் தம் துக்கத்தை முழக்கிய சேர்மன் அவனை ஒரு தடவைகூட குசலம் விசாரிக்க அழைத்ததில்லை. அதனால் என்ன? நேரடியாக அழைத்து, 'என்னடா அந்து, எப்படி இருக்கே?' என்று விசாரித்தால் எல்லாம் ஆகிவிட்டதா? அவர்தான் மறைவில் நின்று சொன்னபடி அவனை எங்கேயோ கொண்டுபோய் நிறுத்திவிட்டாரே?

ஐ ஐ டி என்ட்ரன்ஸ் பரீட்சை முடிவுகள் வெளியாகின. அகில இந்திய அடிப்படையில் ஏழாவது இடம். அவன் அவருக்கு, அவர் கேட்டுக் கொண்டபடி கடிதம் எழுதினான். ஆனால் அதைத் தபாலில் சேர்த்துவிட்டுத் திரும்பி வந்தபோது அவருடைய பாராட்டுத் தந்தி காத்திருந்தது.

ஐந்து ஆண்டுகளுக்கு அவன் எதைப் பற்றியும் கவலைப்படவில்லை. ரகு மெரைன் என்ஜினீயரிங் படித்துவிட்டு, பூகோளத்தில் கண்டும் கேட்டுமிராத துறைமுகங்களுக்கெல்லாம் போய்க் கொண்டிருக்கிறான். அம்மா போன போது அவன் அர்ஜென்டைனாவில் தன் மாமியார் வீட்டில், அவனுடைய பேத்தியைக் கொஞ்சிக்கொண்டிருந்தான். ஐஐடியில் கங்கா, காவேரி, சரஸ்வதி என்று ஹாஸ்டல்களில் அரவிந்தன் புத்தகங்களோடு உறைந்து போனான்.

பி டெக். ராங்க் மூன்று.

கம்பெனியிலிருந்து சேர்மன், தம் கைப்பட எழுதிய கடிதமும் உத்தியோக நியமன ஆர்டரும் வந்தன.

சென்னைக் கிளையில் என்ஜினியர். ஆறாவது மாதமே அமெரிக்கா. சேர்மன் தாமாகப் பார்த்துத் தேர்ந்து எடுத்திருக்கிறார். இரண்டு ஆண்டுகள். திரும்பி வந்தபோது வயது இருபத்து மூன்று. ஆனால் சென்னைக் கிளையில்

# உங்கள் சாப்பாட்டில் எங்கள் சமையல் காஸின் சிறியதொரு பங்கு!

1984-85-இல் பெட்ரோல் மற்றும் மண்ணெண்ணெய் உற்பத்தியை இரு மடங்கு அதிகரிக்கிறோம்.

1984-85-இல் மிகப் பெரிய விஸ்தரிப்பைச் செய்யப்போகிறோம்.

உற்பத்தி அளவை இரு மடங்காகப் பெருக்கப் போகிறோம். அதாவது குருட் ஆயில் உற்பத்தி ஆண்டிற்கு 2.8 மில்லியன் டன்களிலிருந்து 5.6 மில்லியன் டன்களாக உயர்த்தப்படும்.

இதனால், இப்பொழுதிலிருந்து ஒரு வருடத்தில் நாங்கள் மூன்று மடங்கு சமையல் காஸும், இரண்டு மடங்கு மண்ணெண்ணெயும், மசகும் உற்பத்தி செய்வோம்.

எம்ஆர்எல்லின் விஸ்தரிப்புத் திட்டத்தில் பாரபின் மெழுகின் பல ரகங்களை 20,000 டன்கள் வரை தயாரிப்பதற்கான ஒரு புதிய ஆலையும் அடங்கும்.

மெழுகினை உபயோகிக்கும் தமிழ்நாட்டிலுள்ள பலவிதத் தொழில்களுக்கு இது உதவியாக இருக்கும். இது நல்லதொரு செய்தி இல்லையா?

ஆம். ஆரம்பம் முதலே நம் நாட்டின் வளமைக்கு பல நல்ல செய்திகளை அளிப்பது எம்ஆர்எல்லின் வழக்கமாகி விட்டது.

- 1969-இல் 36% குறைந்தபட்ச அந்நிய நாட்டுப் பொருட்களுடன், 27 மாத குறுகிய காலத்தில் ஆலை கட்டி முடிக்கப்பட்டது.
- துவங்கியதிலிருந்து இரண்டாம் ஆண்டிலேயே லாபம்.
- இந்தியாவிலுள்ள சுத்திகரிப்பு ஆலைகளிலேயே உற்பத்திக்கான, குறைந்த அளவு அன்றாடச் செலவுகள்.
- பெரும் விபத்து எதுவுமில்லாமல் 6 மில்லியன் மணி நேரங்கள் அயராத உழைப்பு. இது ஒரு தேசியச் சாதனை. பொறுப்பு மிக்க ஊழியர்களின் முயற்சிக்கு இது ஒரு பரிசு.
- இதனுடைய 15 வருட இயக்கத்தில் இழந்த நாட்களோ ஒரு நாளைக்கும் குறைவு.

கடந்த ஆண்டுகளில் மதராஸ் ரிஃபைனரீஸ் லிமிடெட் உற்பத்தித் திறன் மற்றும் திறனிற்காக ஒரு புதிய நிலையை உருவாக்கி வந்துள்ளது.

இந்த நிலையை நீடிப்பதற்கு நாங்கள் உறுதி பூண்டுள்ளோம்.

எங்கள் அனுபவம் கற்றுத்தந்த பாடம்—செய்து முடிக்கவேண்டும் என்ற உறுதி இருந்தால் பலன் நிச்சயமாகத் தொடரும் என்பதே.



மதராஸ் ரிஃபைனரீஸ் லிமிடெட்




(ஒரு இந்திய அரசு நிறுவனம்)
மணலி, சென்னை.

SAA/MRL/2238

ப்ரதம என்ஜினியர். மூவாயிரம், கார், வீடு, டெலிபோன், ஏர்கண்டிஷன் ரூம், ஃப்ரிஜ். அவனுடன் படித்தவர்கள் பஸ்ஸில் போகிறார்கள். வாடகைக்கு எங்க நல்ல வீடு கிடைக்கும் என்று தேடுகிறார்கள்!

அரவிந்தனுடைய உள்ளம் இப்போது நன்றி உணர்ச்சியில் நெகிழ்ந்தது. இந்தச் சிறிய வயதில் இந்த உயரத்துக்கு அவன் வளர யார் காரணம்? தெய்வம் நேரில் வந்து வரம் வேண்டுமானாலும் அளிக்கலாம். ஆனால் அது மறைந்து நின்று செய்யும் அருள் அல்லவா மேன்மையானது?

திடீரென்று கோமளியின் நினைவு வந்தது. சேர்மனுடைய மனைவி, போன வருடம் ப்ரெஸ்ட் கான்சரில் ஸ்விட்ஜர்லாண்டில் போனாள். அவன் சேர்மனுக்கு அனுதாபக் கடிதம்கூட எழுதிப் போட்டிருந்தான். அச்சடித்த பதில் மட்டுமே வந்தது. கோமளியும் அவனுடைய அம்மாவும் மயிலும் தோகையும் மாதிரி. சின்ன வயதில், கோமளியின் உப்பின சிவந்த கன்னங்களைத் தொட்டுப் பார்ப்பதிலும் கிள்ளிப் பார்ப்பதிலும் அரவிந்தனுக்கு ஒரு தனி ஆனந்தம். என்ன மிருதுவான வழுவழுப்பான கன்னங்கள். அவனுடைய அம்மாவுக்கு ஏன் அப்படி இல்லை? இருந்தால் நாள் பூரா அம்மாவின் கன்னத்தை அவன் விடமாட்டானே?

பாவம் கோமளி! சிரிக்கச் சிரிக்கப் பேசுவாள். சின்ன வயதில் பெண் மாயாவை இடுப்பில் வைத்துக் கொண்டுவரும்போதெல்லாம், இரண்டு வயதுக் குழந்தையை வாரி எடுத்துக் கொள்ள எட்டு வயதுப் பிள்ளை ஓடோடி வரும்போது, ''ஏண்டா ராஸ்கல், இப்பவே அவசரப்படறே? இவ உனக்குத்தான். பயப்படாதே!'' என்பாள் அவள்.

திடீரென்று பல ஆண்டுகளாக அரவிந்தன் பார்த்திராத மாயாவின் உருவம் தோன்றியது. அவன் கடைசியாக அவளைப் பார்த்தபோது அவளுக்கு எட்டு வயது. அம்மாவை மாதிரி சிகப்பு. தாடையில் ஒரு அழகான குழி. அதைப் பார்க்கிறபோதெல்லாம் பல்லாங்குழியின் நினைவு வரும்.

ஒரு தடவை, இரண்டு குடும்பங்களும் ஊட்டிக்குச் சென்றன. அப்பா அவனுக்கும் ரகுவுக்கும் ஸ்வெட்டர் வாங்கவில்லை. ஒரு நாள் கூத்துக்கு மீசையை மழிப்பதில் அவருக்கு நம்பிக்கை இல்லை. கோடையிலும் திமர் திமர் என்று குளிர் தாக்கும் என்று அப்பாவுக்குத் தெரியாதோ, இல்லை தெரிந்தும் குழந்தைகள் ஊட்டி குளிர் என்றால் என்ன என்று தெரிந்து கொள்ளட்டும் என்று பேசாமல் இருந்தாரோ? இன்று வரை அரவிந்தனுக்குத் தெரியாது. ஆனால் கோமளியும், மாயாவின் அப்பாவும் சும்மா இருக்கவில்லை. அப்பாவை ஆயிரம் மடையனாக்கி இரண்டு ஸ்வெட்டர்கள் வாங்கிக் கொடுத்தார்.

அவனுக்கு சாக்லேட் நிற ஸ்வெட்டர்.

ரகு ஊதாவில் மோகம் கொண்டான்.

ஏரியில், படகில் சென்றார்கள். சிரிப்பு, களிப்பு, பாப்கார்ன், ப்ளம்ஸ், போட்டோ. அவர்கள் கார்டன்ஸில் ஓடிப் பிடித்து விளையாடுகையில், அம்மா தன் முழங்காலுக்குத் தைலம் வாங்கிக் கொள்ளச் சென்றாள். கோமளி, பம்பாய் நகரம் முழுதுமே நெடியில் தவிக்க வேண்டும் என்று கற்பூரத் தைலம் வாங்கி வந்தாள்.

கோவை திரும்புகையில் —

கற்பூரத் தைலம் மணத்தது.

பதினாறு வயது அரவிந்தன் காணாததோர் உலகத்தைக் கண்டு வென்று விட்டதாகப் பூரித்துப் போனான். சென்னையில் அக்னி நட்சத்திரத்திலும் ஸ்வெட்டரை விடக் கூடாது என்று தீர்மானம் செய்தான்.

அம்மாவின் மடியில் தலையும் அப்பாவின் மடியில் காலுமாகப் போட்டுக் கொண்ட எட்டு வயது மாயா உலகையே மறந்து தூங்கிக் கொண்டிருந்தாள்.

இப்போது பழைய நினைவுகள் இன்ப நினைவுகளாக மலர்ந்தபோது, மாயாவைப் பார்க்க வேண்டும் போலத் தோன்றியது. ரகுவும் அவனுமாகத் தேன் நிலவுக்கு எங்கே சென்றாலும் ஒரு நடை பாம்பே போக வேண்டும்.

சீ, என்ன பைத்தியக்காரத்தனம்?.... சேர்மனே அவனுடைய திருமணத்துக்கு வருவார். கூடவே மாயாவும் வருவாள். அல்லது அவனுடைய கல்யாணம் முன்னதாக நடந்தால், அவன் அது எங்கு நடந்தாலும் கலந்து கொள்வான்.

அரவிந்தனுடைய இன்ப மயக்கம் திடீரென்று தடம் புரண்டு விழுந்தது.

இணை மானேஜர் ஆராமுதன் பதறிக் கொண்டு அவன் முன் நின்றார்.

'' என்னப்பா, அரவிந்தா... என்னமோ நடந்துட்டுது... என்னன்னு அவர் வாய் வார்த்தையா சொல்லலே... என்ன தப்பு, என்ன விபரீதம்னு என்னாலே ஊகிக்கவும் முடியலே... ஆனா பூகம்பம் வெடிக்கப் போகிறது.... நீ ஏதானும் தப்பா டிராயிங்கோ எஸ்டிமேட்டோ பிளானோ போட்டு அனுப்பிச்சயா?''

அரை மயக்கத்திலிருந்து விழித்த அரவிந்தன், ஆராமுதனை ஏற இறங்கப் பார்த்தான்.

''என்ன சார், சொல்றீங்க?''

''ஆபத்து... ஆபத்து...''

'' என்ன சார், உல்ஃப் உல்ஃப்னு ஒல

''என்ன மாப்பிள்ளை, தீபாவளிக்கே வர்றதா சொல்லியிருந்தீங்க, பொங்கலுக்கு வந்து சேர்ந்திருக்கீங்க...?''

''அதனாலென்ன மாமா...! தீபாவளி வரைக்கும் இருந்துட்டே போறேன்..!''

ஆர். அரிகோபி



மிடறேன். என்ன ஆபத்து. யாருக்கு ஆபத்து...?''

''எல்லார்க்கும்... எனக்கு... உனக்கு... எல்லார்க்கும்... இந்தவாட்டி என்னை நிச்சயமா கான்பூருக்குத் தூக்கிடுவார்.. மெட்ராஸ் மார்கழியே தாங்க முடியலே...... கான்பூர்லே என்ன செய்வேன்?பொண்ணு வேறே பிரசவத்துக்கு வர்ரு !''

'' அவனுக்குக்கூட இப்படி வலி எடுக்காது சார்... கொஞ்சம் அமைதியா உக்கார்ந்து நிதானமா விஷயத்துக்கு வாங்கோ !''

'' என்னுலே ஒக்காரமுடியலே...மனுஷன் சரமாரியா பொரிஞ்சு தள்ளுன். ஆன்னுவல் பட்ஜெட்லே எனக்குத் தெரியாத தப்பை எல்லாம் மூஞ்சியிலே அடிச்சுக் காட்ருன்...''

''எனக்கும் நீங்க போட்ட பட்ஜெட்டுக்கும் சம்பந்தமில்லே, மிஸ்டர் ஆராமுதன்...''

''தெரியும்... நீ என்ஜினீயர்... நான் அகௌண்ட்ஸ்... ஆனு... அவர் நியர்னு. ஹோஸூர் பிராஜக்டைப் பத்தி ஆரம்பிச்சார். அது உன் ஃபைல்...''

'' அதுக்கென்ன...ஹெட் ஆபீஸ்லேர்ந்து ஸாங்க்ஷன்தான் ஆயாச்சே ?''

'' ரிவ்யூ பண்ணியிருக்கார் போலிருக்கு.''

'' என்ன சொன்னுர் ?''

'' எங்கிட்டே ஒண்ணும் சொல்லலே!''

''பின் ஏன் அவர் நீர் ?''

''அந்தப் பிராஜக்ட்லேயும் அகௌண்ட்ஸ் வர்றது....''

''அதுக்கு நான் என்ன செய்யவேணும்?''

''தெரியலே அரவிந்தா. தெரியலே.... இன்னும் இரண்டு வர்ஷம்... நல்லபடியா கிராடியுட்டியும் பிராவிடண்ட் ஃபண்டும் வாங்கினுத்தான் வீட்டுக் கடனையும் கல்யாணக் கடனையும் தீர்க்க முடியும்... இப்ப நான் என்ன செய்வேன் !''

'' நீங்க அனுவசியமா உங்க மானசிக பயத்திலே பதர்றீங்க! என்னையும் டென்டர்ப் பண்றீங்க...''

''இப்ப என்ன டயம்?''

''உங்க கையிலேதான் கடிகாரம் இருக்கே. மூணே முக்கால்...''

''அவர் இன்னும் ஹோஸூர் ஃபைல்லே மூழ்கியிருக்கார்.... எர்த்க்வேக் வரப் போறது....''

''வர்றப்ப பார்த்துப்போம். நீங்க உங்க ரூமுக்குப் போங்க...''

'' இதையேதான் அவரும் சொன்னுர். நீயும் சொல்றே !''

அரவிந்தன் ஏதோ ஒரு ஃபைலைப் புரட்ட எடுத்தான்.

'' நாலேகால் மணிக்கு...''

'' நாலேகால் மணிக்கு ?''

''உங்களை வரச் சொன்னுர்.''

'' என்னையா ?''

''உம்பேர்தானே – அரவிந்தன்? சீஃப் பிளானிங் என்ஜினீயர் ?''

'' சரி, போறேன்.''

'' ஜாக்கிரதை.''

'' எனக்கு என்ன பயம்?''

'' யார் கண்டா... பூனு என்ஜினீயர் கதி தெரியுமில்லியா?''

''நீங்க என்னைப் பத்திக் கவலைப்படாதீங்க. ஆராமுதன் !''

'' ஜாக்கிரதை, ஜாக்கிரதை... நீ கெட்டிக்காரன்தான்.... வேலையிலே சூரன்தான்... ஆனு சேர்மன் உன்னையும் மிஞ்சினவர். அமெரிக்கன் கொலாபரேஷன், ஜெர்மன் கொலாபரேஷன்னு கொடி கட்டி ஜெயிச்சு வந்தவர்... மாடர்ன் சோழன், பாண்டியன்! ஆமாம், பாண்டியனும் சோழன் மாதிரி சமுத்திரத்திலே போய்த் திரும்பி வந்தானு?''

'' நான் என்ஜினீயர்... ஹிஸ்டரியிலே ரொம்ப வீக்...''

'' நாலு அடிக்கப் போறது...''

'' நாலேகாலுக்குத்தானே ?''

'' எனக்குப் பயமாயிருக்கு... உன் டயம் சரியில்லையோன்னு படறது...''

'' எச் எம் டி ... ஆட்டோமாடிக்... டேடேட்...''

'' அதெல்லாம் சரியாத்தான் இருக்கும். ஆனு உன் டயம் சரியாயிருக்கணுமே... செவ்வாய்க்கிழமை... மூணு நாலரை ராகு காலம்... நாலேகால்ங்கறுர்....''

'' போற ராகு காலம் நல்லதுன்னு நீங்களே சொல்லுவீர்களே, ஆராமுதன் ?''

'' ஆனு இது போற ராகு காலமில்லியே... ராகு காலமே அவர்தான்...''

அரவிந்தன் சிரித்தான்.

எழுந்தான்.

டையைச் சரிசெய்து கொண்டான். அரும்பு மீசையைத் தடவிப் பார்த்துக் கொண்டான்.

பத்பல மாதங்களுக்குப் பிறகு அவனுக்கு சேர்மனுடைய தரிசனம் கிடைக்கிறது. யார் அவனை இந்த நிலைக்கு உயர்த்தியிருக்கிருரோ அவர் அவனை அழைக்கிருர்.

வேலையைப் பாராட்டினுல் சந்தோஷம். குற்றம் குறைகளை எடுத்துக் காட்டி, கண்டித்து எச்சரித்தாலும் ஏற்றுக் கொள்ளுவான். அவனுடைய தலையில் குட்டினுல்தான் என்ன? குட்டும் விரலில் வெறும் தங்க மோதிரமா இருக்கிறது? நவரத்னம் அல்லவா?

மோதிரம் என்ற எண்ணம் தோன்றிய அக்கணமே, வசுமதியின் நினைவும் வந்தது. அவள் இப்போது ஹைகோர்ட்டிலிருந்து தன் சீனியர் கேஜிகேயுடன் அவருடைய காரில் திரும்பி வந்து கொண்டிருப்பாள்.

என்ஜினீயர் – லாயர் !

என்ன பொருத்தம் !

சிரமத்துடன் வசுவை மறந்து, அவன் சேர்மனுடைய அறைக்குள், அவருடைய முன் அனுமதியை செக்ரடரி மூலம் பெற்றுப் பிரவேசித்தான்.

● ● ●

அன்று இரவு நீண்டநேரம் அரவிந்தனுடைய வருகைக்காகக் காத்திருந்த வசுமதி, கோபமும், தாபமுமாய், எரிச்சலும் கவலையுமாய், வயிறு ஏங்கியும் அதை உதாசீனம் செய்து படுக்கையில் விழுந்தாள்.

அரவிந்தனுக்கு என்ன நேர்ந்துவிட்டது ? வீட்டுக்கு எட்டு மணி அளவில் போன் செய்த போது டெலிபோன் மணி அடித்துக் கொண்டே பதில் சொல்லியது. எட்டரை, ஒன்பது. விரலால் கேட்ட கேள்விக்கு வெறும் ஒலியாகப் பதில் வர, வசுமதி சோர்ந்து போனுள். அன்று இரவு அவள் தூங்கவில்லை.

(தொடரும்)





SAMARIAS






**அஞ்சலி**

# விவசாயிகளுக்காக வாழ்ந்தவர்



நம்முடைய நிலத்திற்குத் தண்ணீர் வசதி இல்லாததால் கூட்டுறவு வங்கியிடம் 60 ஆயிரம் ரூபாய் கடன் வாங்கி ஆழ்கிணறு தோண்டினார் நாராயணசாமி நாயுடு. ஆனால் அவருடைய துரதிருஷ்டம், கிணறு முற்றுப் பெறும் தருவாயில் இடிந்து விழுந்து விட்டது. கலங்கிவிட்டார் நாயுடு. கடன் வாங்கிய பணத்தை எப்படிக்கட்டுவது ஓரளவு வசதியாக இருக்கும் தமக்கே இந்த நிலை என்றால், ஏழைமை நிலையில் இருக்கும் லட்சக் கணக்கான விவசாயிகளின் நிலைமை? இந்த யோசனையின் விளைவால்தான் 1966ல் ஆரம்பிக்கப்பட்டது கோயமுத்தூர் வடபகுதி விவசாயிகள் சங்கம்.

இன்று 12 லட்சம் தீவிர உறுப்பினர்களுடன் விளங்கும் இந்திய உழவர் – உழைப்பாளர் கட்சியின் ஆரம்பப் பெயர் விவசாயிகள் சங்கம் தான். அவரது இயக்கத்தில் உள்ளவர்கள் அவரை ஐயா என்றுதான் அழைப்பார்கள். நகர்ப்புறத்தில் ஏழைகளாக இருப்பவர்கள் கிராமத்திலிருந்து வந்த விவசாயிகள்தான் என்பது அவரது அழுத்தமான நினைப்பு. எனவே விவசாயிகள் வாழ்க்கையில் ஏற்றம் தேவை என்று பாடுபட்டார். இருதய நோயாளியாக இருந்தும், துணிந்து 17 முறை சிறைக்குச் சென்றவர் நாயுடு.

1980ல் பாராளுமன்ற தேர்தலின் போது இவரது விவசாயிகள் சங்கத்தின் பலம் வெளிப்பட்டது. பிறகு நடந்த சட்ட மன்ற தேர்தலுக்கு முன்னர் நாயுடு ஊரான வையம்பாளையம், அரசியல்வாதிகள் தேடி வரும் இடமாக மாறிவிட்டது. கலைஞர், எம். ஜி. ஆர். மூப்பனார், என்று மாறி மாறி ஒவ்வொரு கட்சித் தலைவர்களும் அவரைச் சந்தித்து ஆதரவு கேட்கத் தொடங்கினர். ஆனால் அவர் ஆதரித்தது அ. தி. மு. க. காரணம் விவசாயிகள் நலனுக்காகப் பல்வேறு உறுதிகளை அ.தி.மு.க. தேர்தல் அறிக்கையில் கூறியிருந்ததுதான்.

அவர் ஆதரித்து வெற்றி பெற்ற அ. தி. மு. க. ஆட்சியில்தான் விவசாயிகள் மிகவும் கொடுமைப்படுத்தப்பட்டனர். ஜப்தி, ஏலம், மின் துண்டிப்பு போன்றவைகளைக் கண்டு நாயுடு வெகுண்டார். போராட்டங்கள் நடந்தன. அ.தி.மு.க. அரசு நாயுடுவை தேசிய பாதுகாப்புச் சட்டத்தில் உள்ளே போட்டது. அவரது வீட்டிற்கும், பம்பு செட்டிற்கும் மின் சப்ளையைத் துண்டித்து விட்டார்கள். அவர் இறக்கும் போது கூட அவரது வீட்டில் 'சிம்னி' விளக்குதான் இருந்தது.

விவசாயிகளின் கோரிக்கைகளை வெற்றிகரமாக நிறைவேற்ற நூதனமான போராட்டங்களை நடத்தியவர் நாயுடு. கட்டை வண்டிகளைக்கொண்டு கலெக்டர் அலுவலகத்தை முற்றுகையிட்டுப் போராட்டம்; கோவணம் கட்டிக் கொண்டு கோரிக்கைகளை வெளிப்படுத்திய போராட்டம் என்று பல போராட்டங்கள்.

அரசாங்கத்தின் அடக்குமுறை கண்டு இவரது சங்கத்திலிருந்து பலர் பயந்து விலகிச் சென்றாலும் மனம் தளராமல் சங்கத்தைத் தொடர்ந்து நடத்தியவர் இவர். இவரது பாப்புலாரிட்டியைப் பார்த்துப் பஞ்சாபில் ஹோஷியார்பூரில் நடந்த உழவர் பேரணிக்குப் பேசக் கூப்பிட்டார்கள். அங்கேயும் லட்சக்கணக்கான மக்கள் கூட்டம்.

சிறையிலிருந்த போது வேண்டுமென்றே புழுக்கள் கலந்த சாதத்தைப் போடுவார்கள். இப்படி 1966லிருந்து இறக்கும் வரை எவ்வளவோ தொல்லைகள் வந்தும் சற்றும் மனம் தளராமல், விவசாயிகளின் நலனே தமது குறிக்கோள் என்று செயல்பட்டு வந்தவர் நாயுடு.

ஒரு போராட்டத்தின் போது திருநெல்வேலியில் இருந்து தனியாகச் சென்னை எழும்பூரில் ரயிலில் வந்து இறங்கிய நாயுடுவை போலீஸார் கைது செய்யத் தயாராக இருந்தார்கள். ஹோட்டலுக்குச் சென்று குளித்து முடித்த பின் கைது செய்யலாம் என்று நினைத்திருக்க போலீஸாரிடம் தமாஷாக 'இப்போதே கைது செய்யுங்களேன், டாக்ஸி செலவாவது மிச்சமாகும்' என்றாராம் நாயுடு. நம்பிக்கை நட்சத்திரத்தை இழந்து தவிக்கிறார்கள் விவசாயிகள்.

-பிரியன்



"எனது, பதினேழு வயதுக் கால்பந்தாட்டக் கில்லாடி. அவன், ஒரு நாள் உலகிலே மிகச் சிறந்த 'பார்வர்டு' ஆவான்!"

# போர்ன்விடாவின் இனிமைக் காலம்

போர்ன்விடா அளித்தவரை பாச மனங்கள் நேசத்தோடு நினைத்து மகிழும் ஒருநாள்!

வளரும் குழந்தைகள் வேறு எந்த மால்ட்டட் பானங்களையும்விட போர்ன்விடாவை விரும்புவதேன்? போர்ன்விடா அருந்தி வளர்ந்த இரு தலைமுறையினர் தங்களுடைய குழந்தைகளுக்கு போர்ன்விடா தவிர வேறு எதுவும் உகந்ததல்ல என்று வலியுறுத்திக் கூறுவதேன்?

அதில்... உற்சாகம் துள்ளும் சுவை மட்டுமல்ல, காட்பரியின் பிரபல பெயர் மட்டுமல்ல. அவற்றைவிட அதிகமோ அதிகம். அதுதான் போர்ன்விடா! அதோடு வளருங்கள்.

1 கிலோ பேகிலும் கிடைக்கிறது. அதன் உள்ளே ஒரு இலவசக் கூபன்.

காட்பரிஸ்

## போர்ன்விடா

நல்ல வளர்ச்சி,
போர்ன்விடா பயிற்சி.







OBM/3784 TAM

## முன்கதை சுருக்கம்

அந்நியான முறையில் புதுச்சேரியில் சிறைப் பட்டிருக்கும் தன் தகப்பனாரை எப்படியாவது விடுவிக்கக் கருதித் தன் சொந்த ஊரை விட்டுக் கிளம்பும் வாலிபன் மாறவர்மத் தேவன், வழியில் பெந்தராக்கள் என்ற கொள்ளையரிடம் சிக்கியதால் பொலிவிழந்து கிடக்கும் ஒரு கிராமத்தில், சிந்து என்பவளைச் சந்திக்கிறான். அந்தப் பேரெழில் நங்கை இவனைத் திக்கமாக ஒரு பார்வை பார்த்து விட்டு கொள்ளைக்காரரிடமிருந்து தப்பி ஓடி மறைந்து விடுகிறாள்.

மராட்டிய வீரரிடம் சிறைப்பட்டுத் தனவணிகர் விட்டோபா முன் நிறுத்தப்படுகிறான் மாறவர்மன். அங்கே சிந்து இருக்கக் கண்டு அதிசயிக்கிறான். விட்டோபா தமது நண்பர் சந்தா சாகேபுக்கு அவன் உதவ வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறார். அந்த வேண்டுகோளை ஏற்று அவர் தரும் லிகிதத் துடன் பயணம் கிளம்புகிறான். அந்தக் கடிதம் டுப்ளேயிடம் துபாஷி ஆனந்தரங்கம்பிள்ளை தந்தது. திருப்பதி உண்டியல் வருவாயை சந்தா சாகேப்பிடம் சேர்ப்பிக்க வேண்டும் என்று கூறும் லிகிதம் அது. அத்துடன் அவன் புறப்பட, சிந்து உடன் வருகிறாள். வழியில் ஒரு சதித் திட்டத்தை முறியடித்து, பின்னோடு வந்த வீரர்களை யமனுலகு அனுப்பிவிட்டு சிந்துவும் மாறவர்மனும் வடக்கே போகிறார்கள். கார்வேட் ராஜா அரண்மனையை அடைகிறார்கள்.

திருப்பதி வருமானத்தை யார் பெறுவது என்ப தில் போட்டி நிலவுகிறது. சந்தா சாகேப்பா முகமதலியா யார் நவாபு என்பதிலும் பகைமை உள்ளது. இதைப் பயன்படுத்தி ஆதாயம் பெற எண்ணும் ஆங்கிலேயர் முகமதலியையும் பிரெஞ்சுக் காரர்கள் சந்தாசாகேப்பையும் ஆதரிக்கின்றனர்.

இருவரில் யார் நவாபு என்பது தீர்மானமாகும் வரை கோயில் திரவியம் நம்மிடமே இருக்கட்டும் என்று திருப்பதி ஆலய நிர்வாகிகளும் கார்வேட் ராஜாவும் தீர்மானிக்கின்றனர். ஆங்கிலேயர் அல்லது பிரெஞ்சுக்காரரிடம் நாடு அடிமைப்படாமல் காக்கவும் ஓர் ரகசிய அமைப்பு உருவாகி வருகிறது.

இந்தச் சிக்கல்களுக்கிடையில் அகப்பட்டுக் கொள் கிறான் மாறவர்மத் தேவன். அவனிடம் நிறையவே எதிர்பார்க்கப்படுகிறது. சிந்துவும் அவன் மூலம் பல காரியங்களைச் சாதிக்க நம்பிக்கை கொள்கிறாள். இதற்கிடையில் கார்வேட் ராஜாவின் சபையில் நாட்டிய நாடகத்தில் பங்கு கொண்ட செஞ்சுலட்சுமி அவன் சிந்தனையைக் கவர்கிறாள்.

இச்சமயத்தில் முகமதலியின் ஆதரவாளரான ஆங்கிலேயர் ஜான் ஸாவேஜ் என்பவனை திருப்பதி பணத்தை வசூலித்துவர அனுப்புகின்றனர். "முக மதலிக்குப் பணத்தைக் கொடுங்கள்; இல்லையேல் உங்கள் ஜமீன் வேறு ஒருவருக்கு மாற்றப்படும். அவகாசம் தேவையெனில் உங்கள் பெண் செஞ்சு லட்சுமியைப் பணயமாக அனுப்புங்கள்" என்று கார் வேட் ராஜாவை அச்சுறுத்துகிறான் ஸாவேஜ்.

## 13

## செஞ்சு பணயமாவதா?

பொம்மை ராஜாப்பாளையம் அரண்மனை ஸ்தம்பித்துவிட்டது. கார்வேட் ராஜாவின் குடும்பத்தார் கண்ணீரில் மிதந்தார்கள்.

மாளிகை எங்கும் கனமான சோகம் பர வியது.

மாலைவரை கார்வேட் ராஜா அல்லாடிக் கொண்டிருந்தார். பெரியவர்களிடமும் நண் பர்களிடமும் பேசினார். ஸாவேஜிடம் இரு முறை பேசினார்.

பண விஷயத்தில் ஸாவேஜ் இளகவே இல்லை.

இது வரை வசூலான திருப்பதிப் பணத்தை ராஜா உடனே கொடுத்துவிட வேண்டும். இனி வசூலாவதை முறையே பிரம்மோத்ச வம், முக்கோடி, ஆனிவரை ஆஸ்தானம் ஆகிய காலங்களில் ஒழுங்காக அனுப்பிவிட வேண்டும்.

நடைமுறையில் இது நடந்தால்தான் பண யம் திருப்பி அனுப்பப்படும்.

இதற்கு உடன்படவில்லை என்றால் ஜமீன் பறிபோய்விடும்.

ராஜா இதற்கு மாற்றாக எத்தனையோ வழிகள் சொல்லியும் ஸாவேஜ் கேட்கவில்லை.



ராஜா வெகுநேரம் பலரோடு ஆலோசனை செய்தார்.

பொழுது விடிந்தது.

நகரமே ஒரு சோகத்தோடு எழுந்தது.

தெருக்கள் வெறிச் சோடியிருக்க, திண்ணையெல்லாம் ஆர்வமான முகங்கள் ஏறிக் கொண்டு நின்றன.

நகரவாசிகள் எல்லோருமே தங்கள் அன்றாட வாழ்க்கையை மறந்துவிட்டார்கள்.

சூரியன் உதித்து நாலு நாழிகையில் அரண்மனை வாசலில் மூடு பல்லக்கு வந்து நின்றது.

பரிவாரங்களும் ஊழியர்களும் இரு பக்கமும் சேர்ந்து கொண்டார்கள்.

பத்துப் பொதி மாடுகளும் கூட்டத்தில் கலந்து நின்றன.

செஞ்சுகா வழியும் கண்ணீரோடு வெளியே வந்தாள்.

உள்ளே தாயார் சீதாதேவியின் பெரிய புலம்பல் நெஞ்சைக் கீறவல்லதாகக் கேட்டது.

வாசல்படிக்கு வந்த செஞ்சுகாவின் முகத்தில் உலர்ந்த முறுவல் ஒன்று வந்தது.

தந்தையின் கால்களைத் தொட்டுக் கும்பிட்டாள். பிறகு வெளியே அலை பாய்ந்த ஜனங்களை நோக்கிக் கும்பிட்டாள்.

'இளவரசி வாழ்க' என்று எங்கும் ஒலிகள் எழுந்தன.

படிகளில் சாவதானத்துடன் இறங்கி மூடு பல்லக்கின் அருகில் வந்து நின்றாள்.

பிறகு அரண்மனையை நோக்கி ஒரு முறை கும்பிட்டுவிட்டுப் பல்லக்கில் ஏறிக் கொண்டாள்.

திடீரென்று முழங்கிய எக்காளங்கள், விம்மல்களை மறைத்து விட்டன.

பலர் மூர்ச்சை ஆகியிருந்தார்கள்.

பல்லக்கு சிலிர்த்துக் கொண்டு முன் செல்ல, ஊழியப் பரிவாரங்கள் பின் தொடர்ந்தன.

ஒரு ராட்சதப் பாம்பு வளைவதுபோல் மதில் வாயில் வழியே அது ஊர்ந்து போயிற்று.

தெருவில் சென்று அது மறையும் வரை கார்வேட் ராஜா ஆவலாக நின்று கொண்டிருந்தார்.

பிறகு முகத்தை உத்தரியத்தால் மூடிக் கொண்டு உள்ளே போனார்.

வீர்மனி எல்லோரும் பிடித்து அழுத்தி வைத்திருந்தார்கள்.

அவன் நெற்றியிலும், உடம்பிலும் ஏற்கனவே காயங்கள் உண்டாகி இருந்தன.

கண்களில் திவலைகளாகக் கண்ணீர் சொரிந்துக் சொரிந்து வந்தது.

''ஒரு அபலை போகிறாள். எல்லோரும்



பார்த்துக் கொண்டிருக்கிறீர்களே? விடுங்கள். என்னை !'' என்று கர்ஜித்தான் வர்மன்.

அவனைப் பிடித்து அமுக்குவது கடினமாக இருந்தது.

நாலைந்து பாளையக்காரர்கள் தங்கள் முழு பலத்தையும் பிரயோகிக்க வேண்டி வந்தது.

அப்படியும் அவனுடைய உதறலுக்கு ஒன்று இரண்டு பேராவது உதிர்ந்து கொண்டிருந்தார்கள். உக்கிரமானவனாக இருந்தான் அவன்.

நீண்ட தடியை ஊன்றிக் கொண்டு உள்ளே பத்திரமான அடி வைத்து வந்தார் வீராணத் தேவர்.

அவர் முகம் கலங்கி இருக்க, அவரது பழுத்த மீசையில் இரு கண்ணீர்த் துளிகள் வைரங்களாகச் சிமிட்டின.

'' தம்பி!'' என்றார் தழுதழுக்க குரலில். ''பதறாதே. சில சமயம் நாணலாகவும் இருக்கணும்! எப்போதும் தேக்கு போல இருக்க முடியாது !'' என்றார்.

வர்மன் பல்லைப் பல்லைக் கடித்து நிமிர்ந்து பார்த்தான். '' பெரியவரே நன்றாகச் சொன்னீர்! பயந்தாங்கொள்ளித்தனத்திற்கு இப்படி ஒரு விளக்கம் தருகிறீரோ? நாங்கள் உண்மையில் ஒரு பாளையக்காரரா? எங்கே போயிற்று உங்கள் வீரம்? ஒரு இளம் பெண்ணைப் பணயமாகத் தூக்கிச் செல்கிறார்கள். அதுவும் நம்மவர்கள் அல்ல. பரங்கி நாய்கள்! உடனே எழுந்து அவர்களைச் சின்னாபின்னமாக்குவதை விட்டு எதிர்காலத்தைப் பார்க்க வேண்டுமாம்! ஒரு பேச்சா இது? தூ!'' என்று சீறினான் அவன்.

பெரியவர் வீரண்ணத்தேவர் சலனமாகவில்லை. அதே நிதானப் பார்வையுடன் அவனைப் பார்த்தார்.

''தம்பி! உன்னைப் போல ஆத்திரமாக இருந்தவன்தான் நான் ! எங்கள் ஆத்திரத்திலோ ஆர்வத்திலோ குறை காணாதே! வீரியம் பேசுறதிலே காரியம் கெட்டுவிடக் கூடாது. இப்போ பரங்கிக்காரனை எதிர்த்தால் என்ன நடக்கும் ?''

''ஒருத்தன் திரும்பிப் போகமாட்டான்!''

பளார் என்று கன்னத்தில் அறைந்தாற் போல் அவன் பதில் பேசினான்.

''போகமாட்டான் உண்மை ! அப்புறம் நவாபும் கும்பெனியாரும் சும்மா இருப்பார்களா ?''

''வரட்டுமே, சண்டைக்கு !''.

மெள்ள நகைத்தார் வீரண்ணன்.

'' தம்பி ! சண்டை என்றால் தெருச் சண்டையா ? சமுத்திரமாக வருவார்கள் ! அவர்கள் பலத்தில் நாம் வெறும் தூசுகள்! தூற்றில் ஒரு பங்குகூட இல்லை. புல்பூண்டு இல்லாமல் மறைவோம்'' என்றார்.

''அதற்காகச் சும்மா இருக்கச் சொல்கிறீர்களா ?''

''சும்மா இருப்பது ஒரு வெளிக் காட்சி ! ஆனால் உள்ளே வேலை செய்து கொண்டிருப்போம்.''

''என்ன செய்வீர்கள், சொல்லுங்கள், பார்க்கலாம் !''

''ஒரு நாட்டை எழுப்பிக் கொண்டு வருவது என்பது சாதாரண காரியமல்ல. மக்களின் உணர்ச்சிக்குச் சோறு போட வேண்டும். அதற்கு இந்தப் பணயம் கொடுத்தது ஒரு சரியான விருந்து !''

வெறுப்பில் ஒரு சிரிப்புச் சிரித்தான் வர்மன்.

'' ஓகோ ! ஒரு அபலைப் பெண்ணைப் பணயமாகக் கொடுத்தது ஒரு விருந்துக்குச் சமானமா ?''

''ஒரு தத்துவத்திற்காகச் சொன்னேன். தம்பி ! உண்மையில் இதைவிட மோசமானதெல்லாம் நடந்திருக்கிறதே. யாரால் என்ன செய்ய முடிந்தது? ஒரு மீனாட்சியைச் சிறையில் சாக வைத்தோமே ! அதைவிட மோசமா இது ?''

'' இதற்குப் பரிகாரம் எப்போதுதான் செய்யப் போகிறீர்கள் ?''

''பொறு ! நேரம் வரும் ! இப்போது நடந்தது ஒன்றும் பெரிதல்ல ! திருப்பதி வருமானத்தை அனுப்பிவிட்டால் பெண்ணை விடுதலை செய்து விடுவார்கள் ! சீக்கிரம் அனுப்பி விடுவார்கள். அதுவரை பொறு!''

'' பொறுக்கவா ? ஒரு நிமிடம்கூடப் பொறுக்கமாட்டேன்! பணயம் போயிருப்பது ஒரு ஆண் அல்ல ! பெண் ! அதுவும் இளம் பெண்! அவளைப் பணயம் அனுப்பி விட்டு, எப்படி நாம் மானிகளாக வாழ முடியும் ! பெரியவரே, நான் கேட்கிறேன், நாம் எல்லோரும் மானமுள்ளவர்கள்தானா?''

வீரண்ணர் ஒரு கணம் தயங்கினார்.

'' உன்னை விட்டால் நீ என்ன செய்வாய்?''

---

**அடுத்த வாரம்**

# துணைவேந்தரிடம் சில துணிச்சலான கேள்விகள்





ஜலதோஷம் பிடித்தால் குழந்தையின் உறக்கம் நாசம்

## விக்ஸ் வேப்போரப்பினால் இரவோடிரவாக சுகம்

(அவ் வேலையைச் செய்வது அன்னையின் பாசம்)

ஜலதோஷம்—அதனால் பாதிக்கப் பட்டவரே அதன் தொல்லையை அறியமுடியும். உறங்க முடியாது... மூக்கடைப்பு...சளி...இருமல்...உடல் முழுவதும் வலி...இவ்வளவையும் பாவம் குழந்தை தாங்க முடியுமா?

மாதாவின் மந்திரக்கரம் அறியுமே ஜலதோஷத்தின் நிவாரணத்தை. அப்பாசக்கரம் தொடுவது விக்ஸ்... அதை குழந்தையின் மூக்கு, தொண்டை, நெஞ்சு ஆகியவற்றில் அன்புடன் இதமாகத் தடவுகிறாள் அன்னை...அதிலும் முக்கியமாய் முதுகிலே! அப்படித் தடவாவிட்டால் அம்முயற்சி முழுதும் அரைகுறை யாகிவிடும். தாயின் பாசம் குழைத்துத் தடவப்படும் விக்ஸ், இரட்டைச் செயல் புரிகிறது: ஒன்று, மருந்து கலந்த (மெடிக்கேட்டட்) இதன் ஆவி மூக்கடைப்பை நீக்குகிறது. இரண்டு, சருமத்தில் தடவப்படுவதால் உடல் வலியைப் போக்குகிறது. அன்பும் பாசமும் இணைந்த அன்னையின் விக்ஸ் சிகிச்சையால், குழந்தை அயர்ந்து உறங்குகிறது. விடியும்வரை...முன் போலவே குழந்தை ஆரோக்கியமும் சுறுசுறுப்பையும் அடைகிறது!




**விக்ஸ்**
வேப்போரப்



**சுவாச நிவாரணம் அளிக்கிறது
நிவாரண அனுபவத்தை
உணரவைக்கிறது.**

RHL/VR-6 TAM R

''போவேன் ! போர் இடுவேன் !''

''ஒருத்தனுகவா ?''

''ஆமாம்.''

''பெண்ணை மீட்டுவிடுவாயா ?''

''முடியும்! எனக்கு நம்பிக்கை இருக்கிறது!''

சிரித்தார் வீரண்ணர். ''உன்னைக் கொன்று போட்டு விடுவார்கள் !''

''கொல்லட்டும். அது வீர சொர்க்கம் ! இப்படிப் பேடியாக இருப்பதைவிட...''

வீரண்ணர் மேலே பேசவில்லை. ''இந்தா'' என்று ஒரு பாளையக்காரரை அழைத்தார்.

காதோடு காதாக ''இவனை விட்டால், பாளையக்காரர்கள் இங்கே கூடியிருப்பது அம்பலமாகிவிடும் ! உள்ளே போட்டு வையுங்கள் !'' என்றார்.

இரவில் அந்த சிறிய அறையில் வர்மன் கோபமாக உலாவினன்.

அரை நிமிடம் கீழே உட்காரவில்லை.

அங்குமிங்கும் உலாவிக் கொண்டே இருந்தான்.

●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●●

**இலவச இணைப்பு:**

மேலட்டை:

**எல். சிவராமகிருஷ்ணன்**

2-வது அட்டை:

**டேவிட் கோவர்**

3-வது அட்டை:

**மைக் கேட்டிங்**

வண்ணப்படங்கள்: பாலாஜி

---

தொடிக்கு ஒரு முறை அந்தப் பலகணியில் இரும்புக் கழியைப் பலமாக இழுக்க முயன்றான்.

முகத்தில் ஒரு வெறி தோன்றியிருந்தது.

தன்னைச் சிறை செய்துவிட்டார்கள் பார்த்தாயா, என்று ஒரு ஆக்ரோஷம் !

அடைபட்ட வேட்டை மிருகம்போல் அறு அறு என்று அலைந்தான்.

நாழிகைகள் ஓட, திடீரென்று வெளிப்புறத்தில் இருட்டு சற்று சாம்பல் நிறமாவது தெரிந்தது.

ஏதோ விளக்கு வருகிறது என்று தோன்றியது.

இருட்டு சீக்கிரம் கரைந்தது.

அவனது அறையின் பலகணி முன் ஒரு கைவிளக்கு நின்றது.

அதை ஏந்திய கைகள் பூந்தளிர்களாகத் தெரிய, மேல் நிமிர்ந்ததும் திடுக்கிட்டான்.

சிந்து நின்று கொண்டிருந்தாள்.

அகலின் வெளிச்சம் அவள் முகம் மேல் பட்டாகப் படிந்தது.

கண்ணின் பளிங்கில் பட்டு சுடர்களாகத் தெரிந்தன.

இரு விழிகளையும் தளர்த்திச் சீராக ஒரு பார்வை பார்க்க, அவன் தத்தளித்து நின்றான்.

'' வீரரே!'' என்றாள் அவள்.

குரல் சரசரத்து இருந்தது.

அவன் பேசவில்லை.

''நீங்கள் பட்டதை எல்லாம் பார்த்தேன். கேட்டேன் ! எனக்கும் மனம் தாளவில்லை!'' என்றாள் அவள்.

''அம்மணி !'' என்று தணிந்த குரலில் அழைத்தான் அவன் ! ''இது அநியாயமில்லையா ? ஒரு பெண்ணை அனுப்புவது எவ்வளவு கொடுமை ! அதை நீங்களும் எப்படிச் சம்மதித்தீர்கள் ?'' என்றான்.

'' நிச்சயம் நான் சம்மதிக்கவில்லை !''

''எப்படியாகிலும் அந்தப் பரங்கிக்காரர்களை நாம் எதிர்த்திருக்க வேண்டாமா ?''

'' செய்திருக்க வேண்டும். நானும் அதையே விரும்புகிறேன்.''

அவனுக்கு மகிழ்ச்சி தாளவில்லை. சிந்து அவன் கட்சியில் இருப்பது எவ்வளவு இன்பமாக இருந்தது.

''இவர்கள் என்னை இப்படிச் செய்துவிட்டார்களே! கதவைத் திறங்கள் அம்மணி. நான் சீக்கிரமே போய் அவர்களைச் சந்தித்து.....''

''வீரரே! நீங்கள் ஒருத்தராக என்ன செய்வீர்கள்! ஆபத்து ஆயிற்றே !''

''ஏதாவது செய்வேன் ! இங்கே பேடியாக இருப்பதைவிட.... ஐயோ ! அம்மணி நீங்கள் எல்லோரும் எப்படி செஞ்சுகாளவை மறந்தீர்கள் ! அந்த இளம் தளிரை எப்படிப் புறக்கணித்தீர்கள் ?''

''இல்லை, வீரரே! புறக்கணிக்கவில்லை!''

''எல்லோரும் சும்மா இருக்கிறீர்களே! தயவுசெய்து அம்மணி என்னைத் திறந்து விடுங்கள். நான் போகிறேன். என்னால் இதைப் பொறுக்க முடியாது!''

அவள் சிறிது நேரம் மௌனமாக இருந்தாள்.

பிறகு, ''ஐயா, அப்புறம் என்னைக் காட்டிக் கொடுக்க மாட்டீரே?'' என்றாள்.

''மாட்டேன்!''

''இங்குள்ள பாளையக்காரரையும் காட்டிக் கொடுக்க மாட்டீரே?''

''மாட்டேன்!''

'' ஒரே ஒரு வேண்டுகோள்! முரட்டுத்தனமாக உங்கள் உயிரை மாய்த்துக் கொள்ளக் கூடாது. எனக்கு சத்தியம் செய்யுங்கள்.''

''இப்படி ஒரு நிபந்தனையா? ''

''ஆமாம். உயிருக்கு ஆபத்து என்று வரும் வேளையில் நீங்கள் வளைந்து கொடுக்க வேண்டும். சம்மதமா ?''

''சம்மதம். திறங்கள்!''

''சத்தியம் செய்யுங்கள்!''

'' சத்தியம் !''

அவள் கதவைத் திறந்தாள். வர்மன் பிறிக் கொண்டு வெளியே பாய்ந்தான்.

''வருகிறேன், அம்மணி!'' என்று கூறிக் கொண்டே விரைவாக இருளில் மறைந்து போனான்.

(தொடரும்)

## 8

இருள் படர்ந்து அழகாய் இருக்குது
காடு
ஆனால்-
போக வேண்டும் வெகு தூரம் தூங்
கும் முன்பு
காப்பதற்குக் கொடுத்த வாக்குகள்
உண்டு

தனக்குப் பிடித்தமான இந்தக் கவிதையை மரணமடைவதற்கு முன்னர் குறித்து வைத்திருந்தார் நேரு. சீன எல்லையில் இந்தியா ஒரு மிக மோசமான தோல்வியைத் தழுவி இருந்தது. தோல்விக்கு ஒரு முக்கிய காரணம் அப்போது இராணுவ மந்திரியாக இருந்த, நேருவின் நெடு நாளைய நண்பரான கிருஷ்ண மேனன். ஒரு குற்ற உணர்வில் மனம் புழுங்கி ஒரு மே மாத நடுப்பகலில் சாவமானார் நேரு.

கவிதையைப் போலவே நாட்டிலும் இருள் படர்ந்திருந்தது. நேருவிற்குப் பின் வந்தவர்களிடம், அவருடைய விசால மனம், பிறர் மறுப்புச் சொல்லாமல் ஒப்புக் கொள்ளும் தலைமைக் குணங்கள் இல்லை. தமிழ்நாட்டில் இருந்து வந்த ஒரு கடிதத்திற்கு, தற்காலிகப் பிரதமராய் இருந்த நந்தா இந்தியில் பதில் எழுத ஒரு பெரிய நெருப்பின் முதல் பொறி கிளம்பியது. 1965ல் இந்தியை ஆட்சி மொழியாக்க அரசியல் சட்டம் இடம் கொடுத்திருந்தது. இந்தி பேசாத மக்கள் விரும்பும் வரை அப்படிச் செய்யப்படமாட்டாது. என்று நேரு வாக்குக் கொடுத்திருந்தார். நேருவிற்குப் பிறகு அவரது வாக்குறுதிகள் காற்றில் பறந்தன. தமிழ் நாட்டின் கோபத்திற்கு முன்னால் அரசியல் சட்டம், அமைப்பு, அதிகாரிகள், கட்டிடங்கள் எல்லாம் எரிந்து பஸ்பமாயின. இவற்றிற்குப் பதில் உத்தர மத்திய பிரதேசங்களில் சொல்லப்பட்டன. மதத்தால் பிரிந்த தேசம் மறுபடியும் மொழியால் பிரிந்து விடக் கூடிய அபாயம் எழுந்தது.

1965 ஜனவரியில் மொழிப் போர். ஏப்ரலில் வறட்சி, செப்டம்பரில் பாகிஸ்தான் யுத்தம். சீனாவிடம் தோற்றுவிட்டதைக் கண்டு உற்சாகம் அடைந்த பாகிஸ்தான் காஷ்மீரில் விஷமத்தை ஆரம்பித்தது. அமெரிக்காவின் பாட்டன் டாங்குகளையும், ஸைபர் விமானங்களையும் கொண்டு அந்த அளவு சாதனங்கள் இல்லாத நம்மைத் தாக்கியது. இந்தத் தளவாடங்கள் இந்தியாவின் மீது பயன்படுத்தக் கூடாது என்ற நிபந்தனையின் பேரில் பாகிஸ்தானுக்குக் கொடுக்கப்பட்டவை. இந்தியா அமெரிக்காவிடம் புகார் செய்ததும், வம்பே வேண்டாம் என்று அமெரிக்கா இந்தியா பாகிஸ்தான் இரண்டு பேருக்குமே உதவியை நிறுத்தி விட்டது நமக்கு சோறு போட்டுக்கொண்டிருந்த (PL – 480) நின்று போயிற்று. இரண்டாவது பிரதமர் சாஸ்திரி எதிர்பாராத தருணத்தில் மரணமடைந்தார்.

கிளர்ச்சி, வறட்சி, பஞ்சம், யுத்தத்தால் ஏறிய விலைவாசி நொடித்துப் போன பொருளாதாரம். இன்னும் தேர்தலுக்கு ஒரு வருடம். நேரு இல்லை. யாரைக் காட்டி ஓட்டுக் கேட்பது என்று காங்கிரஸ் திணறிற்று. தலைவர் காமராஜர் யோசித்தார்.

பிரதமர் பதவிக்கு நாலு பேர் முயற்சி செய்தார்கள். நந்தா, மொரார்ஜி, சவான், எஸ் கே பாட்டீல். நந்தா நல்லவர் தான். ஆனால் சாதுர்யம் போதாது. மொழிக் கிளர்ச்சியின் முதல் பொறியைக் கிளப்பி வெறுப்புக்குள்

# பிரதமர் உருவானர்!



ளாகியிருந்தார். மொரார்ஜி அனுபவஸ்தர். ஆனால் முரடு. கட்சிக்குள்ளேயே ஆதரவு இல்லை. சவான் இருப்பவர்களுள்ளே இளைஞர், துடிப்பானவர். பாகிஸ்தானை ஜெயித்ததால் நாட்டில் நல்ல பேர். ஆனால் இந்திக்காரர்கள் ஒப்புக் கொள்ள மாட்டார்கள். எஸ். கே. பாட்டீலுக்கு நல்ல பெயர் இல்லை.

காமராஜ் யோசித்தார்.

''நீங்களே பிரதமராகி விடுங்களேன்!'' என்று அவருக்கு யோசனை சொன்னார்கள். ''அது எப்படி முடியும்? எனக்கு இந்தியும் தெரியாது. இங்கிலீஷும் தெரியாது'' என்று மறுத்துவிட்டார் காமராஜ். உண்மையில் அன்று இருந்த சூழ்நிலையில் தன்னை முன்னிட்டு பிரதமர் பதவிக்குத் தேர்தல் வந்தால், தேசம் வடக்கு தெற்கு எனப் பிரிந்துவிடும் என்று பயந்தார்.

காமராஜ் யோசித்தார்.

○ நேருவின் மகள் என்பதால் ஓட்டுகளும்

இந்திராவின் பெயர் நினைவிற்கு வந்தது. நாடறிந்த பெயர், நேருவின் மகள் என்பதால் ஓட்டு விழும். மொழி வெறியர் இல்லை என்பதனால் தென்னிந்தியா ஒப்புக் கொள்ளும். இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியின்போது தமிழ்நாட்டிற்குப் போய் வரமுடிந்த ஒரே மத்திய அமைச்சர் இந்திராதான். உத்தரப் பிரதேசக்காரர் என்பதால் வடக்கில் ஏற்றுக் கொள்ளுவார்கள். நேருவுடன் பல முறை வெளிநாட்டுக்குப்போய் வந்தவர்என்பதால், அநேக உலகத் தலைவர்களுடன் தனிப்பட்ட பரிச்சயம் உண்டு. குறிப்பாக அமெரிக்காவின் ஜனாதிபதி ஜான்சனுடன். அதன் மூலம் உணவு நிலைமையை ஓரளவு சமாளிக்கலாம். குருஷேவ் பதவி நீக்கம் செய்யப்பட்டு, கோசிஜின் பொறுப்பு ஏற்ற உடன் சாஸ்திரி பிரதமராய் இருந்த போதிலும் தனிப்பட்ட முறையில் கோசிஜினால் ரஷ்யாவிற்கு இந்திரா அழைக்கப்பட்டிருந்தார். ரஷ்ய ஆதரவு இருந்தால் சீனாவை அடக்கி வைக்க முடியும். எல்லாவற்றிற்கும் மேல் பெண். எந்த நேரத்திலும் யாரையாவது சார்ந்திருக்கத்தான் வேண்டும். அவரை முன் நிறுத்தி நாம் தேசத்தை நெறிப்படுத்த முடியும்.

ஆனால் இந்திரா எளிதில் ஒப்புக் கொள்ளவில்லை. பதவிக்குக் கொண்டு வரும் நோக்கத்துடன் நேரு தன்னை வளர்க்கவில்லை என்று அவருக்குத் தெரியும். பதினேழு வருடம் எதிர்ப்பில்லாத பிரதமராக இருந்த நேரு இந்திராவை ஒரு எம். பி.யாகக் கூட ஆக்கவில்லை. ராஜ்ய சபையில் கூட நியமிக்கவில்லை. 1959ல் மூன்றுமாதங்களுக்குக் கட்சியின் தலைவராக தேர்ந்தெடுக்கப்பட்ட இந்திராவை முதல் வருடம் முடிந்த உடனேயே பதவியைத் துறக்கச் சொன்னார் நேரு. உடல் மோசமாக ஆகி முன்போல் கடினமாக உழைக்க முடியாத நிலை ஏற்பட்டபோது கூட, சாஸ்திரியை இலாகா இல்லாத மந்திரியாக்கி அவர் உதவியுடன் செயல்பட்டாரே தவிர, இந்திராவைக்கூப்பிடவில்லை. தனிப்பட்ட முறையில் பொது வாழ்க்கை எப்படி மணவாழ்க்கையைப் பலிகொண்டது என்பது இந்திராவிற்குத் தெரியும். இந்திரா ஒப்புக் கொள்ளவில்லை.

என்றாலும் சட்டிக்கும், அதையே தங்கள் வாழ்வாகக் கொண்டிருந்த தலைவர்களுக்கும் வேறு வழியில்லை. பெயரளவில் இந்திரா களத்தில் இறங்கினார். நந்தாவும், சவானும் ஒதுங்கிக் கொண்டனர். ஜகஜீவன் ராமும் பாட்டீலும் நிலைமையை உணர்ந்து பின்வாங்கினர். சஞ்சீவ ரெட்டியை காமராஜ் தடுத்து நிறுத்தினார். மொரார்ஜியை மாத்திரம் ஒன்றும் செய்ய முடியவில்லை. போட்டி உருவானது. மொரார்ஜி பகிரங்கமாகப் பிரசாரம் செய்தார். இந்திராவீட்டில் இருந்தார். அவர் தரப்பில் காமராஜ் களத்தில் இறங்கி வேலை செய்தார். தனக்குக் கட்டுப்படக் கூடியவன் பது மாநில முதலமைச்சர்களைக் கூப்பிட்டுப் பேசினார்.

அதிகாலைப் பனி, மேகம் போல் அடர்ந்திருக்க, அந்தச் சரித்திர முக்கியத்துவம்

**மாலன்**



○ எதிர்க்கட்சிகள் ஆதரவோடு கிரி ஜனாதிபதியானார் கட்சி பிளந்தது.

வாய்ந்த நாளில், விடிகாலையில் வீட்டில் இருந்து புறப்பட்டார் இந்திரா. முதலில் சாந்தி உறங்குகிற ராஜ்காட். அதற்குப் பின் அப்பா துயிலும் அமைதி வனம். தீன் மூர்த்தி இல்லத்திற்குத் திரும்பி வந்தார். அன்றைக்குத்தான் பார்ப்பதுபோல் ஒவ்வொரு அறையாக நுழைந்து பார்த்தார். அங்கங்கே சில நிமிடம் நின்றார். பழைய நினைவுகள் மனத்தில் மோதின. பழைய தளபதியின் வீட்டைக் குடித்தனத்திற்கு ஏற்றபடி மாற்றியது. அந்த வீட்டில் ஒவ்வொரு பல்லையும் பினைக் பாயின்டையும் மிதியடியையும் கண் காணித்துப் புதுப்பித்தது எல்லாம் நெஞ்சை மொய்த்தன. இது அப்பா படிக்கும் இடம். இரவு வெகு நேரம் கண் விழித்து வேலை செய்யும் மேஜை. வருகிறவர்களைச் சந்திக்கிற கூடம். காலை உலவப் போகும் தோட்டம். தாவித் தாவி ஏறுகிற மாடிப்படி. நெஞ்சைப் பிடித்துக் கொண்டு சரிந்த நாற்காலி. அப்பா! உங்கள் நாற்காலியில் என்னை உட்காரச் சொல்கிறது தேசம். எனக்குக் கூட மெலிதான ஆசைதான். ஆனால் முடியுமா? எத்தனை பெரிய தேசம்! எத்தனை விதமான மக்கள். ஜாதிகள்! மொழிகள்! இவர்களை முன் எடுத்துச் சொல்ல முடியுமா? ''சும்மா இரையாதீர்கள் அப்பா உடம்புக்கு ஆகாது'' என்று நீங்கள் கோபப்படும் போது சமனப்படுத்துவேனே, என்னால் கோபப்படாமல் இந்த நாற்காலியில் உட்கார முடியுமா? ''எனக்கு சாக்கு போக்கு சொல்ல வேண்டாம், I want results'' என்று அதட்டுவீர்களே என்னால் கிசல்ட்டலை கொடுக்க முடியுமா? சாப்பதற்குக் கொடுத்த வாக்குகள் உண்டு என்றீர்களே அந்த வாக்குறுதிகளை நான் நிறைவேற்றுவேன், அப்பா.!

பாராளுமன்றத்தின் மத்திய கூடத்தில் பதினொரு மணிக்குத் தேர்தல் துவங்கியது.

மூன்று மணிக்கு முடிவை எழுதி காமராஜ் கொடுத்தார். முடிவைப் பார்த்த தலைவர் முறுவலித்தார். தொண்டையைக் கனைத்துக் கொண்டார். சளசளவென்று இருந்த சபை சட்டென்று அமைதியாயிற்று. "இந்திரா 355 மொரார்ஜி 169" என்று தமிழில் அறிவித்தார் காமராஜ்.

அடுத்த நிமிடம் அது இந்தியிலும், ஆங்கிலத்திலும் மொழி பெயர்க்கப்பட்டது. பின்னால் உட்கார்ந்திருந்த இந்திராவை எழுந்து வரும்படி சொன்னார் காமராஜ். கரகோஷம் வானைப் பிளக்க கையைக் கூப்பியபடி இந்திரா வந்தார். முன் வரிசையில் உட்கார்ந்திருந்த மொரார்ஜியை வணங்கினார். "ஆசீர்வதிப்பீர்களா பாபு?" என்றார். முகத்தில் முறுவலே இல்லாத மொரார்ஜி "ஆசீர்வாதம்" என்றார்.

ஆனால் இந்திராவால் கட்சியின் தேர்தல் சரிவைத் தடுத்து நிறுத்த முடியவில்லை. தமிழ் நாடு உட்பட ஒன்பது மாநிலங்களில் காங்கிரஸ் தூக்கி எறியப்பட்டது. மெல்லிசான மெஜாரிட்டியில் பாராளுமன்றத்திற்குள் நுழைந்தது.

தேர்தல் சொன்ன பாடம் இந்திராவிற்குப் புரிந்தது. இரண்டு நாட்களுக்குப் பின் ரேடியோவில் பேசும்போது சொன்னார். "தேசம் மாறுதலை விரும்புகிறது. முதியவர்களின் அனுபவமும் இளைஞர்களின் வேட்கையும் சேர்ந்து செயல்பட வேண்டும்."

அது அத்தனை சுலபமாய் இல்லை. 1967ல் ஜனாதிபதியாக இருந்த ராதா கிருஷ்ணனின் பதவிக்காலம் முடிந்தது. மரபுப் படி துணை ஜனாதிபதியாக இருந்த ஜாகிர் உசேன் பொறுப்பேற்க வேண்டும். இதுநாள் வரை ஜாதியை நம்பியே அரசியல் நடத்தி வந்த வட இந்தியத் தலைவர்கள் ஒரு முஸ்லிம் ஜனாதிபதி ஆவது குறித்துத் தயங்கினார்கள். இந்திரா உறுதியாக நின்றார். ஜாகிர் உசேன் ஜனாதிபதியாக, முஸ்லீம்களின் மறைமுக ஆதரவு இந்திராவிற்குக் கிடைத்தது.

தனக்கென வேர்கள் இல்லாமல் தலைவர்களையே சார்ந்து நிற்க வேண்டிய சூழ்நிலை இந்திராவை உறுத்திற்று. தான் பொம்மையாகப் பயன்படுத்தப் படுகிறோமோ என்ற உணர்வு மேல் எழுந்தது. இந்திரா ஒரு பிடிவாதக்காரியான மனுஷி. பதினாறு வயதில் வாழ்ந்து பார்த்த பாட்டியை, எதிர்த்துச் சண்டை போட்ட பெண். பின்னர் பெரோஸ்காந்தியை மணக்கத் தீர்மானித்ததும், நேருவை எதிர்த்து வாதாடி வென்றவர். மணவாழ்க்கை முறிவு கண்டபோது கூட, "நாங்கள் கணவன் மனைவி தான், ஆனால் இரண்டு வலுவான தனிப்பட்டவர்களும் கூட (We are two strong individuals) என்று பகிரங்கமாகவே அறிவித்தார். இப்போது உணர்வு பூர்வமாக, ஒரு சிலரைச் சார்ந்து நிற்பது உறுத்திற்று.

ஜாகிர் உசேன் இரண்டு வருடங்களில் மரணமடைந்தார். மறுபடியும் ஜனாதிபதி சிக்கல். கட்சியின் விசுவாசி ஒருவர் ஜனாதிபதியாக வந்தால் நல்லது என்று கட்சியின் பெரிய தலைவர்கள் நினைத்தார்கள். தலையெடுக்கிற பிரதமர் இந்திராவை ஒரு கட்டுக்குள் வைக்க அது உதவும் என்று நம்பினார்கள். இந்திராவிற்கு இதில் சம்மதமில்லை. துணை ஜனாதிபதியான கிரியே மரபுப்படி பொறுப்பேற்க வேண்டும் என்று கருதினார். கிரி இடது சாரி, அரை கம்யூனிஸ்ட் என்று கட்சி பயந்தது.

தேர்தல் என்று வந்தால், கிரி தம்முடைய பதவியை ராஜினாமா செய்துவிட்டுத்தான் நிற்க வேண்டும் என்பது சட்டம். அப்படி அவர் ராஜினாமா செய்தால், தற்காலிகமாக நாட்டின் தலைமைப் பதவியில் ஒரு வெற்றிடம் ஏற்படும். இது வரையில் இந்தியா சந்திக்காத நிலை இந்தச் சிக்கலைச் சமாளிக்கச் சட்டத் திருத்தம் கொண்டு வந்தார் இந்திரா. கட்சி விழித்துக் கொண்டது. ஜனாதிபதி பதவிக்கான வேட்பாளரை கட்சி தீர்மானிக்கும் என்று அறிவித்தது. கட்சியின் உயர் மட்ட அமைப்பான பார்லிமெண்டரி போர்ட் கூடியது. சஞ்சீவி ரெட்டியின் பெயர் முன் மொழியப் பெற்றது. ஆதரவாக நாலு வோட்டுகள்; எதிராக இரண்டு. காமராஜ், சவான், மொரார்ஜி, எஸ். கே. பாட்டீல் ஆகியோர் ஆதரவு. இந்திராவும், பக்ருதீன் அலி அகமதும் எதிர். வி. வி. கிரி சுயேட்சையாக களத்தில் இறங்கினார்.

அர்ஜுன் அரோரா என்ற எம். பி. கட்சிக் கட்டுப்பாடு இன்றி மனச் சாட்சிப்படி ஓட்டளிக்க அனுமதிக்கும்படி இந்திராவுக்குக் கடிதம் எழுதினார். கமலாபதி திரிபாதி, காஷ்மீர் முதலமைச்சர் சாதிக் ஆகியோருடைய கடிதங்கள் தொடர்ந்தன. ஜகஜீவன்ராமும், பக்ருதீன் அலி அகமதும் பகிரங்கமாக அறிக்கை விடுத்தனர்.

பத்திரிகைகள் கறு கறுப்பாயின. அவற்றிற்கு நிறைய அவல் கிடைத்தது.

'ஒரு அரசியல் தலைவன் வலுப் பெறுவது எவ்விதம்? 1. எதிரிகளைப் பலவீனப்படுத்து. 2. சமூசையாலும் மிரட்டலாலும் வாங்கக் கூடியவர்களை வாங்கு. 3. ஜனங்களுடைய மனத்தைக் கவர்ந்து கொள்' என்ற அர்த்த சாஸ்திர வரிகளை வேத வாக்காக எடுத்துக் கொண்டார் இந்திரா. அரசனுக்குச் சொல்லப்பட்ட சாணக்கியத்தை ஜனநாயகத்தில் பிரயோகித்தார்.

பார்லிமெண்டரி போர்ட் கூட்டம் முடிந்த நாலாம் நாள், மொரார்ஜியிடம் இருந்த நிதி அமைச்சர் பதவியை எடுத்துக் கொண்டார். முதல் விதி பிரயோகமாகியது. அவரிடம் அந்த இலாகாவை ஒப்படைக்கும்படி கட்சி கேட்டுக் கொண்டது. இந்திரா மறுத்துவிட்டார்.

அடுத்த இரண்டாம் நாள், ஜூலை 19, 1969, ஒரு அவசரச் சட்டத்தின் மூலம் பாங்குகள் தேசியமயமாக்கப்பட்டன. ஜனங்களிடமும், இடது சாரிகளிடமும் இந்திரா பிரபலமானார்.

அடுத்த மாதம், இருபதாம் தேதி, எதிர்க் கட்சிகளின் ஆதரவோடு கிரி ஜனாதிபதியானார். கட்சி பிளந்தது.

அதற்குப் பின் நிகழ்ந்ததெல்லாம் அரசியல் வரலாறு.

(தொடரும்)

# 11

அனுசூயா தன் காதல் விவகாரத்தை மனம் விட்டுக் கதம்பாவிடம் சொல்லத் தொடங்கினான்.

''இது நடக்கும், நடக்காதுன்னெல்லாம் யோசிக்காம பழகிட்டோம். பாலா ஒண்ணும் வசதியானது இல்லேதான். ஆனா அதும் மனசு யாருக்கும் வராது கதம்பா. எனக்கு ஏதாவது ஒண்ணுன்னா அப்படியே உருகிப் போயிடும். லேசா ஜொரம் அடிக்குதுன்னா மறு நாள் ஃபோன்ல கூப்ட்டு நான் நல்லா இருக்கேன்' பாலான்னுசொல்றவரைக்கும் ஃபோனுண்டயே ஒக்காந்து இருக்கும். அப்படி எனக்காக அது உருகி உருகிப் போறதை பாத்துதான் எனக்கே அதும்மேல அவ்வளவு பிடிப்பு வந்தது கதம்பா. 'அனு ஒனக்காகத் தான் நான் காத்துக்கிட்டிருக்கேண்டா' ன்னு ஒரு வார்த்தை சொல்லிச்சி அது எப்பத் தெரியுமா? அவங்கம்மாசெத்துப் போனப்போ? அப்ப! அவங்க ஒறவுக்காரங்க அத்தனை பேரும் கல்யாணம் பண்ணிக்கோ பண்ணிக்கோன்னு ரோதனை குடுத்தப்ப அதெல்லாம் மீறிக்கிட்டு எங்கிட்ட வந்து சொன்ன வார்த்தை. அப்புறம் தங்கச்சிக்குக் கல்யாணம் பண்ணி வெச்சிது. தொணைக்கு யாருமே இல்லேன்னப்போ அதுவே ஊட்லே பொம்பளையாட்டம் சமையலும் செய்ஞ்சிகிட்டு ஆஃபீஸுக்கும் போய்க்கிட்டு...யாருக்குன்னு நெனைக்கறே கதம்பா? எனக்காகத்தான்.

வடக்கே பிரமோஷன் கிடைச்சபோது 'எனக்குப் ப்ரமோஷனும் வேணாம், ஒண்ணும் வேணாம்னு எழுதிக் குடுத்துட்டு எம் பின்னாலயே மறுபடியும் சுத்த ஆரம்பிச்சிடிச்சி. இதெல்லாம் சும்மான்னு நெனைக்கறே? இதெல்லாம் லவ்வுனால இல்லேன்னு நெனைக்கறே?''

கடைசி வாக்கியத்தில் அனுசூயாவின் குரல் கொஞ்சம் இரைச்சலாய்க் கேட்டது. போன இரண்டொரு பேர் நின்று பார்த்து விட்டுப் போனார்கள்.

''இத்தனைக்கும் பின்னாடி நான் அந்த குருமூர்த்தியைக் கட்டிக்கறதுக்கு ஒத்துக்கலே? ஐயோ நமக்குப் பின்னால ரெண்டு தங்கச்சிங்க இருக்குதே. அவுங்க வாழாம நாம மட்டும் வாழ்ந்தா நல்லாவா இருக்குங்கற நெனைப்புலதானே அப்படி ஒத்துக்கிட்டேன்? அம்மா சொன்னாங்களே 'எம் பொணத்தை மிதிச்சிக்கினு தாண்டி நீ வெளியே போய் அந்த பாலாவைக் கட்டிக்கணும்'னு அப்படி ஏடா கூடமா எதினாச்சும் ஆய்டிச்சின்னா என்ன செய்யறதுன்னெல்லாம் யோசனை பண்ணிட்டுத்தானே நான் அந்தக் கல்யாணத்துக்கு மாடு மாதிரி தலையை ஆட்டினேன். அப்புறம் என்ன ஆச்சி கதம்பா?''

கதம்பாவிற்கு விழியோரத்தில் லேசாய்க் கண்ணீர் சுரந்தது. கண்டு விரலால் அதைத் தெறிக்கச் செய்தாள்.

''அந்தக்குருமூர்த்தி பையன் ஓடிப்போய்ட்டான். அப்புறம் எனக்குக் கல்யாணமே ஆவாமப் போய்ட்டா என்னா பண்றதுன்னு பாலா வந்து கேட்டவுடனே சரின்னிட்டாங்க. அதுவும் சந்தோஷமா எல்லா ஏற்பாடும் பண்ண ஆரம்பிச்சிடிச்சி. அப்புறம் மறுபடியும் அதைக்கூப்ட்டு' நீ வேணாம் போய்டு'ன்னு சொன்னா அதும் மனசு என்ன பாடு படும் கதம்பா?''

''இங்கதான் அனுசூயா எனக்கு மனசே ஒத்துப் போவலே. என்ன இருந்தாலும் பாலாவை அப்படி கூப்ட்டுக் கூப்ட்டு தொரத்தறது ஒண்ணும் அவ்வளவு நல்லா இல்ல.

''இந்த டாக்டர் பையன் நாளைக்கே திடீர்னு மனசு மாறி வேணான்னு சொல்லிட்டா என்னா ஆவும் கதம்பா? மறுபடியும் இவுங்க பாலாவைத் தேடிக்கினு போவாங்களா? இல்ல நான் இப்ப அந்த டாக்டர் பையனையே கட்டிக்கறேன்னு வெச்சிக்க, நான் பண்றது பச்சைத் துரோகம் இல்ல? இத்தினி நாள் பாலாகூட பழகிட்டு அதும் கனவுல எல்லாம் சந்தோஷமா இருந்துட்டு இப்ப அதைவுட்டு ஓடிப் போறது நல்லாவா இருக்குது?''

''அவசரப்படாதே அனுசூயா. நீ ஒண்ணும் அந்த டாக்டர் பையனைக் கட்டிக்க வேணாம்.''

''பின்னே?'' என்று ஒரு துக்கம் மாறாத ஆச்சரியத்தோடு கதம்பாவை ஏறிட்டாள் அனுசூயா.

''அப்பா அம்மா கிட்ட நான் பேசிப் பாக்கறேன்.''

''சரியான ஆளு கதம்பா நீ. ஒத்துப்பாங்க அவுங்க? இல்ல அவுங்களே ஒத்துக்கணும் இனிமே நான் ஒத்துப்பேன் ? நாளைக்கு நான் எங்கேயுமே ஒழுங்கா வாழமுடியாது கதம்பா. நான் பாலாவைக் கட்டிக்கிட்டு ஏதாவது ஆய்டிச்சின்னா அதுவே என் மனசை பூனை பெறாண்டுறா மாதிரி பெறாண்டிடும். யாரு பாவத்தை வேணும்னாலும் கொட்டிக்கலாம். பெத்தவங்க பாவத்தைக் கொட்டிக்கக் கூடாது.''

''என் திருப்திக்கு நான் பேசிப் பார்க்கறேனே, அனுசூயா ?''

சட்டென்று ஒரு முடிவுக்கு வந்தவள்மாதிரி அனுசூயா, ''ராத்திரி பேச கதம்பா நீ... நான் உன் ரூம்லேயே தூங்கிப் போயிடறேன். நான் ஊரால்ல இருந்தா அவுங்க சரியா பேச மாட்டாங்க'' என்றாள்.

''சரி'' என்றாள் கதம்பா. புல்லின் ஈரத்தையும், ஒட்டிய ஈர மண்ணையும் உதறிக் கொண்டு எழுந்தார்கள்.

நிலவே நீயும் விலகாதே

தெருவில் அடுத்தவீட்டுப் பால்காரன் 'அம்மா பால்' என்று கத்தியபோது கதம்பாவிற்கு விழிப்பு கொடுத்தது. ராத்திரி கிட்டத்தட்ட இரண்டுமணிநேரம் விழித்துக்கொண்டு பேசியதில் கண் எரிச்சல் கண்டது. மலைகூட அசைந்து கொடுத்திருக்குமோ என்னவோ. அப்பா அசைந்து கொடுக்கவில்லை. அம்மா ஒன்றும்சொல்லத்தோன்றாமல் தாரைதாரையாய்அழுததோடு சரி.' நீகொடுத்து வச்சது அவ்வளவுதான் அனுசூயா ' என்று எண்ணிக் கொண்டாள்.

திடீரென்று அனுசூயா இரவு முழுக்கத் தூங்கினாளோ இல்லையோ என்ற சந்தேகம் எழுந்தது. காலையில் கதம்பா நல்ல வார்த்தை சொல்வாள் என்ற எதிர்பார்ப்புடன் காத்திருந்தாள்? சடக்கென்று படுக்கையில் எழுந்து உட்கார்ந்தாள் கதம்பா. இருள் லேசாகப் பிரியத் தொடங்கி இருந்தது.

அனுசூயா உள் அறைக்குள் நுழைந்து பார்த்துவிட்டு 'தூங்கட்டும்பாவம்' என்றுநினைத்துக்கொண்டு திரும்பப் போகிறசமயத்தில் அதுகண்ணில்பட்டது. நைட்லாம்ப்வெளிச்சத்தில்கூட அனுசூயாவின் கையில் இருந்த கடிதம் நன்றாகவே தெரிந்தது. 'பாலா எழுதிய காதல் கடிதமா? இல்லை கவிதையா?' என்று கதம்பாவின் உள் குரல் கேட்டது. மெல்ல அருகில் நெருங்கி அந்தக் கடிதத்தை உருவினாள். உருவியவுடன் அந்தக் கை சரிந்தது.

'இனிய கதம்பாவிற்கு... என்று கடிதம் தொடங்கியிருக்க கதம்பாவிற்குத் திடீரென்று அகாரணமாய் அந்தப் பயம் நெஞ்சில் ஊற்று நீராய்ப் பீய்ச்சி அடிக்க, ''அனுசூயா... அனுசூயா....'' என்று பரபரப்பாய்க் கத்தினாள். தொடையில் தட்டினாள். ஒரு தயக்கத்துடன் முகத்தில் கை வைத்தாள். அது ஜில்லிட்டுப் போயிருந்தது. ''அனுசூயா'' என்று தொண்டைகிழியக் கத்தினாள் கதம்பா.

மறுபடியும் வானம் தூற ஆரம்பித்திருந்தது.

வீடு சோகத்தின் கனத்தில் கவிழ்ந்திருந்தது. வாசலில் மெல்ல மெல்ல ஆள் சேர்ந்துகொண்டிருந்தது.

வீரராகவன் தான் மிக அதிகமாய் வெளுத்திருந்தார். நாற்காலியில் சால்வையைத் தூக்கி

சுபா



வைத்து முகத்தை அதில் புதைத்துக் கொண்டிருந்தார். முதுகின் பெரிய குலுக்கல்கள் நின்று போய் புஸ் புஸ் என்று மூச்சு மட்டும் சீரில்லாமல் தடுக்கித் தடுக்கி வந்துகொண்டிருந்தது.

சௌரி அதே அறையில் சுவரில் முதுகு சரிந்து ஜன்னல் வழியே வானத்தில் சோகத்தில் சிவந்த கண்களைப் பதித்திருந்தாள். ஒன்றரை மணி நேரத்திற்கும் மேல் அரற்றி அரற்றித் தொண்டைவறண்டுபோயிருந்தது. இவ்வளவு கொடுமான முடிவுக்கு அனுசூயா உடன்படுவாள் என்று சற்றும் சந்தேகப்பட்டிராததில் பொங்குகிற கண்ணீருக்குத் தடையில்லாமல் போயிருந்தது.

பதறிப் பதறி கதறிக் கதறி ஆர்ப்பாட்டங்கள் நடந்து கொண்டிருக்க, ''பெரியம்மா ஆட்டுக்குச் சொல்லியனுப்புங்கப்பா......'' என்றாள் கதம்பா.

''அனுசூயாவை சரிப்படுத்தி வாசல் ரூம்ல கொண்டு போய்ப் படுக்க வைப்போம்... அப்புறம் இந்த லெட்டர் விஷயமெல்லாம் ஊர்லே யாருக்கும் தெரிய வேணும். அதுக்குத்தான் ஏற்கனவே ஹார்ட் ப்ராப்ளமாச்சே... அட்டாக் வந்து உயிர் போயிடிச்சுன்னு சொல்லிடலாம்.''

எப்படிக் கதம்பாவால் கண்ணில் நீரில்லாமல், அந்தச் சாவின் கலக்கமில்லாமல் நிதானமாகப் பேச முடிகிறது என்ற அதிர்ச்சி விர்ராகவனையும், சௌரியையும், கஸ்தூரியையும் குலைத்திருந்தது.

அனுசூயா வாசலறையில் ஜமக்காளம் விரித்துக் கிடத்தப்பட்டாள். தலைமாட்டில் ஒரு சின்ன திரிவிளக்கு ஏற்றப்பட்டது... சொந்து ஊதுவத்திகள் பூஜையறையிலிருந்து ஸ்டாண்டோடு இங்கு இடம் பெயர்ந்தன. வெளியே மெல்ல மெல்ல விஷயம் சுழலாய்ச் சுற்ற ஆரம்பித்திருந்தது.

'' சௌரிம்மா மூத்த பொண்ணு திடீர்னு தூக்கத்திலேயே செத்துப் போயிடுச்சாம்.''

**பா**லா பரபரத்துக் கொண்டிருந்தான். சமையலை முடித்துவிட்டு ஆபீஸ் போகிற வழியில் அனுசூயாவைப் பார்த்துவிட்டு வேறு போக வேண்டும். அடுப்பில் உலை ததும்பிக் கொண்டிருந்த நேரத்தில் எதிர்க் கடையிலிருந்து பையன் வந்தான்.

''சார், உங்களுக்கு ஒரு ஃபோன் வந்திருக்குது.''

பாலாவுக்கு ஆச்சரியமாய் இருந்தது. இவ்வளவு அதிகாலையில் யாராய் இருக்கும்?

''மிஸ்டர் பாலா ?''

''ஆமா பாலா தான்.''

''நான் கதம்பா பேசறேன் பாலா... நீங்க உடனே வீட்டுக்கு வாங்க.''

'' நானே வரதா இருந்தேன்... சமையலை முடிச்சுட்டு அரை மணி நேரத்தில் வந்திடறேன்... என்ன விஷயம்? அனு ஏதாவது சொல்லிச்சா ?''

''வரப்ப கைல ஒரு பூமாலை வாங்கிட்டு வாங்க.''

க்ளிக் என்று தொடர்பு அறுந்து போனது. பாலாவுக்குக் குழப்பமாய் இருந்தது.

பத்தே நிமிடங்களில் சாதத்தை இறக்கி விட்டுப் புறப்பட்டான்.

**தெ**ருமுனை திரும்புகிறபோதே பதற்றம் வந்து ஒட்டிக் கொண்டது. அனுசூயாவின் வீட்டு வாசலில் வேடிக்கை பார்க்கிற, விலகி விமர்சிக்கிற என்ற சின்ன கும்பலொன்று அவன் கவனத்தைச் சிதறடித்தது.

தடதடவென்று ஓடினான். சரிகைச் சிறைக்குள்ளிருந்து சில ரோஜாக்கள் வெளியே விடுதலையாயின. கேட்டுக்குள் நுழைந்து வாசலை அண்டியதும் பகீரென்று இதயத்தில் தீப்பற்றியது.

நுழைகிற ஹாலில் அனுசூயா கிடத்தப் பட்டிருந்தாள். தலையருகில் ஜோதி விளக்கு. அம்மாவும் இப்படித்தான் அன்றைக்குக்கிடத்தப்பட்டிருந்தாள்.

சடாரென்று நெஞ்சில் யாரோ ஓங்கி மிதித்த மாதிரி இருந்தது. மின்னல் ஒன்று மூச்சைப் பிடித்து இழுத்த மாதிரி இருந்தது.

''அனு... அனும்மா...'' என்றான் உதடுகள் துடிக்க.

முகங்கள் திரும்பின.

முதலிரவு அறைக்குள் நுழைகிற மாதிரி ஒவ்வொரு பாதமாய் எடுத்து வைத்து அவளை நெருங்கினான் பாலா.

சரேலென பக்கவாட்டிலிருந்து கதம்பா எதிர்ப்பட்டாள். ''பாலா'' என்று கூப்பிட்டாள். இத்தனை நேரம் தாக்குப் பிடித்த கண்ணீர் சுவரை உடைத்துக் கொண்டது. கன்னங்களில் சீறி இறங்கிற்று. ''அனுசூயா நம்பளையெல்லாம் வுட்டுட்டுப் போயிடிச்சி பாலா... ஐயய்யோ... போய்டிச்சி பாலா.''

''எப்..எப்படிக் கதம்பா? என்ன ஆச்சி?''

பாலாவின் கைகள் தொய்ந்து போயின. ரோஜா மாலை தரைக்கு இறங்கிப் புரண்டது.

கதம்பா விசித்துவிசித்து அழுதாள். பேச்சு வராதவளாய் மௌனக் கண்ணீர் மட்டும் கண்களிலிருந்து கொட்டினாள்.

நிதானமாய்த் தரையிலிருந்து மாலையைக் கையில் எடுத்தாள்.

''போடுங்க, பாலா... உங்க கையால் அனும்மாவுக்குப் போடுங்க.''

பாலா பளீரென்று நெற்றியில் அறைந்து கொண்டான். குனிந்து மாலையை மெல்ல அனுசூயாவின் தோள்களில் வைத்து வயிறு வரை சரியாய்ப் பொருத்தினான்.

''போன் பண்ணியாமேடா... என்ன சொல்ல வந்தேடா... அதைக்கூட கேட்க

---

அவன்: அமிதாப் பச்சன் இனிமே கால்ஷீட் கொடுக்கமாட்டாராமே!

இவன்: இனிமே 'கை' ஷீட்தான் கொடுப்பார். —வீ. ராமலிங்கம்



அனைவருக்கும்
மன நிறைவு தரும்
சுவைமிகு
ஊறுகாய்




# கோகுல்

மாங்காய் ஊறுகாய்

கோகுல்



**டி.எஸ்.ஆர் & கோ**

கோகுல் கார்டன்ஸ்,
கும்பகோணம்.

வியே... ஏதாவது பேசுடா.. ஒம் பாலா வந்திருக்கேன்டா'' என்றான் கெஞ்சுகிறாய்.

அனுசூயா சலனமற்றுக் கிடந்தாள்.

''கதம்பா என்னசொல்றே நீ ?''

வீரராகவன் குரல் உதறிற்று. ''அனுசூயா திமிர்னு இப்படிப் பண்ணிடிச்சேன்னு நாங்கள்ளாம் மனசு கஷ்டப்பட்டுப் போயிருக்கோம். அதுக்குள்ள நீ ஏதோ புதுசாக் கௌப்பறியே.''

''அனுசூயா ஏம்ப்பா செத்துப் போச்சி?''

வீரராகவன் பதில் சொல்லாமல் கௌரியைப் பார்த்தார். கௌரி பதிலில்லாமல் விட்டத்தை வெறித்தாள்.

''எனக்குக் காதல் கத்திரிக்காய் லல்லாம் நம்பிக்கை இல்லேப்பா... ஆனா ஒண்ணு... எனக்குக் காதல்ல நம்பிக்கை இருந்திருந்தா நான் அனு மாதிரி பைத்தியக்காரத் தனமா உயிரை வுட்டிருக்கமாட்டேன்... நீங்களும் ஆச்சி, உங்க குடும்பமும் ஆச்சின்னு என்னைக்கோ அறுத்தெறிஞ்சிட்டுப் பாலா பின்னாலேயே போயிருப்பேன்.... பாவம் அது.. தங்கச்சிங்க வாழ்க்கை, குடும்ப கௌரவம் அது இதுன்னு மெரட்டி, மெரட்டியே அதைப் பழி வாங்கிட்டீங்க... ஜோசியமும், ஜாதகமும் பேசி அது கன்னி கழியறதுக்கு முன்னாலேயே அதும் மூச்சை நிறுத்திட்டீங்க.''

''கதம்பா!'' கௌரியின் குரல் அழுகையில் வெடித்தது. ''அப்படியெல்லாம் பேசாதேம்மா... பின்னாலேங்க நல்லா இருக்கணும்னுதான நாங்க இவ்வளவு கஷ்டப்பட்டோம். அது புரியாம அனுசூயாதான் தப்புப் பண்ணிடிச்சின்னா, நீயும் புரிஞ்சிக்காமதப்புல்லாம் எங்க பேர்ல தான்ற மாதிரிபேசறியே.''

''நியாயம் அநியாயம்லாம் உங்களுக்குஅவ்வளவு சுலபமாப் புரியுமாம்மா? ரெண்டு பேரோட மனசைப்பத்தி கொஞ்சங்கூடக் கவலைப்படாம ஒங்க சாஸ்திரமும், ஜோசியமுந்தான் பெரிசுன்னு ரெனைச்சிக்கிட்ட உங்கிட்ட நியாய அநியாயம்லாம் எடுத்துச் சொன்னா புரியுமாப்பா?''

வீரராகவன் கண்கள் மெல்ல இடுங்கின.

''அதுக்காக?'' கோபம் குரலில் புகுந்து கொண்டது. ''ஜாதி, குடும்ப கௌரவம் பார்க்காமல் எந்த பாலாவை அனுசூயா கட்டிக்கக் கூடாதுன்னு சொன்னேமோ, அவன்கிட்டேயே போய் நீ கழுத்தை நீட்டுவ இல்ல ?''

''அனுவைத் தவிர வேற ஒருத்தி வேணும்னு பாலா சொல்லிடலாம்ப்பா.... அப்படி என்னைக் கல்யாணம் பண்ணிக்கிறதுக்கு பாலாக்கு இஷ்டமில்லாட்டாக் கூட அவங்க வீட்ல, ஒரு சமையக்காரியா, வேலைக்காரியா இருந்து அனுசூயா செஞ்சிருக்க வேண்டியதெல்லாம் செய்யப்போறேம்பா!''

''அனுசூயா செத்துப்போய்ரெண்டு வாரம் கூட ஆவலே... அதுக்குள்ள நீ ஒருத்தி இப்படிப் பேசறியே.''

''நான் அனுசூயா இல்லேப்பா... உங்க மெரட்டலுக்கெல்லாம் அடிபணிஞ்சி போறதுக்கு... இங்க எத்தனை உடம்பு கீழ சாய்ஞ்சாலும் அதுபத்தி எனக்குக்கவலேயில்லை...''

கதம்பா கம்பீரமாய் ஒரு மகாராணியைப் போல் ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்தாள், வாசலை நோக்கி.

பாலா கூடத்துஇருளில் படுத்திருந்தான்.

அப்பாவும் ராதாவும் பிரேமா வீட்டுக்குப் போயிருந்தார்கள். பிரேமாவின் நாத்தனார் குழந்தைக்குப் பெயர்சூட்டு விழாவோ என்னவோ என்ற ஒரு காரணத்துடன்.

அவனுடைய ஆதவனே பறிபோன பிறகு, முற்றத்தில் சோகை நிலவு வெளிச்சந்தர பிரயாசைப்பட்டுக் கொண்டிருந்தது.

பாலா யாவற்றையும் மறந்து அனுசூயாவுடன் உறவாடிக் கொண்டிருந்தான்.

''இனிமே நான் ஒன்னை விடப்போறதில்ல அனு... வுட்டா நீ எங்கேயாவது போயிடறே. என்னைப் பார்க்காம ஏமாத்தறே... வேற யாரையாவது கட்டிக்கிட்டுப் போயிடறேங்கறே... இனிமே ஒன்னை வுடப் போறதில்லே. எனக்கு வேற எதுவும் வேணாம்.... நீதான் வேணும். போயிடாத அனு... போயிடாதே அனு...சரியா...சரியா ?''

''சரி... பாலா'' என்று அனுசூயா சொன்னாள்.

மனத்திற்குள் மாத்திரம் ஒலித்த ஒலி எப்படி வெளியில் இருந்து வருகிறது என்று சட்டென்று வியந்து போனான் பாலா.

''பாலா!''

நிஜமாகவே அனுசூயாவின் குரல் தான்! சட்டென்று எழுந்து உட்கார்ந்தான்.

''அனு!'' என்று குரல் கொடுத்துக் கொண்டே எழுந்தான் பாலா.

''அனு'' என்று மறுபடியும் கரைந்த குரலில் புலம்பிக் கொண்டே வெளிச்சம் தேட ஸ்விட்ச் பாக்ஸில் கையை வைத்தான்.

சில்லென்று ஏற்கனவே இருந்த ஒரு கையில் விரல்கள் பதிய, நாசியருகே பெண் வாசனை வீச, 'அனு' 'அனு' என்று புலம்பிக் கொண்டே கைவிரல்களை இறுகப் பற்றி நெறித்தான்.

'படக்'கென்று ஸ்விட்ச் தட்டப்பட்டுப் பளீரென்று விளக்கு எரிந்தது. இருட்டிலும், பின் வெளிச்சத்திலும் அவனைப் பார்வையால் விழுங்கிக் கொண்டு கதம்பா அங்கே நின்றிருந்தாள்!

**முற்றும்**

---

அரசியல்வாதி : ''பொங்கல் கசக்குது கமலா !''

மனைவி : ''தேர்தல்லே தோத்துப் போனாலே இப்படித்தான். எதையாவது பேசாம தின்னு தொலைங்க!''

—வாணி பாலன்



# சளியினால் ஏற்படும் இந்தத் தொல்லைகளில் எது உங்களை பாதிக்கிறது?




சளியை விரைவில் விரட்ட, அதனால்
உண்டாகும் எல்லாத் தொல்லைகளிலிருந்தும்
விடுதலைபெற, இரட்டிப்பு சக்திவாய்ந்த

# விக்ஸ் ஆக்ஷன்-500




சளி பிடித்ததோ சனி பிடித்ததோ என்பார்கள். சளியினால் ஏற்படும் துன்பங்கள் பல. உற்சாகமற்று நாளே பாழாகிறது. இரட்டிப்பு சக்திவாய்ந்த விக்ஸ் ஆக்ஷன்-500, சளியை போக்க வல்ல எல்லா மருந்துப் பொருள்களையும் ஒரே வில்லையில் கொண்டுள்ளது. சளியை போக்குவதுடன், நீங்கள் சுறுசுறுப்பாய் இருக்க உதவுகிறது.

இரட்டிப்பு சக்திவாய்ந்த விக்ஸ் ஆக்ஷன்-500, நான்கு வழிகளில் செயல்படுகிறது. சளி மற்றும் அதன் உபாதைகள் அனைத்திலிருந்தும் விரைவில் நிவாரணம் அளிக்கிறது.

1. சளியினால் ஏற்படும் தலை வலியையும், உடல் வலியையும் போக்குகிறது.
2. மூக்கடைப்பை நீக்குகிறது.
3. சாதாரண தொண்டை கரகரப்பையும் வலியையும் குணப்படுத்துகிறது.
4. ஜுரத்தையும் ஃபளுவையும் கட்டுப்படுத்துகிறது.

**இரட்டிப்பு சக்திவாய்ந்த விக்ஸ் ஆக்ஷன்-500 சளியை விரட்டும்போதே உங்களை சுறுசுறுப்பாய் வைத்திடும்.**

CHAITRA-B RHL 42 TAM

# இங்கிலாந்திலிருந்து வந்த சிம்மங்கள்





✕ போனி கிரெய்க்: ஸ்பின் போலிங்கைத் தாக்குப்பிடிக்கக் கற்றுத் தந்தவர்

**இங்கிலாந்து ஆட்டக்காரர்கள் சேப்பாக்கத்துக்கு வந்திருக்கும் இத்தருணத்தில் அற்புதங்கள் நிகழ்த்திய சில பழைய இங்கிலாந்து ஆட்டக்காரர்களை இங்கு நினைவுகூர்கிறார் பழம்பெரும் கிரிக்கெட் விமர்சகர் பி. என். சுந்தரேசன்**

**எம். ஸி. ஸி. விஜயம்:**

மாரிஸ் டேட்டின் மகிமையை அறியாத கிரிக்கெட் பிரியர்கள் இருக்க முடியாது. அவருடைய ஃபாஸ்ட் மீடியம் போலிங் எல்லாரையும் திணற அடித்துக் கொண்டிருந்த போது இந்தியக் குழுவின் கடைசி ஆட்டக்காரரான சி. ஆர். கணபதி அவர் பந்துகளை விளாசினார். அன்று சேப்பாக்கில் ஏகப் பரபரப்பு. என்னடாது பதினோராவது ஆட்டக்காரர் இப்படி பவுண்டரியாக அடித்துத் தள்ளுகிறாரே என்று டேட் செய்வதறியாது தலையைச் சொறிய ஆரம்பித்து விட்டார்!

ஜியார்ஜ் பிரவுன் ஒரு பூரணமான ஆல்—ரவுண்டர். பாட்டிங், போலிங் இரண்டிலும் பிரகாசித்ததோடு விக்கெட் கீப்பிங்கிலும் வெளுத்துக் கட்டினார். அதோடு எம். சி. சி. அணியின் விதூஷகரும் அவர்தான். அடிக்கடி கிரிக்கெட் ரசிகர்களைக் குஷிப்படுத்தி வைப்பார் தமது கோமாளித்தனங்களால்!

பிரவுனும் டேட்டும் விளையாடிய எம்.சி.சி அணிக்குத் தலைவனும் இருந்த ஆர்தர் கில்லிகன் இந்திய கிரிக்கெட்டின் வளர்ச்சிக்குக் கணிசமாய் உதவியுள்ளார். டெல்லி டெஸ்டின் போது இந்தியாவில் ஒரு கிரிக்கெட் கண்ட்ரோல் போர்ட் நிறுவ வேண்டும் என்று ஒரு கூட்டத்தில் அடித்துக் கூறி இந்திய கிரிக்கெட்டின் தரம் உயர வழி வகுத்தவர் இவரே.

**கிரிக்கெட்டிற்கு ஒரு லார்ட் டென்னிஸன்**

1937—38—ல் பம்பாய் ப்ரேபோர்ன் ஸ்டேடியத்தின் திறப்பு விழாவையொட்டி விஜயம் செய்த ஆங்கிலேய அணியின் காப்டன் லார்ட் டென்னிஸன். சென்னை டெஸ்டில் அமர்சிங், வினு மன்கட் ஆகியோர் முயற்சியால் இந்தியாவுக்குமா பெரும் வெற்றி கிடைத்திருந்தது. இங்கு நடந்து வந்த ஒரு ஆங்கிலோ இந்திய நாளிதழில் பணியாற்றிய ஆங்கிலேயப் பத்திரிகையாளர் ஒருவர் டென்னிஸனிடம் அனுதாபம் தெரிவித்துவிட்டு இந்தியாவை ஊக்குவிக்கவே இங்கிலாந்து அணி ஆட்டத்தை விட்டுக் கொடுத்திருக்கிறது என்ற ரீதியில் பேசினார். இந்தியாவை இப்படிக் குறைத்து மதிப்பிட்டதில் ரௌத்ராகாரக் கோபம் வந்து விட்டது டென்னிஸனுக்கு. அந்தப் பத்திரிகையாளரைக் கழுத்தைப் பிடித்து வெளியே தள்ளிவிட்டார்!

கிரிக்கெட் வட்டாரத்தில் மிகப் பிரகாசமான நபர்களில் ஒருவர் டென்னிஸன். அவருடைய ஆட்டத் திறனோடு இணைந்திருந்தது ரசிகத் தன்மை. ரசித்து விளையாடி ரசிகர்களைப் பெற்றார்.

டென்னிஸனின் அணியில் இடம் பெற்ற யார்ட்லி என்ற இளைஞர் படிப்படியாக உயர்ந்து இங்கிலாந்து காப்டன் ஆனார். ஆனால் அப்போதும் அவர் தம் சொந்த







ஊரான யார்க்ஷயருக்கு வேறு ஒருவரின் தலைமையின் கீழ் விளையாடினார். டெஸ்டி லிருந்து மாநில கிரிக்கெட்டுக்கு காப்டன் பதவி வேட்கையோடு திரும்பும் நம் ஆட்டக் காரர்களுக்கு இது நல்ல படிப்பினை!

## கிரிக்கெட்டில் கவித்துவம்:

1933–34–இல் ஒரு இங்கிலாந்து அணி நம் நாட்டுக்கு வந்தது. அதன் தலைவர் டக்லஸ் ஜார்டின் இந்தியாவுக்குக் கடின மான டெஸ்ட் மாட்சுகளை எப்படி எதிர் கொள்வது என்று பாடம் புகட்டினார்.

நிகலஸும் கிளார்க்கும் ஜார்டினின் கீழ் விளையாடிய வேகப் பந்து வீச்சாளர்கள். நல்ல உயரமும், கவர்ச்சிகரமான தோற்ற மும் விகசிக்க ஓடி வந்து கிளார்க் பந்து வீசி யது ஒரு கவிதை போல் தான் இருந்தது. பூபோல் அசைந்து வந்த அக்கவிதை பாட்ஸ் மனைப் புயல் போல் தாக்கியது. ஒருமுறை, அவர் பந்து வீச்சில் நலுமல் என்ற இந்திய ஆட்டக்காரருக்கு முகத்தில் அடிபட்டுவிட் டது. பார்வையாளருள் ஒருவர் கிளார்க்மீது கல்லெறிந்தார். தெர்ட்மானில் நின்று கொண்டிருந்த கிளார்க் குனிந்து கல்லைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு அது வந்த திக்கை நோக்கி நடந்தார். பிரசித்தி பெற்ற அவர் கோபத்தை அறிந்தவர்களுக்கு பயம் கவ்விக் கொண்டது. எங்கும் நிசப்தம். மெல்ல, மெல்லக் குனிந்து மிருதுவாகக் கல்லைப் புல் தரையில் வைத்துவிட்டுத் தம் இடத்துக்குத் திரும்பினார் கிளார்க்! எங்கும் நிம்மதிப் பெருமூச்சு.

இந்த கிளார்க்கின் பௌன்ஸர்களை நாலு திசைகளிலும் அடித்தார் நம் பாடியாலா வைச் சேர்ந்த யுவராஜ்.



⌘ வடேகருடன் டோனி லூயிஸ்: அழகாக நிர்வகித்தார்

எல்லோர் உள்ளங்களையும் கொள்ளை கொண்ட போலர் என்னவோ வெரிடிதான். இடதுகை ஸ்பின் போலர், நல்ல உயரம், நளினமான தாளகதியுடன் கூடிய ஓட்டம். சென்னை டெஸ்டை இங்கிலாந்து வெல் வதற்குப் பிரதான காரணகர்த்தாவாக இருந்தார் வெரிடி.

எம். சி. சி. யின் அடுத்த இந்திய விஜயம் பதினேழு ஆண்டுகளுக்குப் பின்னரே. இடைக்காலத்தில் யுத்த சேவை நிமித்தம் இந்தியா வந்திருந்த டென்னிஸ், காம்ப்டன் போன்ற பெரிய ஆட்டக்காரர்கள் ரஞ்சி பந்தயங்களில் ஆடினர். ஹோல்கருக்காக விளையாடினார் இணையற்ற டென்னிஸ் காம்ப் டன். ப்ரேபோர்ன் ஸ்டேடியத்தில் பம் பாய்க்கு எதிராக அவர் அடித்த டபுள்செஞ் சுரி மறக்க முடியாதது. அற்புத பாட்டிங் கலையை ரசித்தோம் என்பது தவிர ஒன்றும், இரண்டுமாக ரன்களை எடுக்க அவர் தயங் கியதேயில்லை என்பது குறிப்பிடத்தக்கது. இதைத் தவிர காம்ப்டன் இடதுகை ஸ்பின் பந்து வீச்சில் அடிக்கடி பிரயோகித்த சைனா மான் அஸ்திரமும் புகழ் பெற்றது.

## சுதந்திரத்திற்குப் பின்:

ஒரு நாட்டின் சரித்திர நிகழ்ச்சி விளை யாட்டு மைதானத்தில் கூடப் பாதிப்புகளை ஏற்படுத்துகிறது. நம் நாட்டின் மீது பிடி இழந்து விட்டது தான் காரணமோ அல்லது நம் ஆட்டத் திறமையை அந்த அளவுக்குத் தான் அவர்கள் மதித்தார் களோ தெரியவில்லை, இங்கிலாந்து இரண் டாம் தர அணிகளையே இங்கு அனுப்பிக் கொண்டிருந்தது. எனவே இந்தக் கால கட்டத்தில் இந்தியா வந்த இங்கிலாந்து வீரர்களில் ஒரு சிலரே நினைவில் நிற் கிறார்கள்:

டெட் டெக்ஸ்டர் – இந்தியாவிடம் ரப்பர் இழந்த முதல் காப்டன். பாரிங்டன் – கோமாளித்தனங்களால் பார்வையாளர்களைக் கலகலப்பாய் வைத்துக் கொள்வார். இவ ருடைய டிஃபன்ஸ் மூடிய கதவு போல் உறுதி யானது! ''நான் சந்தித்தவருக்குள்ளேயே இவருக்கு போல் செய்வதைத்தான் மிகவும்

## ஒரு டைரியின் சில பக்கங்கள்



# கிரிக்கெட் க்விஸ்



1. உலகில் ஐந்தே கிரிக்கெட் மைதானங்களுக்குத்தான் சிறப்பான செல்லப் பெயர்கள் வைக்கப்பட்டுள்ளன. இவற்றில் நான்கு இந்தியாவில் உள்ளன... அவை எவை?

2. இந்தியாவில் ஒரே நகரத்தில் மூன்று டெஸ்ட் பந்தய மைதானங்கள் உள்ளன...? அது எந்த நகரம்...? அந்த மைதானங்களின் பெயர்கள் என்ன...?

3. இந்திய கிரிக்கெட் சரித்திரத்திலேயே 74–75–ம் ஆண்டு மேற்கிந்தியக் குழுவுடனும், 75–76–ம் ஆண்டு இங்கிலாந்து குழுவுடனும்ஆடும்போது மூன்று சர்மாக்கள் இடம் பெற்றனர்... அவர்களின் பெயர்கள் என்ன...?

4. இந்தியக் கிரிக்கெட்டில் ஒரு ஆட்டக்காரர் முதல் டெஸ்டில் ஆட்டக்காரராகவும், இரண்டாவது டெஸ்டில் காப்டனாகவும், மூன்றாவது டெஸ்டில் பன்னிரண்டாவது ஆட்டக்காரராகவும் இருந்தார். அவர் யார்...?

5. இந்திய ஆட்டக்காரர்களான லாலா அமர்நாத், நாரி காண்டிராக்டர், அஜித் வடேகர் ஆகிய மூவரும் இந்தியக் காப்டனாக இருந்ததோடல்லாமல் வேறொரு ஒற்றுமையும் உண்டு.. அது எது...?

6. 1971–ல் இங்கிலாந்து, மேற்கிந்தியக் குழு இரண்டோடும் இந்தியா வெற்றி ரன்களை அடிக்கும்போது பிச்சில் ஆடிக் கொண்டிருந்த ஒரு ஆட்டக்காரர் யார்...?

7. சேட்டன் செளஹானின் சாதனை என்ன...?

8. மேற்கிந்திய ஆட்டக்காரர்களான கிர்னிட்ஜ், ஹெயின்ஸ், இருவரையும் ஒரே இன்னிங்ஸில் 'டக்'கில் அவுட் ஆக்கிய பெருமை ஒரு இந்தியருக்கு உண்டு... அவர் யார்...?

விடைகள் 52–ம் பக்கம்.

தொகுப்பு: கோ. சு. சுரேஷ்
நன்றி: இல்லஸ்டிரேட்டட் வீக்லி

---

கஷ்டமானதாகக் கருதுகிறேன்'' என்றார் தமது பிரசித்தி பெற்ற லெக் ஸ்பின்னர் சந்திரசேகர்.

**இன்னும் சமீபத்தில்...**

இந்தியா வந்த டோனி லூயிஸ், ஆலன் நாட், டோனி கிரெய்க் போன்றோரை நேயர்கள் மறந்திருக்க மாட்டார்கள். கிரெய்க் போன்ற படபடப்பு மிகுந்த ஆட்டக்காரர்கள் அடங்கிய அணியை அழகாக நிர்வகித்துச் சென்றார் டோனி லூயிஸ். ஓய்வே எடுத்துக் கொள்ளாத ஆட்டக்காரர் ஆலன்நாட். இரு பந்துகளுக்கிடையேயோ, இரு ஓவர்களுக்கு இடையேயோ கூடச் சற்று நேரம் சும்மா இருக்க மாட்டார். தேகப் பயிற்சி செய்வார்! விக்கெட் கீப்பிங்கில் விழிப்புடனிருந்து அற்புதமாய் செயல்பட்டார். டோனிகிரெய்கின் பெருமை 1976–77 தொடரில் அவர் காப்டனாகி இந்தியாவை முதல் மூன்று டெஸ்டுகளில் வென்று நொறுக்கிய போது பிரகாசித்தது. இந்திய ஸ்பின்னர்களை எப்படித் தாக்கிப் பிடிக்க வேண்டும் என்று வழிகாட்டினார். நெடிதுயர்ந்து நின்ற இவர், ஒப்புநோக்க வாமனராய்த் தோன்றிய விசுவநாத்தை 1973–ல் அவரது பம்பாய் டெஸ்ட் செஞ்சுரியைப் பாராட்டும் முகமாக அள்ளித் தூக்கி ஊஞ்சலாட்டியதை மறக்கவே முடியாது!

**ஆட்டத்துடன் இணைந்தவர்கள்:**

அதிகாரபூர்வமாய் இந்தியாவுக்கு விஜயம் செய்தவர்களைத் தவிர வேறு பல இங்கிலாந்து ஆட்டக்காரர்கள் கிரிக்கெட் சரித்திரத்தில் பொன் எழுத்தில் தங்கள் பெயர்களைப் பதிவு செய்துள்ளனர். அவர்களுள் ஒருவர் ரோட்ஸ். ஆட்டம் கற்றுத் தர இந்தியா வந்த இவர் 1921–இல் பம்பாய் பென்டாங்குலரில் 19 விக்கெட்டுகள் எடுத்ததுடன் இரண்டு மாட்சுகளில் முறையே 156, 183 ரன்களும் எடுத்துச் சாதனை கண்டார். ஆட்டத்தில் ஊறிப் போய் 90 வயது வரை வாழ்ந்தார் ரோட்ஸ். கண்பார்வை இழந்த பிறகும் பந்து மட்டையில் படும்போது எழும் ஓசையின் ஏற்றத் தாழ்வைக்கொண்டே ஆட்டத்தின் போக்கை உணர்ந்து ரசித்து வந்தார்!

தமிழ் வடிவம்: சிதார்வி

உங்களுக்காகவே



# அழகு மிளிரும் அடர்த்தியான கூந்தலுக்கு

# குணா

## கூந்தல் தைலம்

தலை மயிர் உதிர்தல், செம்பட்டை நிறம்.
பருவத்திற்கு முன்பு ஏற்படும் பித்த நரைகள் மாறும்.
தினசரி தலைக்குத் தடவி வந்தால் தலை மயிர்
நீண்டு கறுத்து அடர்த்தியாய் வளரும். தலை அரிப்பு
பொடுகு. மண்டையில் சொறிந்தால் செதில உரிதல்
குணமாகும். பெண்கள் ஆண்கள் அனைவரும்
விரும்பி உபயோகிக்கின்றனர்
1 பாட்டில் விலை ரூ 16-25 V.P.P. உண்டு
தபால் செலவு இல்லை.

தேவைக்கு எழுதவும்

**நவசக்தி வைத்தியசாலை**
**தபால் பெட்டி எண் 7 - சேலம் 636 001**

---

***எமது தைலம் கிடைக்குமிடங்கள்:*** 1. சேலம் — ரோக மெடிக்கல்ஸ். 2. ஆத்தூர் — முத்து மெடிகல்ஸ், 3. நாமக்கல் — கஸ்தூரிபா மெடிக்கல்ஸ். 4. ராசிபுரம் — ராசி மெடிக்கல் ஸ்டோர்ஸ், 5. மேட்டூர் — ஜெயலஷ்மி மெடிக்கல்ஸ், 6. சென்னை-4 — ஆர். ஆர். பார்மஸி, 7. தர்மபுரி — விஜயலஷ்மி மெடிக்கல்ஸ் 8. கிருஷ்ணகிரி — கோபாலகிருஷ்ணா மெடிகல்ஸ் 9. ஒசூர் — மூர்த்தி மெடிக்கல்ஸ் 10. பெங்களூர் — பிரசாத் ஸ்டோர்ஸ் K.G. சர்கிள். 11. சென்னை-3 — ஹேமா மெடிக்கல்ஸ். 12. அமிஞ்சிகரை — வேலவன் மெடிக்கல்ஸ் 13. குடியாத்தம் — திருமகள் மெடிக்கல்ஸ். 14. காஞ்சிபுரம் — லஷ்மி மெடிகல்ஸ். 15. அரக்கோணம் — அகிலாம்பிகை மெடிக்கல்ஸ். 16. ஆரணி — பாக்கியம் அண்ட் கோ., மருந்துகடை. 17. திருவண்ணாமலை — அன்னை மெடிக்கல்ஸ். 18. வேலூர் (NA) — பாரத் மெடிக்கல்ஸ். 19. திருப்பத்தூர் (NA) — லஷ்மி மெடிக்கல்ஸ் 20. விழுப்புரம் — அன்பு மெடிக்கல்ஸ் 21 கள்ளக்குறிச்சி — A. ராஜீ நாட்டு மருந்துக்கடை. 22. கும்பகோணம் — செல்வம் மெடிக்கல்ஸ். 23. தஞ்சாவூர் — சிட்டி மெடிக்கல்ஸ். 24. திருச்சி — சண்முகா மெடிக்கல் ஹால் 25. திண்டுக்கல் தமிழ்நாடு சித்த மருந்துக்கடை 26. பெரியகுளம் — N. லஷ்மணன் மருந்துக்கடை. 27. தேனி — ஆண்டாள் மெடிகல்ஸ் — 28. மதுரை — குமார் மெடிகல்ஸ். 29. மதுரை — ஸ்டேட் மெடிக்கல் கார்பரேசன் (24 மணி நேர கடை). 30. ராமநாதபுரம் — பாத்மா மெடிக்கல்ஸ். 31. காரைக்குடி — மலேசியா ஜெனரல் ஸ்டோர்ஸ். 32. விருதுநகர் — S.S.K. மெடிகல்ஸ். 33 தூத்துக்குடி — அன்பு மெடிக்கல்ஸ். 34. திருநெல்வேலி — கோமதி மெடிகல்ஸ். 35. பாளையங்கோட்டை — ஒலிவா இந்தியன் மெடிகல்ஸ் 36. நாகர்கோவில் — S. நல்ல பெருமாள் மருந்துக்கடை. 37. தென்காசி — M.R. மெடிக்கல்ஸ். 38. ராஜபாளையம் — அரவிந்த் மெடிக்கல்ஸ். 39. சிவகாசி — சிவகாசி மெடிக்கல்ஸ். 40. கோவில்பட்டி — சாந்தி மெடிகல்ஸ் — 41. ஸ்ரீ வில்லிபுத்தூர் — பாலாஜி மெடிக்கல்ஸ். 42. உடுமலை — ஜாம் ஜாம் மெடிகல்ஸ் 43. பொள்ளாச்சி — ராமநாதன் மெடிகல்ஸ் 44. கோவை — காசிநாத் அண்ட் கோ., 45. கோவை — திருமலை மெடிகல்ஸ் காந்திபுரம் 46. திருப்பூர் — கீதா மெடிக்கல்ஸ். 47. சென்னை-17 — சுந்தரம் ஸ்டோர்ஸ் 49. கோபி — [redacted] பார்மஸி 49. ஈரோடு — ஸ்ரீ ராகவேந்திர சாமி மெடிகல்ஸ் 50. திருச்சி ஜங் — சுபாஸ்ரீ மெடிகல்[redacted] 1. புதுக்கோட்டை — மீனு பார்மஸி 52. திருவாரூர் — அன்னபூர்ணா மெடிக்கல்ஸ் 53. மாயவரம் — [redacted] மெடிக்கல்ஸ் 54. சிதம்பரம் — ராஜா மெடிக்கல்ஸ் 55. விருத்தாசலம் — ஜெயா பார்மஸி 56. சேலம் செவ்வாய்பேட்டை — பிரபாத் மெடிக்கல்ஸ் 57. தொட்டியம் — மீனாஷி மெடிக்கல்ஸ் 58. கிருஷ்ணகிரி - பி. கே. பி. எம். ஜி. மெடிக்கல்ஸ் 59. கரூர் - அண்ணாமலை மெடிகல்ஸ் 60. நாமக்கல் — சாரதி மெடிகல் ஹால். 61. காரைக்குடி சரோஜா டாக்ஸ் ஸ்டோர்ஸ். 62. பாண்டிச்சேரி — ராஜா மெடிகல்ஸ். 63. சென்னை-15 - மஹாவீர் சந்த் & கோ (கெமிஸ்ட் & டிரகிஸ்ட்) 64. காரைக்கால் — ரங்கா ஸ்டோர்ஸ்

---

**குணா சல்ப்:** வெட்டுக்காயம், தீப்புண், படை, சொறி, சிரங்கு, சேற்றுப்புண் போன்ற ரணங்களை விரைவில் குணமடையச் செய்கிறது. 15 கிராம் பாக்கெட் ரூ. 3-10 தான். எமது எல்லா ஸ்டாக்கிஸ்டுகளிடமும் கிடைக்கும்.



போகாக்



எட்மாண்ட்ஸ்



பால் ஆல்லாட்



டேவிட் கோவர் – காப்டன்

காட்டிங் – உதவி காப்டன்





# அக்கரைச் சீமை

டோனி ப்ரௌன் (மானேஜர்)



ஃபாஸ்டர்



பி. என். பிரன்ச்





பால்டௌன்டன்



கௌட்ச்



ராபின்சன்



ஃபௌளர்



எல்லிஸன்

# ஆட்டக்காரர்கள்

கோவான்ஸ்



விக்மார்க்ஸ்



லாம்ப்



# "தத்தி வந்து கொஞ்சிடுமோ, கத்தி அலகால் கொத்திடுமோ?"



நினைவுகள் நிறைந்திடும் அழியாத
கோலமே வாழ்க்கையெனும் அற்புதம்.
பாசம், நேசம், உல்லாசம், பெருமிதம் போன்ற
நவரசம் ததும்பும் தருணங்கள் எங்கும்,
எப்போதும் நேரலாம்.

அத்தருணமே அவற்றைப்
புகைப்படமாக எடுத்திடுவீர்! குறிப்பாக,
பிளாக் & ஒயிட் பிலிமில் எடுத்தால்
அவை காலமெல்லாம் மங்காது.

புகைப்படங்கள்,
என்றென்றும் வாழும் பசுமையான
நினைவுச் சோலைகள்.




மனம் அள்ளும்
நினைவுகளை
சிறை கொள்ளும்!




**இந்து ரோல் பிலிம்**
**மற்றும் ப்ரோமைடுகள்**



# விருந்தினர் வரிசை

● இங்கிலாந்து கோஷ்டியின் காப்டன் டேவிட் கோவர் காப்டனாக முதல் தடவை இந்தியாவுக்கு வருகிறார். இவர் இடதுகை பாட்ஸ்மன். பீல்டிங்கில் அசகாய சூரர். நெடிதுயர்ந்த சுருள்முடி படைத்த இந்த அழகன் ரஸிகர்களைப் பாட்டிங்கில் அயர வைப்பவர். 1978–ல் முதல் டெஸ்ட் பிரவேசம். கிரிக்கெட்டுக்காகச் சட்டத்துறை துறந்தவர். 1982–ல் இவருக்கு உதவி காப்டனாகப் பதவி உயர்வு கிட்டியது. இருபத்தைந்தாவது வயதில் இங்கிலாந்து குழுவின் காப்டனாகப் பணியாற்ற ஒரு சந்தர்ப்பம்! பாகிஸ்தான் குழுவுக்கெதிராக லார்ட்ஸில் வில்லிஸ் அடிபட்டு விலகிய போது இவருக்கு இந்தப் பொறுப்பு வந்தடைந்தது. இவரது சாதனைகள்: 24 டெஸ்ட் மாட்சுகள்; 4 சதங்கள்; 24 கஷ்டமான காட்ச்கள்! புதிய காப்டனுக்கு நல்வாழ்த்துக்கள்!

● மைக்கேல் காட்டிங் 1957–ம் வருஷம் பிறந்தவர். இவரது சகோதரர் ஆர்ஸனல் கால்பந்து ஆட்டக்காரர். லண்டன்வாசி. குள்ளமானவரானாலும் கீர்த்தி பெற்றவர். வலதுகை பாட்ஸ்மன். நடுத்தர விரைவுப் பந்து வீச்சாளரும் கூட. 1977–ம் வருஷம் இவருக்கு டெஸ்ட் தொப்பி கிடைத்தது. இவருக்கு உதவி காப்டன் பதவி இந்தத் தடவை கிடைத்திருக்கிறது. இவர் ஆடியது 22 டெஸ்ட் மாட்சுகள். எடுத்த ரன்கள் 797. 17 டெஸ்ட் காட்ச்கள்.

● ஃபௌலர் இடதுகை ஆரம்ப பாட்ஸ்மன். இவர் உடற்பயிற்சி ஆசிரியர். பாகிஸ்தான் பாஸ்ட் பௌலர் இம்ரான் கானின் அசுர வீச்சைச் சமாளித்து 86 ரன்கள் எடுத்தது இவரது ஆஸ்திரேலிய டெஸ்ட் தொடருக்கு பாஸ்போர்ட்டாக அமைந்தது! விக்கெட் கீப்பிங்கிலும் தேர்ச்சி பெற்றவர். காலில் பலத்த அடி பட்டிருந்தும் வார்விக்ஷயர் குழுவுக்கெதிராக ரன்னருடன் ஆடி சதமெடுத்தது இவரது சாதனைகளுள் ஒன்று.

● ஆலன் லாம்ப் தென் ஆப்பிரிக்காவில் கேப் மாகாணத்தில் ஆங்கிலத் தம்பதிகளுக்குப் பிறந்தவர். 1977–ம் வருஷம் லாம்ப் இங்கிலாந்தில் குடியேறினார். வலது கை பாட்ஸ்மன். பருத்த சரீரம்; அழுத்தமான பேர்வழி! பெயர்தான் லாம்ப். ஆட்டத்தில் புலி! இந்தியாவுக்கெதிராக ஒருநாள் சர்வதேசப் போட்டியில் இவரது 99 ரன்கள் பிரசித்தம். ஓவல்டெஸ்டில் இந்தியக்குழுவுக்கெதிராக இவரது 107 ரன்கள் மறக்க முடியாதவை.

● இங்கிலாந்துக் குழுவின் ஆல்ரௌண்டர்களில் மார்க்ஸ் ஒருவர். 1982–ல் பாகிஸ்தான் குழுவுக்கெதிராகத் தான் டெஸ்ட் 'தொப்பி' கிடைத்தது. பாகிஸ்தான் குழுவுக்கெதிராக இவர் எடுத்த 'Bat & Pad' காட்ச் இவருக்கு ஆஸ்திரேலியப் பயணத்துக்குத் துருப்புச் சீட்டாக அமைந்தது!

● பால் ஆல்லாட் வலதுகை பாட்ஸ்மன். இவர் நடுத்தர பாஸ்ட் பௌலராக 23.09 ஓவரில் 85 முதல் தர பாட்ஸ்மன்களை வீழ்த்தியிருக்கிறார். இங்கிலாந்து குழு 'ஆஷஸ்' தக்க வைத்தபோது பால் ஆல்லாட்டின் பங்கு அதில் உண்டு. 88 ரன்களில் 4 விக்கெட்டுகள்; 52 நாட் அவுட் ஆகியன

● நீண்ட நாட்கள் நடைபெற்ற கிரிக்கெட் பந்தயம் இங்கிலாந்திற்கும், தென்னாப்பிரிக்காவிற்கும் இடையே நடைபெற்ற கால வரையறையற்ற பந்தயம் ஆகும். இந்த பந்தயம் டர்பனில் 1939ஆம் ஆண்டு தேதி நடைபெற்றது. இங்கிலாந்து குழுவை ஏற்றிச் செல்ல இருந்த கப்பல் புறப்பட்ட காரணத்தினால் இந்தப் பந்தயம் பத்தாவது நாளுடன் கைவிடப்பட்டது. இதில் எட்டாம் நாள் ஆட்டம் மழையினால் தடைப்பட்டது.

—ஏ.கே. நாசர்.



> "விளையாட்டு வீரருக்குத் தலைவலி வந்தால் எப்படி வரும்?"
> "தெரியலே எப்படி வரும்?"
> "Win... winன்னு...!"
> -சக்தி கமலேஸ்வரன்.

இவரது ரிகார்டுகள் 1981–82–ம் ஆண்டில் இந்தியாவுக்கு விஜயம் செய்த இங்கிலாந்துக் குழுவில் இடம் பெற்றிருந்தார்.

● உயரமான பலசாலி எட்மாண்ட்ஸ். இடதுகை சுழல்பந்து வீச்சாளர். ஆங்கிலத் தந்தைக்கும், பெல்ஜிய அன்னைக்கும் பிறந்த எட்மாண்ட்ஸ் வடக்கு ரொடீஷியாவிலுள்ள ஜாம்பியாவில் வளர்ந்தவர். கல்வி கற்க இங்கிலாந்து வந்தவர். 1973–ல் கேம்பிரிட்ஜ் காப்டனானார். 1975–ல் டெஸ்ட் பிரவேசம். எட்மாண்ட்ஸின் ஆற்றலைக் கண்டு அஞ்சியவர்கள் ஒரு சமயம் 'பிட்ச்'சில் எண்ணெயை ஊற்றி வைத்து வேடிக்கை பார்த்திருக்கிறார்கள்! 17 ரன்களில் 5 விக்கெட் வீழ்த்தியது இவரது அரிய சாதனை. 1977–78–ல் பாகிஸ்தான் குழுவுக்கெதிராக 66 ரன்களில் ஏழு விக்கெட் சரித்தது பெரும் புகழ் தேடித் தந்தது. இவர் ஆடிய டெஸ்ட்கள் 21; 367 ரன்கள். 55 விக்கெட்டுகள். 22 காட்ச்கள்.

● போகாக் வாயாடி என்ற பெயர் பெற்றவர். ஆப்ஸ்பின்னராகவும் புகழ் பெற்றவர். நல்ல உயரம், பலசாலி. 1967–68–ல் மேற்கிந்தியத் தீவுக் குழுவுக்கெதிராக முதல் டெஸ்ட் பிரவேசத்திலேயே இவரது பௌலிங் பரிமளித்தது. டிட்மஸ் அடிபட்டுக் கொண்டதால் இவருக்கு அந்த டெஸ்ட் சான்ஸ் கிடைத்தது! ஒருசமயம் 11 பந்து வீச்சுகளில் 7 விக்கெட்டுகளைச் சரித்துப் பார்வையாளரைப் பிரமிக்கச் செய்தார் போகாக்.

● விக்கெட் கீப்பர் பால் டௌன்டனிடம் அங்க சேஷ்டைகள் நிறையவே உண்டு. வலதுகை பாட்ஸ்மன். 1979–ல் இவர் டெஸ்ட் பிரவேசம் செய்தார். இவர் எடுத்த ரன்கள் பல சமயங்களில் இக்கட்டான கட்டத்தில் வெற்றிக்கு உதவியுள்ளபோதிலும் இவர் கோட்டைவிட்ட முக்கியமான 'காட்ச்' ஒன்று இவரை டெஸ்ட்டிலிருந்து சிலகாலம் ஒதுக்கி வைத்தும் வேடிக்கை பார்த்திருக்கிறது!

● இங்கிலாந்து குழுவில் இளம் ஆட்டக்காரர்கள் ஆர். டி. ராபின்சனும், மார்க்ஸும் சிறந்த பாட்ஸ்மன்கள்.. கௌட்ரியும் எல்லிசனும் ஆல்ரௌண்டர்கள். பாஸ்டர், கோவான்ஸ் ஆகியோர் விரைவுப் பந்து வீச்சாளர்கள். பிரென்ச் மற்றொரு விக்கெட் கீப்பர்.

● இங்கிலாந்து குழுவின் மானேஜர் ஏ.எஸ். ப்ரௌன். உதவி மானேஜர் என். இப்போர்ட். இங்கிலாந்து குழுவின 'டீம்'மாக வைத்திருக்க 'பிஸியோ தெரப்பிஸ்ட்' தாமஸ் இருக்கிறார்! இங்கிலாந்து குழுவினருக்கு நல்வாழ்த்துக் கூறி சுவாரஸ்ய கிரிக்கெட்டுக்கு நல்வரவு கூறுவோம்!

தொகுப்பு: பி. எஸ். எம்,
புகைப்படங்கள்: பாலா ஜீ

# ஈடு இணையற்ற கூரை




"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் உறுதியாக நீடித்து நிற்கும் ஈடு இணையற்ற கூரைகளுக்கு

"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகள் சிக்கனத்திற்கும், சீரிய தரத்திற்கும், குறைந்த செலவில் நிரந்தரப பாதுகாப்பைத் தருவதற்கும் தன்னிகரற்றவை.

அதிநவீன தொழில் நுட்பமும், மிகக் கடுமையான தரக்கட்டுப்பாடும்தான் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட தகடுகள் இன்று முதன்மையாகத் திகழ்வதின் காரணம்.

எனவேதான், மத்திய,மாநில அரசுத் துறையினரும், கட்டிடக் கலை வல்லுநர்களும் "ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் தகடுகளை ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கின்றனர்

**Ramco**

"ராம்கோ" அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட தகடுகளும் மற்ற உபகரணங்களும்- தரமான கூரைகளுக்கு மட்டுமல்ல நிரந்தரமான பாதுகாப்புக்கும்கூட



சதர்ன் அஸ்பெஸ்டாஸ் சிமெண்ட் லிமிடெட
739, அண்ணா சாலை, சென்னை-600 002 போன் 82006
பரிபூரண விற்பனையாளர்கள் ராஜா சாரிடி டிரஸ்ட்
அலுவலகங்கள் : பெங்களூர் ● எர்ணாகுளம் ● ஹைதராபாத ● புனா ● விஜயவாடா
தொழிற்சாலைகள் : அரக்கோணம் (தமிழ் நாடு) கரூர் (கர்நாடகம்)

CAS/SACL/3/82 TAM / A

# ரஞ்சி டிராஃபி

"குட்டி ராஜ்ஜியத்தின் இளவரசர் மாபெரும் ஆட்டத்தின் மன்னர்" என்றும் "மந்திரவாதி" என்றும் புகழ்பெற்ற நவநகர் ரஞ்சித்சிங்ஜியிடம் ஒரே குறை. அவர் தம்மை இங்கிலாந்து ஆட்டக்காரராகக் கருதியதுதான். ஆயினும் இந்திய கிரிக்கெட் போர்டு அவர் ஆட்டத் திறனை மட்டுமே பார்த்து ரஞ்சி கோப்பைப் பந்தயங்களை உருவாக்கியது.


○ ரகு



## பூபேந்திரசிங்ஜி செய்த புண்ணியம்

அனைத்திந்திய ரீதியில் ஒரு கிரிக்கெட் போட்டி ஏற்படுத்தி அதற்கு ஒரு சுழற் கோப்பையை நிறுவலாம் என்ற யோசனையை வெளியிட்டவர் ஏ.எஸ்.டிமெல்லோ.

அந்த யோசனையை உடனே ஏற்று, ஓர் ஆண்டுக்கு முன்னால் அகால மரணம் அடைந்த ரஞ்சியின் பெயரை நிரந்தரமாக விளங்கச் செய்யும் பெருமையும் பூரிப்பும் தனதாக வேண்டும் என்று கேட்டுக் கொண்டார், பாட்டியாலா மகாராஜா பூபேந்திர சிங்ஜி. 7500 ரூபாய் பெறுமானமுள்ள ரஞ்சிக் கோப்பையை வழங்க முன் வந்தார்.

அன்று பூபேந்திர சிங்ஜி செய்த புண்ணியத்தால் கடந்த ஐம்பது ஆண்டுகளாக ரஞ்சி கோப்பைப் பந்தயங்கள் இந்தியக் கிரிக்கெட்டின் வளர்ச்சிக்குச் சொழுகொம்பாக இருந்து வருகின்றன. பொன் விழாவை முன்னிட்டு திரு. பி. என். சுந்தரேசன் எழுதி இந்திய கிரிக்கெட் கண்ட்ரோல் போர்ட் (Board of Control for Cricket in India தபால் பெட்டி எண். 11094 பம்பாய்-400020 வெளியிட்டுள்ள 'ரஞ்சி டிராஃபி'—தி கோல்டன் இயர்ஸ்' (Ranji Trophy The Golden years) என்ற அருமையான புத்தகத்தைப் புரட்டிய போது:

● வீசப்படும் பந்தை எதிர்த்துத் தாக்கித் திருப்பி அடிக்காமல் அதனைத் திசை திருப்பிவிட்டு இலகுவாகக் கிரிக்கெட் ஆட முடியும் என்பதை முதன் முதலில் உலகுக்கு உணர்த்தியவர் ரஞ்சிதான். முரட்டுத் தனத்தைவிட நயமான சமத்திறனுக்கு முக்கியத்துவம் தந்த அவரது இந்தப் பாணி அந்த நாளைய கிரிக்கெட்வீரர்கள் அனைவரையும் வெலவெலத்துப் போகச் செய்தது!

● ரஞ்சி டிராஃபி பந்தயத்தில் முதல் இந்தியச்சாம்பியனுன பெருமை பம்பாயைச் சேரும். இவ்வணியின் தலைவர் எல்.பி.ஜய். ஒரு முறை பூனாவுக்கு எதிரான பந்தயத்திற்கு இவர் போக இயலாததால் டுவெல்த் மானை சான்ட்ராக்டர் காப்டன் ஆக்கப்பட்டார்! ஐம்பது ரன்கள் எடுத்து அந்த சீனவ் முடிய அணியில் இடம் பெற்ருர்.

● 1965–66–இல் ராஜஸ்தானை வென்று பம்பாய் ரஞ்சி கோப்பையைப் பெற்ற இறுதி ஆட்டத்தில் அஜித் வடேகர் 185 ரன்கள் எடுத்தார். இந்த சீசனில் இவர் குஜராத், மஹாராஷ்ட்ரா, சௌராஷ்ட்ரா ஆகிய மாநிலங்களுக்கு எதிராக ஆறு சதங்கள் கண்டிருந்தார். 1965–66–இல் அவர் எடுத்த மொத்த ரன்கள் — 695.

● 1978–79–இல் டில்லி அணி பேடியின் தலைமையில் ரஞ்சி டிராஃபியை வென்ற பிறகு ஹாக்கி பிரியர்களான பஞ்சாபிகள் கிரிக்கெட்டுக்குக் கட்சி மாற ஆரம்பித்து விட்டனர்!

● ஐம்பதாண்டுகளாக இந்தியக் கிரிக்கெட்டை வளர்த்து வரும் ரஞ்சி டிராஃபி பந்தயம் பல முதல்தர கிரிக்கெட் வீரர்களைத் தோற்றுவித்துள்ளது. அவர்களுள் சிலரே டெஸ்ட்களில் இந்தியாவுக்கு ஆடும் அதிர்ஷ்டத்தைப் பெற்ருர்கள். இவர்களை விட எந்த விதத்திலும் குறைவின்றி ஆடிய வேறு பலருக்கு அவ்வதிர்ஷ்டம் கிட்டவில்லை.

தொகுப்பு: சிதாரவி

அஜித் வடேகர்



பிஷன்சிங்பேடி





**மயிலாப்பூர், லஸ் சர்ச் ரோடின் 111–ம் எண் வீடு.**

**டிராயிங் ஹாலில் உட்கார்ந்து, சாவகாசமாய் 'ஸ்போர்ட்ஸ் ஸ்டார்' படித்துக் கொண்டிருந்த 'கிரிக்கெட் ஸ்டார்' எல். சிவராமகிருஷ்ணனுக்கு, 'கல்கி' சார்பில் 'கங்கிராட்ஸ்' சொல்லிவிட்டு பொங்கல் – கிரிக்கெட் சிறப்பிதழ் இலவச இணைப்பின் மேலட்டை பற்றிச் சொன்னதும், 'இட்ஸ் ஸோ நைஸ்' என்றார்.**

''நான் இப்போது காண்ட்ராக்டில் இருக்கிறேன். பேட்டியெல்லாம் தரக் கூடாதே!''

''காண்ட்ரவர்ஸியைத் தவிர்த்து, கேஷுவலாய்ப் பேசலாம்'' என்று சொல்லி, சம்மதிக்க வைத்தபிறகு, மிகக் கொஞ்சமாய் – வார்த்தைகளை ரொம்பவும் அளந்து, அளந்து பேசினார்.

அந்த மினி பேட்டி:

''தொடர்ந்து, அரை அரை டஜனும் விக்கெட்டுகளை வீழ்த்திய போது எப்படி இருந்தது உங்கள் மனசு?''

''சந்தோஷப்பட்டேன். இந்தச் சாதனை தொடர வேண்டுமே என்ற பயம் கவ்வ அதற்காக ஆசைப்படவும் செய்தேன்.''

''மூணு தடவைகள் இப்படி விக்கெட்கள் வீழ்த்தியது அதிர்ஷ்டம்தானே?''

''எப்படி அப்பாச் சொல்ல முடியும்? ஒரு தடவை எடுத்தால் 'லக்' எனலாம். இரண்டு, மூணு தடவை எடுத்தால்? இதில் என் கடின உழைப்பும் இருக்கிறது.''

''இதுபோலத் தொடர்ந்து செய்ய முடியும் என்று நினைக்கிறீர்களா?''

''இது தொடரவேண்டும் என்று ஆசைப் படுகிறேன். ஐ'ல் டிரை மை பெஸ்ட். அவ்வளவுதான் சொல்ல முடியும்.''

''பௌலர் என்கிற முறையில் உங்களுடைய ப்ளஸ், மைனஸ் பாயிண்ட்டுகள்?''

''லெக் ஸ்பின்னராய் இருப்பதுதான். அதுவே ப்ளஸ், மைனஸ் இரண்டும்.''

''பாட்ஸ்மென் என்கிற முறையில்?''

''குறிப்பிட்டுச் சொல்லும்படியாய் ஒன்றுமில்லை.''

''லட்சியம் என்று ஏதாவது?''

''எவ்வளவு நாள் முடியுமோ, அவ்வளவு நாள் பாராட்டுப் பெறும்படியாய், ஃபீல்டில் இருக்க வேண்டும்.''

''பிடித்த இந்தியன் கிரிக்கெட்டர்...?''

''விஷ்வி.''

''நான் – இண்டியன்...?''

''மால்கம் மார்ஷல், ரிச்சர்ட்ஸ்.''

''உங்கள் கிரிக்கெட் வாழ்க்கையில் மறக்க முடியாதவர்கள்?''

''நான் கிரிக்கெட் கற்றுக் கொண்ட, கிராண்ட் ப்ரீ கிரிக்கெட் கிளப்பின் முகுந்த். அப்புறம்... என் அம்மா... அப்பா... நான் ஏழெட்டு வயதில் கிரிக்கெட் ஆட ஆரம்பித்த போது, அதிகாலையில் எழுந்து என்னையும் எழுப்பி, பிராக்டீஸுக்காக என்னை ரெடி பண்ணி, பஸ் ஸ்டாப் வரை கூட வந்து அனுப்பி வைப்பார் என் அம்மா. ஒவ்வொரு ஸ்டேஜிலும் என்னைக் கண்டு சந்தோஷப்பட்டவர் என் அம்மா!''

● ● ● ●

× ''ஆறுஆறு விக்கெட்டுகளாக வீழ்த்தியபோது?''
''சந்தோஷப்பட்டேன்.''

# ஹீரோ ஷிவா







※ ''பயம் கலந்த ஆசை...''

சிவாவின் அப்பா லக்ஷ்மணன். அம்மா சரஸ்வதி. கூடப் பிறந்தவர்கள் 3 அண்ணன்கள். ஒரே ஒரு தங்கை (பவானி). சிவா படித்த வித்யாமந்திரில் பிளஸ் டு மாணவி.

வீட்டில் அத்தனை பேருக்குமே கிரிக்கெட் மீது அப்படி ஒரு க்ரேஸ். அண்ணன்கள் நிறைய லீக் மாட்ச்சுகள் ஆடியுள்ளனர். இந்த டெஸ்ட் தொடரின் போது, ஒரு நிமிடம் கூட டி.வி.யை விட்டு நகரவில்லையாம் யாரும். — அதுவும் சிவாவின் பௌலிங்கின் போது — அத்தனை பேருக்கும் சஸ்பென்ஸுடன் கூடிய த்ரில். சிவாவின் பௌலிங், பாட்டிங் முழுவதையும் வீடியோவில் ரெகார்டு பண்ணி வைத்திருக்கிறார்கள். இதுபற்றி சிவா சொன்னது: ''மீண்டும் என் பௌலிங்கை வீடியோவில் பார்க்கும் போது, நான் பண்ணின தப்புகள் பளிச் சென்று தெரிந்துவிடும். அதே தவறுகள் மறுபடி நடக்காமல் இது தடுக்கும்.''

''விக்கெட்டுகளைத் தூக்கி, சிவா தூள் கிளப்பின சமயம், என் பிரெண்ட்ஸ் சர்க்கிளில் எனக்கு ஏக மதிப்பு'' என்றார் சிவாவின் தங்கை. சிவாவின் அண்ணன்களுக்கும் இதேமாதிரி அனுபவம்தான்.

● ● ● ●

இன்னும் சில...

- சிவாவுக்கு இப்போது 'கெம் பிளாஸ்ட்' நிறுவனத்தில் உத்யோகம்.
- கவாஸ்கர் சிவாவுக்கு வைத்துள்ள செல்லப் பெயர் 'பெப்ஸி.'
- த.நா. கிரிக்கெட் அணியினர் சிவாவைக் கூப்பிடுவது 'லஸ்ஸி' என்று.

※ ''அதிர்ஷ்டம் மட்டுமில்லை, கடின உழைப்பும் உண்டு!''



- இங்கிலாந்து அணியினரும், விமர்சகர்களும் சூட்டியுள்ள செல்லப் பெயர் ''ஷிவா.''

தொகுப்பு: எஸ். சந்திரமௌலி
புகைப்படங்கள்: யோகா

---



**கிரிக்கெட் பந்து பற்றி...**

- கிரிக்கெட் மட்டைகள் அவ்வப்போது புதுப் புது மாற்றங்களுக்கு உட்பட்டாலும், கிரிக்கெட் பந்து மட்டும் கடந்த நூறு வருடங்களாக மாற்றம் ஏதும் சொல்லவில்லை.
- கிரிக்கெட் பந்துகளை அதிக அளவு விற்பனை செய்யும் நாடு ஆஸ்திரேலியா. இந்தியா இரண்டாவது இடத்தை வகிக்கிறது..
- இந்தியாவில் தயாரிக்கப்படும் கிரிக்கெட் பந்தின் விலை சுமார் ரூ. 50—
- இந்திய கிரிக்கெட் குழு இந்தியப் பந்துகளை டெஸ்ட் ஆட்டங்களுக்குப் பயன்படுத்துவது கிடையாது. இங்கிலாந்திலிருந்துதான் இறக்குமதி செய்கிறது. ஒரு பந்தின் விலை சுமார் ரூ. 400— தங்கவரி சுமார் ரூ. 200—

—தகவல்: காயத்ரி

# கிரிக்கெ

## வானுலக விளையாட்டோ

இன்றைய ஆட்டத்தில்
சிக்ஸராக விண்நோக்கி
வேகமாக சென்ற விலைவாசி
மண்ணைநோக்கவேயில்லை
வானத்து தேவர் தாம்
காட்ச் பிடித்துவிட்டாரோ?

பி. கீதா
வெள்ளக்கோவில்

## இக்கட்டு தீரவில்லை

இந்திய அரசியல் பிட்சில்
இடையறாது நடக்கும்
மாட்சில்



பந்தை வீசியே
சிந்தை நொந்தனர்
பொதுமக்கள்.
அவுட் ஆகாமலே
ஆடிக் களிக்கிறார்கள்
அழுகுணி அரசியல்வாதிகள்
விக்கெட்டும் விழவில்லை
இக்கட்டும் தீரவில்லை.

பெ. சு. சங்கரன்
சென்னை-5.

## ஆஸ்பத்திரி ஹவுஸ் ஃபுல்

கிரிக்கெட் போட்டி
நடக்கும் நாட்களில்
பாட்டியும், தாத்தாவும்,
பெற்றோரும், உற்றோரும்
திடீரென சீரியஸாகி
ஆஸ்பத்திரிகளில் 'அட்மிட்'
ஆகிவிடுகிறார்கள்
சிலருடைய 'ஆபீஸ் லீவ்'
விண்ணப்பங்களில்

கோவை தங்கபாரதி
மயிலம்பட்டி

## ஆள் அவுட்

குடும்ப ஆட்டத்தில் இறங்கி
கெட்டித் தனமாய் மட்டை
பிடித்தேன்
பட்ஜெட் என்னும் பந்து
வந்தது
சற்றே மயங்கி சாய்ந்து
விட்டேன்
ஆல் அவுட் என்பார் அங்கே.
ஆள் அவுட் நானும் இங்கே.

டி. கலா
தஞ்சாவூர்

## விரயம்

சீசன் வந்திட்டால்
வானொலி விளக்கைச் சூழும்
இந்த
ரசிக விட்டில்கள்
தங்கள்
காலச் சிறகுகள் கருகுவதை
உணர்வதில்லை.

சா. முருகன்
சென்னை-33

## ஜன்ம சாபல்யம்

விண்ணை முட்டும் விலைவாசி
வருத்தும் வேலையின்மை
கொள்ளையரின் அட்டகாசம்
ரேஷன் கடை 'பாமாயில்'
அம்மாவின் உடல் நலிவு
போனசுக்குப் போராட்டம்
அத்தனையும் மறந்துவிட்டு
சென்றிடுவோம் சேப்பாக்கம்
ஜன்மம் கடைத்தேற
கண்டிடுவோம் டெஸ்ட்
மாட்ச்சே.

ஜி. ஷைலாராணி
நாகர்கோயில்

## சகோதரரன்றோ?

இ
ரி
க்
கெ
ட்
என்ன கொம்பா ?
கிட்டிப் புள்ளின்
தம்பி தானே !

டி. குருசாமி
மதுரை-1.

## அரசியல் வாதிகள்

தேர்தல் கிரிக்கெட் பிட்சில்
வாக்குறுதிமட்டைகொண்டு
வோட்டுப் பந்துகளை ஆடி
பதவி செஞ்சுரிகள் அடையும்
கவாஸ்கரின்
எதிர்வீட்டுக்காரர்கள்

க. கோபு
வளவனூர்.

## தெரிந்ததும் தெரியாததும்

'கிரிக்கெட்' இலையைக்
கடிக்கும்
என்பது எனக்கே தெரிந்தது



# ட் கவிதை

இரிக்கெட் பார்ஸைக் கடிக்கும்
என்பது பையன்
சொல்லித் தெரிந்தது

அ. சுந்தரம்
சேலம்-2.

**சுவை கூட்டும் அம்சம்**

அறுபதாயிரம் நேரிலிருக்க,
ஆறு லட்சம் டி. வி. பார்க்க,
ஆறு கோடி ரேடியோ கேட்க
ஆறு குச்சிகளுக்கிடையே
நடக்கும்
ஆமை விளையாட்டு !
ஆர்வமான விஷயம் இதில்
ஆயிரம் ஐநூறுக்கென்று
அடித்துக் கொள்ளும்
கபிலும், கவாஸ்கரும்தான்!

எஸ். ஜெயராமன்
பங்களூர்-3.

**அகப்பட்டுக்கொண்ட
அப்பாவி**

இல்லற கிரிக்கெட்டில்
என் இனிய மனைவிதான்
மூரட்டு பௌலிங்,
என் அம்மா பேட்டிங்,
நான் மட்டும்
சில நேரங்களில்
நல்ல நடுவனாகவோ
நகைக்கும் ரசிகனாகவோ
இருந்தாலும்
பாதிப்பு எனக்குத்தான்

மு. ரமேஷ்குமார்
போடிநாயக்கனூர்

**கல்லாத பாடம்**

தனக்கென ஆடுவோர்
தோல்வியே தழுவுவார்
குழுக்கென ஆடுவோர்
கோபுரமாய் உயர்வார்
இதுவே கிரிக்கெட் வேதம்,
இதுவே வெற்றி கீதம் !
அறிந்தவர் வெஸ்ட் இண்டீஸ்
அறியாதார் நம் இண்டீஸ்!

எஸ். சாம்பமூர்த்தி
சென்னை-92.

**துரதிர்ஷ்டம்**

வீசிய பந்து
விக்கெட்டை நோக்க
நோக்கிய பந்தை
நோக அடிக்க
எடுத்த மட்டை
எங்கோ செல்ல
வந்த பந்து
விக்கெட்டைத் தாக்க
ஐயோ பாவம் பௌலர் !
'நோபால்' என்றாரே
அம்பயர் !

கி. பஞ்சாபகேசன்
நடுக்காவேரி

**தோல்வி**

சிக்ஸரிலும் பௌண்டரி
யிலும்
எல்லைக் கோட்டிற்கப்பால்
எகிறிப் பாய்ந்து, எங்கோ
சென்ற
நாணயப் பந்து எங்கே?
எங்கே ?
சன்னியமிங்கே க்ளீன்
போல்டு.
கட்டுப்பாடு ரன் அவுட் !
பெவிலியனை நோக்கித்
தளர்நடை போடு து
காந்தியம்!

ஜி. சத்தியகிரிராஜன்
திருப்பராய்த்துறை



**அருள்புரிவாய் இறைவா!**

ஆட்டத்தின் சிறப்பு
ஓட்டத்தில் என்றே
ஓட்டம் ஒரு நூறு
எடுத்தேன் நன்றே !
- பின் -
விளையாட்டின் சிறப்பு
விக்கெட்டில் என்றே
விக்கெட்டும் ஆறு
வீழ்த்தினேன் அன்றே !
- பின்னும் -
ஆறுதல் (பரிசும்) இல்லை.
ஆனந்தமும் இல்லை
என்செய்வேன்
என்னிறைவா?
சிவா! ராமா! கிருஷ்ணா!

எஸ். கே. சாரி
பம்பாய்-19.

**வாசகர் பங்கு**

# க்விஸ் விடைகள்



2 அ. பம்பாய்.
ஆ. வான்கடே ஸ்டேடியம்.
இ. ஜிம்கானா ஸ்டேடியம்.
ஈ. பிரேபர்ன் ஸ்டேடியம்.

3 அ. பார்த்தசாரதி ஷர்மா,
ஆ. ஷர்மா மதன்லால்
இ. எச். பி. ஷர்மா (அம்பயர்) (மூன்றாவது ஷர்மா யஷ்பால் ஷர்மா என்று நினைத்திருந்தால் உங்கள் மூக்கிற்கு நான் பொறுப்பல்ல.)

4 எஸ். வெங்கட்ராகவன், 74–75 மேற்கிந்தியக் குழு தொடரின் போது.

5 மூவருமே டெஸ்ட் பந்தயங்களில் ஒரே ஒரு சதம்தான் அடித்திருக்கிறார்கள்.

6 சையத் அபித் அலி.

7 டெஸ்ட் பந்தயங்களில் ஒரு சதம் கூட அடிக்காமல் 2000 ரன்களுக்கு மேல் எடுத்தது.

8 பல்விந்த்ர சிங்சாந்து.

1 அ. வான்கடே ஸ்டேடியம், பம்பாய்.
ஆ. பிஷன் சிங் பேடி ஸ்டேடியம், ஜலந்தர்.
இ. எம். ஏ. சிதம்பரம் ஸ்டேடியம், சென்னை.
ஈ. எம். சின்னசாமி ஸ்டேடியம், பெங்களூர்.

### விரைவில் விடியட்டும்

இந்திய கிரிக்கெட் இருட்டிற்கு
வெளிச்ச சாயம் தரப்போகும்
வேக இளைஞர்களே !
உங்கள் வெப்புப் பந்துகள் சீற
சிதறட்டும் பகைவர் படை.
எங்கள் மூச்சை உங்கள்
மட்டைகளின் அகர அடியில்
அடக்கி இருக்கிறோம்.
தேர்தல் சண்டைகள்
அரசியலோடு போகட்டும்
பாசம் மறந்து பற்றின்றி இருந்தால்
நாசங்களுக்கே நண்பராவீர்.

எஸ். ஸ்ரீகாந்த், பாண்டிச்சேரி-5.

### ஏமாந்த அம்பயர்கள்

பணம் பதவி கொள்ளை ஸ்டம்ப் நட்டு
பக்குவ பேச்செனும் 'பிட்ச்'சும் இட்டு
குற்றச்சாட்டு பந்து வீசி
குருட்டுவாத பேட் பிடித்து
சமயம் பார்த்து மூலைகள் மாறி
ஓடியாடி பைநிரப்பி
வாய்ச் சவடால் பௌண்டரி இட்டு
இவர்கள் ஆடும் 'அரசியல்' கிரிக்கெட்டில்
அம்பயர்கள் மட்டுமே அவுட் ஆகிறோம்.

இரா. ஸ்ரீகிருஷ்ணபிரபு, அவிநாசி

---

**ராகமாலிகா வழங்கும் பட்டுப் புடவையைக் குலுக்கல் முறையில் பரிசாகப் பெறும் அதிர்ஷ்டசாலி :**

**கி. பஞ்சாபகேசன்**
S/o. டி. எஸ். கிருஷ்ணமூர்த்தி
போஸ்ட் மாஸ்டர்
நடுக்காவேரி அஞ்சல்
தஞ்சை மாவட்டம்
613101

### மிக அதிகமான. அதிகமான. அதிகமான....

- இதுவரை டெஸ்டுகளிலேயே மிக அதிகமான விக்கெட்டுகளை எடுத்தவர் ஆஸ்திரேலியாவின் டெனிஸ் லில்லி. இவர் 355 விக்கெட்டுகளை எடுத்துள்ளார். இரண்டாவது இடத்தை வகிப்பவர் இங்கிலாந்தின் பாப் விலிஸ். நம்ம ஊர் கபில்தேவ் எட்டாவது இடத்தை வகிக்கிறார்.
- மிக அதிகமான 'காட்ச்'கள் பிடித்துள்ளது ஆஸ்திரேலிய விக்கெட் கீப்பர் ராட்னி மார்ஷ். இவர் 355 காட்ச்களை பிடித்திருக்கிறார். இவருக்கு அடுத்தவர் இவர் அருகிலே யாருமே இல்லை.
- பாகிஸ்தான் முன்னாள் கிரிக்கெட் ஆட்டக்காரர் ஹனீப் முகம்மது ஓர் இன்னிங்ஸில் மட்டும் 16 மணி நேரத்திற்கும் அதிகமாக 'பாட்' செய்திருக்கிறார். இது ஒரு உலக ரெக்கார்ட்.
- ஓர் இன்னிங்ஸில் மிக அதிகமாக ரன்களை எடுத்தது இங்கிலாந்து தான். இங்கிலாந்து ஆஸ்திரேலியாவிற்கு எதிராக 903 ரன்களை ஓர் இன்னிங்ஸில் எடுத்திருந்தது. மிகக் குறைந்த ரன்களை எடுத்தது நியூஜிலாந்து. நியூஜிலாந்து 26 ரன்களை மட்டுமே ஓர் இன்னிங்ஸில் எடுத்து ஆட்டமிழந்தது.

– கிருஷ்ண சங்கர்


லில்லி


விலிஸ்



வசனம்னு பாக்கறப்ப ஒரு இடம் சிறந்ததாக இருக்கும். அதாவது உமா தன் மகள் கல்யாணத்தை தன் கணவனுக்கு போன் மூலம் தெரிவிக்கிறா. தெரிவிச்ச உடனே மாணிக்கம் அங்கே வாரான். வந்தவுடன் விஷயம் தெரிஞ்சு "வா அவங்கள ஆசீர்வதிச்சுட்டு வரலாம்" என்று சொல்றான். அதற்கு உமா "இந்த கல்யாணத்துக்கு நீங்க சம்மதிச்சிட்டீங்களா"!! என்று சொல்ல அதற்கு மாணிக்கம் "கீழ நிக்கற நம்ப சம்மதம் கேட்டா மலமேல கல்யாணம் நடக்குது"ன்னு சொல்வான். ஏவிஎம்மின் **நல்லவனுக்கு நல்லவன்** படத்திலே இந்த இடம் சிறப்பாக இருந்தது.



**R. கல்யாணி**
சென்னை-86



மாதுஸ்ரீ **ராஜம்மாள் ராமச்சந்திர ஸாஸ்திரி** 25-12-84 அன்று பெங்களூரில், அம்பாள் காமாக்ஷியின் நாமத்தைக் கூறிக் கொண்டே ஈசனடி சேர்ந்தார்கள். 25-10-1917ல் உயர் குடும்பத்தில் பிறந்து, உயர் குடும்பத்தில் புகுந்து தமது வாழ்க்கையைப் பிறருக்கு எடுத்துக் காட்டாக வாழ்ந்தார்கள். அவரது பழகும் பண்பும், உயர் நோக்கங்களும், ஆழ்ந்த தெய்வ பக்தியும் காஞ்சிப் பெரியவர்களிடம் உள்ள ஈடுபாடும் பலரை அவர்பால் ஈர்த்தன. காஞ்சி மடத்திற்கு அவர் செய்த பல சேவைகளில் முக்கியமாக ஸுவாஸினி வார்ஷிக நிரந்தர பிக்ஷாவந்தன கைங்கர்யத்தைக் குறிப்பிட வேண்டும்.

துயரக்கடலில் ஆழ்ந்திருக்கும், அன்னாரின் குடும்பத்தினர்களான கணவர் ஸ்ரீமான் G. S. ராமச்சந்திர ஸாஸ்திரிகள் (அட்வகேட் புதுக்கோட்டை), குமாரர் ஸ்ரீ சுந்தரேசன், குமாரத்தி ஸ்ரீமதி ராஜேஸ்வரி, மற்ற உற்றார் உறவினர்களுக்கு நமது ஆழ்ந்த அனுதாபங்கள். மாதுஸ்ரீ **ராஜம்மாளின்** ஆத்மா சாந்தி அடைய சர்வேச்வரனை வேண்டுகிறோம்.



## சிறப்புப் பேட்டி

''வெங்கட்டை என்னிடம்கொடுங்கள். உலகின் எந்த டீமையும் நான் தோற்கடித்துக் காட்டுகிறேன்'' என்றார் ஸோபர்ஸ். கல்கி பொங்கல் — கிரிக்கெட் சிறப்பிதழுக்கென வெங்கட்ராகவன் சிறப்புப் பேட்டி அளிக்கிறார்:

**நிருபர்:** மற்ற விளையாட்டுக்களை விட கிரிக்கெட்டுக்கு மட்டும் ஏன் இத்தனை ரசிகர்கள்? இத்தனை பாப்புலாரிட்டி?

**வெங்கட்ராகவன்:** இது கிரிக்கெட் ரசிகர்களிடம் கேட்க வேண்டிய கேள்வி!

**நிரு:** எஸ். இருந்தாலும், இதற்குக் காரணம் என்னவாய் இருக்குமென நீங்கள் நினைக்கிறீர்கள்?

**வெங்கட்:** கிரௌண்டில் மட்டும் இல்லாமல், கிரௌண்டுக்கு வெளியில் — வீட்டில் — என்று எங்கே வேண்டுமானாலும், மணிக்கணக்கில் பேசும்படியான சப்ஜெக்ட் கிரிக்கெட். இதில் ஃபீல்டிங், பாட்டிங், பௌலிங், விக்கெட்கீப்பிங், அம்பயரிங் என்று அநேகம். 5 நாள் தொடர்ந்து நடக்கிற விளையாட்டு. கிரிக்கெட் ஸ்டேடியங்களை எடுத்துக் கொண்டால், மற்ற விளையாட்டரங்கங்களைவிட, பல மடங்கு அதிகமான ரசிகர்கள் உட்கார்ந்து, பார்க்கும்படியாய்ப்பிரம்மாண்டமானவைஇதற்கெல்லாம் மேலாக, இதில் ஏகப்பட்ட சாதனைகள் புரிய வழியுண்டு. ஒரு ஆட்டக்காரருடைய ஒரு மாட்ச் பர்ஃபார்மன்ஸை, வெளிநாட்டு ஆட்டக்காரருடைய — மற்றொரு இந்திய ஆட்டக்காரருடைய — அதே ஆட்டக்காரரின் முந்தைய பர்ஃபார்மென்ஸ்களோடு ஒப்பிட்டுப் பார்க்க; விவாதிக்க வழியுண்டு. மற்ற விளையாட்டுக்களில் இந்த அளவுக்குச் சாத்தியமில்லையே!

**நிரு:** கிரிக்கெட்டை 'ஜென்டில்மென்ஸ் கேம்' என்பார்கள். ஆனால் இப்போது ஆடப்படும் கிரிக்கெட் இப்படிச் சொல்லும்படியாய் இல்லை என்று உணரப்படுகிறது. இது சரியா?

**வெங்கட்:** முன்பு கிரிக்கெட் ஆடும்போது ஸ்போர்ட்ஸ்மென் ஸ்பிரிட் இருந்தது. விறுவிறுப்பான ஆட்டம்தான் முக்கியமானதே தவிர; வெற்றி தோல்வி இல்லை என்று கருதப்பட்டு வந்தது. இன்று இந்த நிலை இல்லை. உதாரணமாய், இந்தியா, வேறு ஓர் அணியுடன் ஆடுகிறதெனில், எப்படியும் இந்தியா வெற்றி பெற வேண்டும் என்று நினைக்கிறோம். முடிவு நமக்குச் சாதகமாய் இல்லையெனில் அதைத் தேசியப் பிரச்சினையாய் ஆக்குகிறோம். பல சமயங்களில், அம்பயர்களின் முடிவுகள் பற்றிக் கேள்விகள் எழுப்பப்படுகின்றன; பிரச்சினைகளாக்கப்படுகின்றன. ஆட்டக்காரர்களிடையேயும்தகாத வார்த்தைகள் பரிமாறிக் கொள்ளப்படுகின்றன. இதையெல்லாம் பார்க்கும் போது, கிரிக்கெட் அதன் உண்மையான ஸ்பிரிட்டில் ஆடப்படுவதில்லை என்று சொல்லலாம்.

**நிரு:** சமீப காலமாய் ஒருநாள் பந்தயங்கள் நல்ல வரவேற்பைப் பெற்று வருகின்றன. இது எதனால்? இதன் காரணமாய், ஐந்து நாள் மாட்ச்கள் பாப்புலாரிட்டி இழக்குமா?

**வெங்கட்:** ஒருநாள் மாட்ச் அதிகம் விரும்பப்படுவதற்குப் பல காரணங்கள் உண்டு. அவை விறுவிறுப்பாய்; ஆக்ஷன் நிரம்பியதாய், உள்ளன. குறிப்பிட்ட ஓவர்களில் ஆட்டம் முடிய வேண்டியுள்ளதால், பாட்ஸ்மென், ஃபீல்டர்ஸ், பௌலர்ஸ், அனைவரிடமும் அலாதி சுறுசுறுப்புக் காணப்படுகிறது. எல்லாவற்றுக்கும் மேலாக மாட்ச் டிரா ஆக வாய்ப்பில்லாமல், வெற்றி தோல்வி யாருக்கு என்று முடிவு தெரிகிறது. இது ஒரு மிக முக்கியமான விஷயமாகும். இருந்தாலும் ஒன்று மட்டும் உறுதி. ஐந்து நாள் மாட்சாளுடன் கூடத்தான், ஒருநாள் மாட்சகள் இருக்க முடியுமே தவிர, ஐந்து நாள் மாட்சகள் முற்றிலும் மறைந்து, ஒருநாள் மாட்ச் மட்டும் இருக்கிற காலம் நிச்சயம் வராது.

**நிரு:** 'பிட்ச்'களை, 'பௌலர்ஸ்' பிட்ச், பாட்ஸ்மென்ஸ் பிட்ச் என்று வகைப்படுத்துகிறார்களே! இது எப்படி?

**வெங்:** மாட்சுக்கு முன்னால், பிட்ச் எப்படித் தயார்ப்படுத்தப்படுகிறது என்பதைப் பொறுத்த விஷயம் இது. உருளை வைத்து அழுத்துதல், தண்ணீர் விடுதல், பிட்சில் உள்ள புல் போன்றவைதான் இதை நிர்ணயிக்கின்றன. ஆனால் பாட்ஸ்மென்'ஸ் பிட்சைத்தான் ரசிகர்கள் விரும்புவார்கள். மடமடவென விக்கெட்

# இழி நிலைக்கு இறங்கும்
# கனவான்கள் ஆட்டம்



டுகள் விழுந்து ஆட்டம் சீக்கிரம் முடிந்து போவதை யாரும் விரும்புவதில்லை.

நிரு: 'அம்பயரிங்' பற்றி அடிக்கடி சர்ச்சைகள் உருவாகின்றன. 'அகில உலக அம்பயரிங்' தேவை என்கிறார் கவாஸ்கர். அதென்ன 'அகில உலக அம்பயரிங்'?

வெங்கட்: உதாரணமாக, இப்போது இந்தியா, இங்கிலாந்து, மாட்சுக்கு இரு இந்திய அம்பயர்கள் இருக்கிறார்கள். இவர்கள் மீது ஒருதலைப்பட்சமாய்ச் செயல்படுவதாய்க் குற்றச்சாட்டு என வைத்துக் கொள்வோம். இதைத் தீர்க்கத்தான் அ. உ. அம்பயரிங் வேண்டும் என்கிறார்கள். கிரிக்கெட் ஆடும் நாடுகள் ஒவ்வொன்றிலிருந்தும் அம்பயர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டு ஒரு குழு அமைக்கப்படும். இந்தியா — இங்கிலாந்து மாட்சளை இரண்டு நாடுகளையும் சேராத, நடுவர்களே அகில உலக அமைப்பிலிருந்து வந்து அம்பயரிங் செய்வார்கள். இதன் மூலம் அம்பயரிங் சர்ச்சைகளுக்கு முழுமையாய் முற்றுப்புள்ளி வைத்துவிட முடியாது என்பது என்னுடைய சொந்தக் கருத்து.

நிரு: ஒரு டீமில் காப்டனாய் இருக்க என்னென்ன தகுதிகள் வேண்டும்?

வெங்கட்: முதலில் காப்டனுக்கு 'லீடர்ஷிப் குவாலிடி' இருக்க வேண்டும். அம்பயர் போலவே, கிரிக்கெட்டின் அத்தனை விதிகளும் தெரிந்திருந்தால் நல்லது. டீமில் இருக்கும் அத்தனை பேருடைய ஒத்துழைப்பையும் பெற முடிந்தவராய் இருக்க வேண்டும். ஒரு கையின் ஐந்து விரல்களும் ஒரே மாதிரி இருக்காதே? ஒரு டீம் என்றால் சில பிளேயர்களைத் தட்டிக் கொடுத்து வேலை வாங்க வேண்டியிருக்கும். சிலரிடம் அன்பாய்ச் சொல்லி வேலை வாங்க வேண்டியிருக்கும். சிலரிடம் கொஞ்சம் கண்டிப்பாய் நடந்து கொள்ள வேண்டியிருக்கும். சமயத்துக்குத் தக்கபடி ஃபீல்டிங் பொஸிஷன்களை, பௌலர்களை மாற்ற வேண்டியிருக்கும். இதையெல்லாம் சரியாய்க் கணக்கிட்டு, அதற்கேற்பத் திட்டமிட்டு, செயல்படுத்துகிற திறமையுடையவராய் இருக்க வேண்டும்.

நிரு: ஒரு மாட்சில் தோற்றுவிட்டால், காப்டனைக் கடுமையாய் விமர்சிப்பது வழக்கமாய் இருக்கிறதே! இது சரியா?

வெங்கட்: ஒன்றை நாம் புரிந்து கொள்ள வேண்டும். எந்தக் காப்டனும், டீம் தோற்றால் பரவாயில்லை என்று நினைப்பதில்லை. வெற்றி பெற முடிந்த வரை முயற்சிகள் செய்கிறார். முடியாது போனால் காப்டனை எப்படிக் குறை சொல்ல முடியும்? ஆனால் அதேசமயம் இன்னொன்றும் சொல்ல நான் ஆசைப்படுகிறேன். காப்டனின் சில குறிப்பிட்ட தவறுகளால்— —அசிரத்தையால் ஒரு டீம் தோற்க நேரிடுமானால், தோல்விக்கு முழுப் பொறுப்பையும் காப்டன் ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான்.

நிரு: ஒரு டீமுக்கு ஆட்டக்காரர்கள் எந்த அடிப்படையில் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள்?

வெங்: இதிலென்ன சந்தேகம்! இட்ஸ் பியூர்லி ஆன் மெரிட். ஒவ்வொரு ஆட்டக்காரருடைய திறமையும் அலசி, ஆராயப்பட்டு, சூழ்நிலைக்கேற்ப, தகுதியின் அடிப்படையில் தான் செலக்ஷன் கமிட்டி மெம்பர்களால் தேர்ந்தெடுக்கப்படுகிறார்கள். ஏன், பின் வேறு எந்த அடிப்படையில் தேர்வு செய்யப்படுவதாய்ச் சொல்கிறீர்கள்?

நிரு: இல்லை... வேண்டியவர், வேண்டாதவர் அதிக செல்வம், செல்வாக்கு உள்ளவர், இல்லாதவர் போன்ற அடிப்படையில், சில அரசியல் காரணங்களுக்காகவும் திறமையுள்ளவர்களுக்குக் கூட சான்ஸ் மறுக்கப்படுகிறது என்று சொல்லப்படுகிறதே!

வெங்: ஸாரி! நான் அப்படி நினைக்கவில்லை; நீங்கள் சொல்வது தவறு என்று நினைக்கிறேன். அடுத்த கேள்வி?

நிரு: பிளேயர்ஸ் செலக்ஷன் ஒருபுறம் இருக்கட்டும். இவர்களை செலக்ட் செய்கிற செலக்டர்கள் எப்படி செலக்ட் செய்யப்படுகிறார்கள்?

வெங்: இந்தியா, நார்த் சௌத், ஈஸ்ட், வெஸ்ட், சென்ட்ரல் என்று ஐந்து ஸோன்களாய்ப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றிலிருந்தும், ஒருவர், செலக்ஷன் கமிட்டிக்குப் பரிந்துரை செய்யப்படுவார். இந்தக் கமிட்டியில் இருப்பவர்கள், ரொம்ப நாள் கிரிக்கெட் ஆடியவர்கள்; கிரிக்கெட்டிற்கு அவர்களுடைய சேவை கணிசமானது. இந்த 5 பேர் குழுதான் செலக்ஷன் சம்பந்தமான விஷயங்களைக் கவனித்துக் கொள்ளுகிறது.

நிரு: ஃப்ளட் லைட் மாட்ச் (இரவில் செயற்கை ஒளியில்) பற்றிக் கொஞ்சம் விளக்க முடியுமா?

வெங்: ஆஸ்திரேலியாவில், கெர்ரி பேக்கர் என்பவரால் ஆரம்பித்து வைக்கப்பட்டது தான் இந்த ஃப்ளட் லைட் மாட்ச்! பகலில் வெயிலின் கடுமை அவர்களுக்குச் சரிப்பட்டு வராது. இதனாலும், மற்ற பல வேலைகள் காரணமாயும் மாட்ச்களுக்குப் பெரிய அளவில் கூட்டம் வராது. இதை மாற்றி, அதிக ரசிகர்களைக் கவர அவர்கள் வசதிக்கேற்ப, மாலையில், ஃப்ளட் லைட் வெளிச்சத்தில் மாட்ச்கள் ஆடப்பட்டு வருகின்றன. ஆனால் அது ரொம்ப காஸ்ட்லி விஷயம். அது ஒரு புது அனுபவம்தான். இங்கே, ரசிகர்கள், பகலில் மாட்ச் பார்க்கத் தயாராய் இருக்கிற போது, அதை விரும்புகிறபோது ஃப்ளட் லைட் மாட்ச்களுக்கு அவசியமில்லை.

திரு: டெலிவிஷனில், கிரிக்கெட் மாட்ச்சை நேரடியாய் ஒளிபரப்புவது, ஸ்டேடியத்துக்கு வந்து பார்ப்பவர்கள் எண்ணிக்கையைப் பாதிக்கிறது இல்லையா?

வெங்: டெலிவிஷனில் நேரடி ஒளிபரப்பினால் பல லட்சம் ரசிகர்கள் மாட்ச் பார்க்க முடிகிறது என்பது எவ்வளவு உண்மையோ, அதே அளவு உண்மை அது ஸ்டேடியத்துக்கு வருபவர்கள் எண்ணிக்கையையும் பாதிக்கிறது என்பது.

திரு: நேரடி ஒளிபரப்பு செய்யக்கூடாது என்று கிரிக்கெட் போர்டு, அரசாங்கத்துக்கு அனுமதி மறுக்க முடியாதா?

வெங்: முடியாது. மாட்ச் நடக்கும் போது, ரேடியோவில், நேர்முக வர்ணனை ஒலி பரப்பவும், டி. வி. யில் ஒளிபரப்பவும் அரசாங்கத்துக்கு உரிமை உண்டு.

திரு: இந்த மாதிரி ஒலி ஒளிபரப்ப அரசாங்கம் கிரிக்கெட் போர்டுக்கு ஏதாவது ராயல்டி தருகிறதா?

வெங்: இல்லை. ஆனாலும் இந்த விஷயம் பற்றி முழுமையாகத் தெரிந்து சொல்ல வேண்டுமானால், ஸ்ரீராமன் போன்றவர்களைக் கேட்கலாம். விளக்கமாய்ச் சொல்வார்கள்.

திரு: கிரிக்கெட் வீரர்கள், தம் கிரிக்கெட் வாழ்க்கை அனுபவங்களைப் புத்தகமாய் எழுதி வருகிறார்களே இதுபற்றி என்ன நினைக்கிறீர்களா?

வெங்: கிரிக்கெட் வீரர்கள் பயாகிரபி எழுதுவது ஒரு நல்ல விஷயம்தான், சொல்லப் போனால் ஒவ்வொரு ஆட்டக்காரரும் எழுத வேண்டும். ஆனால் என்னைப் பொறுத்த வரை இப்படி எழுதுவதில் ஒரு கொள்கை வைத்திருக்கிறேன். ஒரு பிளேயர், கிரிக்கெட்டிலிருந்து ரிடையர் ஆன பின்தான் இப்படி எழுத வேண்டும்.

திரு: ஏன்? கவாஸ்கர் அதற்குள் மூனு புத்தகங்கள் எழுதி விட்டாரே!

வெங்: வெயிட்! என் கருத்தைத்தான் நான் சொல்கிறேன். சுயசரிதம் எழுதும்போது பல உண்மைகளை எழுத நேரிடும். அதில், சில சக பிளேயர்களைப் புண்படுத்தும்படியாய் அமையலாம். அதனால், தொடர்ந்து ஆடும்போது, சில பிரச்சினைகள் வரலாம். ரிடையர் ஆனபிறகு எழுதினால், ஒரு பிராப்ளமும் வராதில்லையா?

திரு: இப்போது, புகழ்பெற்ற கிரிக்கெட் ஆட்டக்காரர்கள், சினிமா, அரசியல் போன்ற துறைகளுக்கு வருகிறார்களே! இதுபற்றி உங்கள் கருத்து என்ன?

வெங்: ஏன் வரக் கூடாது? கிரிக்கெட் ஆட்டக்காரர்கள் பலரும், பல நிறுவனங்களிலும் பணிபுரிகிறார்கள்; பிசினஸ் செய்கிறார்கள். அதேசமயம் கிரிக்கெட்டிலும் கான்ஸன்ட்ரேட் பண்ணுகிறார்கள். அதேபோல, ஒரு கிரிக்கெட் பிளேயர், கிரிக்கெட் சீசன் இல்லாத சமயங்களில் சினிமாவில் நடித்துக் கொண்டு, சீசனில் கிரிக்கெட்டுக்குத் தயாராய் வரும்போது எப்படித் தப்பு என்று சொல்லலாம்? அதைப் போலத்தான் அரசியலில் பிரவேசிப்பதும். ஒரு நடிகரோ, நடிகையோ, வசனகர்த்தாவோ, சினிமாவில் பாப்புலரான பின், அரசியலுக்கு வருவதென்பது சரி என்றால், கிரிக்கெட் ஆட்டக்காரர் அரசியலுக்கு வருவது மட்டும் எப்படித் தப்பாகும்?

திரு: சமீபத்திய கவாஸ்கர் — கபில்தேவ் கான்ட்ரவர்ஸி பற்றி என்ன நினைக்கிறீர்கள்?

வெங்: இதுபற்றி எனக்குத் தனிப்பட்ட அபிப்பிராயம் உண்டு. ஆனால் அதை நான் சொல்ல விரும்பவில்லை. ஸாரி!

பேட்டி: எஸ். சந்திரமௌலி

## வெங்கட் பற்றி கவாஸ்கர்



"பௌலிங் தவிர காட்ச் பிடிப்பது — அதுவும் மிக உயரத்திலிருந்தும், அதி வேகத்திலும் வரும் பந்துகளைக் காட்ச் பிடிப்பது வெங்கட்டின் ஸ்பெஷாலிட்டி. ஒரு தடவை, நியூஸிலாந்தின் பாரி ஸிங்க்ளேர் ஸ்கொயர் கட் செய்த பந்து, பவுண்டரி கோட்டுக்குப் போகப் போகிறதென நினைத்துக் கொண்டிருந்தபோது, வெங்கட்ராகவன் அதைக் காட்ச் பிடித்துவிட, ஸ்டேடியமே ஆரவாரத்தில் அதிர்ந்தது மறக்க முடியாத விஷயம். மைதானத்துக்கு வெளியில் வெங்கட் ரொம்ப ஜாலியான டைப். கிரிக்கெட் டூரின்போது, கிரிக்கெட்டை மறந்து கொஞ்ச நேரம் பேசிக் கொண்டிருக்க நான் நாடுவது வெங்கட்டைத்தான். வெங்கட்டின் அறிவு விசாலமானது."

—கவாஸ்கர் தமது 'ஐடல்ஸ்' புத்தகத்தில்

புத்தாண்டு – பொங்கல் நல்வாழ்த்துக்கள்

## சந்தோஷ குடும்பத்தின் உண்மை ரகசியம், எப்பொழுதும் நேர்த்தியான தேர்ந்தெடுப்பு.





இதன் வெளிப்படை உண்மை அனைவருக்கும் ஏற்ற
எமது வண்ண வண்ண ஆடைகள் மற்றும் உள்ளாடைகள்.

**M.L.TEX**
Under Control Briefs & Vests

Manufactured by: 2-L. Bridgeway Colony
TIRUPUR-638 607.

MY AD MLT-12.

---

## ஹா...ச்சு ஹா...ச்சு நாளே பாழாப் போ...ச்சு



ஜலதோஷம் உங்கள் நாளையே பாழாக்க விடாதீர்கள். மூக்கு ஒழுகல், அடைப்பு, தலை பாரம். இவை ஜலதோஷத்திற்கே உரித்தான அறிகுறிகளாகும். இதனால் உங்களுக்கும் தொல்லை, உங்கள் ஊருக்கும் தொல்லை. சிந்தித்துச் செயல்பட வேண்டாமா? கோல்டரின் சாப்பிட்டுப் பாருங்களேன்! அது விசேட ஃபார்முலாவின்படி தயாரான ஜலதோஷ மாத்திரையாகும். வசதிக்கு வசதி, நிவாரணத்திற்கு நிவாரணம்!



**ஜலதோஷம் வாட்டுகிறதா?**
**கோல்டரின் அதை விரட்டுகிறது.**

CASBC-111-103 TAM

# கிரிக்கெட் லொட லொடா!

ஜே.எஸ். ராகவன்

"வணக்கம் நேயர்களே. சென்னை சிதம்பரம் ஸ்டேடியத்திலிருந்து குஞ்சு பாது பேசுகிறேன்... ரங்குபதி! இன்று மூன்றாவது டெஸ்ட்டின் நான்காவது நாளா அல்லது நான்காவது டெஸ்ட்டின் மூன்றாவது நாளா...? நன்றி ரங்குபதி. மூன்றாவது டெஸ்ட்டின் மூன்றாவது நாளான இன்று. சிறிது நேரத்தில் விளையாட்டுத் தொடங்கும் எனும் கரும்புச் செய்தியுடன் உங்களை வரவேற்கிறேன். மொத்தம் இதுவரை நான்கு தடங்கல்கள்.

"மன்னிக்கவும். ஐந்து தடங்கல்கள். இப்போது முதல் பந்தை கவாஸ்கரை நோக்கி எல்லிசன் வீசுகிறார். நல்ல பந்து. புயல் வேகத்தில் அந்தப் பந்து மூர்க்கத்தனமாகக் காலைத் தாக்குகிறது. ஆனால் அந்தக் கால் பாட்ஸ்மேனுடையதா அல்லது விக்கெட் கீப்பருடையதா என்று சரியாகத் தெரியவில்லை. அம்பையர் நோ பால்ராவ் மன்னிக்கவும்... கோபால்ராவ் இல்லை நந்தி போல் மறைத்துக் கொண்டிருக்கிறார்! ...ரங்குபதி, கிரிக்கெட் அம்பயர்கள் உசிலை மணி போல் இல்லாமல், தயிர்வடைதேசிகனைப்போல் இருக்க வேண்டும் என்று விதி வகுத்தால் என்ன?"

"ஆரம்பத்தில் தேசிகனைப் போன்று இருந்தவர்கள்தான், நாட்கணக்கில் உடற்பயிற்சி இல்லாமல் நின்றதால், உசிலைமணி மாதிரி ஆகி விட்டார்கள் என்று நான் நினைக்கிறேன்."

"அப்படியும் இருக்கலாம். கோபால் ராவ் கவாஸ்கருக்கு அவுட் கொடுக்கவில்லை. அவர் இன்னும் விளையாடுகிறார். இதில் ஏதாவது ரெகார்ட் இருக்கிறதா...? எமது கட்டி ஸ்கோரர் சோணாசலத்தின் குறிப்பின்படி, இத்துடன் கவாஸ்கர் 1008 முறையாக டெஸ்ட் மாட்ச்களில் எல்.பி.டபிள்யூ. அப்பீலில் அவுட்டாகாமல் தொடர்ந்து ஆடியிருக்கிறார். முந்தைய ரெகார்ட் பிராட்மனுடையது.

"இப்போது மறுபடியும் ஆட்டத்தில் தடங்கல். காரணம் தெரியவில்லை. மைதானத்தின் நடுவில் விளையாட்டு வீரர்கள் குசலம் விசாரித்துக் கொண்டு இருக்கிறார்கள். பந்து லட்டு போல் உருண்டையாக இல்லாமல் டிபன் டப்பியைப் போல் தட்டையாக மாறியிருக்கலாம்... என்ன சோணாசலம்?

"...எமது ஸ்கோரர் சோணாசலத்தின்படி, இந்தக் தொடரில் இத்துடன் 85–வது தடவையாகப் பந்து உரு மாறி இருக்கிறது. இது. இங்கிலாந்துடன் நடக்கும் 19–வது டெஸ்ட். இரண்டும் சேர்ந்தால் 1985, அதாவது நடப்பு ஆண்டு. விந்தையான தகவல். மேலும், இப்போது 'டபால்' என்று நீங்கள் கேட்ட பட்டாசு சத்தம், இந்த டெஸ்ட்டில் 100வது முறையாக ஒலிப்பது."

"இதற்கிடையே ஆட்டம் தொடங்கி எட்டு ஓட்டங்கள் சேர்க்கப்பட்டுள்ளன. எங்கள் ஸ்கோரருக்கும், ராட்சச ஸ்கோர் போர்டுக்கும் இரண்டு ஓட்ட வித்தியாசங்கள். இதுவரை இந்த டெஸ்ட்டில் எட்டு முறை... என்ன சோணாசலம்...? அப்படியா... மன்னிக்கவும். ஒன்பதாவது முறையாக வித்தியாசம் நிகழ்ந்துள்ளது.

"அடுத்தது ஒரு பயங்கர சிக்ஸர் சார்! இரண்டு பனைமர உயரத்திற்குப் போய் விழுந்த பந்தை 'டி' ஸ்டாண்ட் அன்பர்கள் கைப்பற்றிக் கொண்டு, ஃபீல்டர் போக்காக்கிற்குத் தண்ணி காட்டிக் கொண்டிருக்



கிறார்கள். பந்து திரும்பும் வரை புள்ளி விவரங்கள். இதுதான், இதுவரை 5 அடி 4 அங்குல உயரத்துக்குள் இருக்கும் பாட்ஸ்மென்கள் அடித்த சிக்ஸர்களிலேயே உயரமான சிக்சர். மேலும், இந்த சிக்ஸரில் கிடைத்த ஆறு ரன்களுடன், கவாஸ்கர், இரண்டாவது உலக மகா யுத்தத்திற்குப் பிறகு இருபத்தாறரை வயதுக்கு முன் 5555 ரன்கள் குவித்த சிறப்புக் குழுவில் ஒருவராகச் சேர்ந்து, நம் தாய்நாட்டிற்குப் பெருமை சேர்க்கிறார்.

''நேற்று எமது ஒலிபரப்பைக் கேட்கத் தவறிய நேயர்களுக்காக, நண்பர் ரங்குபதி சொன்ன சுவையான சம்பவத்தை மீண்டும் விவரிக்கிறேன். பந்தய ஓய்வு நாளன்று, கவாஸ்கர் மனைவியுடன் இந்திப்பட ரெகார்டுகள் வாங்கக் கடைக்குப் போனார். நான்கு ரெகார்டுகளைப் பார்சலாகக் கட்டிக் கடைக்காரர் விளையாட்டாக 'காட்ச்' என்று சொல்லி கவாஸ்கரிடம் தூக்கிப் போட்டாராம். எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்த கவாஸ்கர், அதைக் கோட்டைவிட்டு, மேலும் நான்கு ரெகார்டுகளை முறித்தாராம். ஹா... ஹா... ஹா... ஹா...

''இதற்கிடையே, சிவராமகிருஷ்ணன், எட்மண்ட்ஸ் போட்ட கழல் பந்தை, லெக் சைடில் திருப்ப நினைத்து, ஆடிய போது, பந்து புழுதியுடன் கிளம்பி, முதல் ஸ்லிப்பின் கையில் பட்டுத் தவறியது. அவர் அதைப் பிடித்தாரா இல்லையா என்று தெரியவில்லை. நண்பர் ரங்குபதி நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்...?''

''எட்மண்ட்ஸ் போட்ட பந்தை சிவராமகிருஷ்ணன், நண்பர் குஞ்சுபாது கூறியது போல், லெக் சைடில் திருப்ப நினைத்த போது, பந்து புழுதியுடன் கிளம்பி, நண்பர் குஞ்சுபாது சொன்னது போல, முதல் ஸ்லிப்பின் கைபட்டுத் தவறியது. நண்பர் சரியாகக் கூறியது போல் அவர் அதைப்பிடித்தாரா இல்லையா என்று சரியாகத் தெரியவில்லை...''

''...சரியாகச் சொன்னீர்கள் ரங்குபதி. நாம் உட்கார்ந்திருக்கும் இடம், புதிய ஸ்ரீரங்கக் கோவில் கோபுர உயரத்தில் இருப்பதால், மைதான நடப்புக்கள் தெளிவாகத் தெரியவில்லை என்பது தெளிவாகப் புரிகிறது. இப்போது மைதானத்தில் டிரிங்க்ஸ் வந்திருக்கின்றன...''

டிங்டாங். ''தலைவலியா? உடம்புவலியா? தொடர்ந்து காமெண்டரி கேட்பதால் காதில் இடைவிடாத இரைச்சலா? 'கிரிக்கெடான்' சாப்பிடுங்கள்! உடனே நிவாரணம் அளிக்கும்.'' டிங்டாங்!

## குறிக்கோள், ஒரு நாளில் 350 ரன்கள்!

முப்பது வருடங்களுக்கு முன்னால் டெஸ்ட் கிரிக்கெட்டின் நிலவரம் எப்படி இருந்தது என்பதை விஜய் மெர்சண்ட் சமீபத்தில் டி. வி. பேட்டி ஒன்றில் விவரித்தார்:

இன்று டெஸ்ட் ஆட்டக்காரர்களுக்குக் கைநிறைய பணம் கிடைக்கிறது. எங்கள் காலத்தில் சொற்ப சன்மானமே தந்தார்கள். பல சந்தர்ப்பங்களில் ஆட்டத்துக்கு வந்து போக டாக்ஸி கட்டணம் கூட நாங்களே தரவேண்டியிருந்தது.

பிட்சுகள் போலர்களுக்கும் பாட்ஸ்மென்னுக்கும் சரிசமமான வாய்ப்புத் தந்தன.

ஒருநாளில் 350 ரன்களாவது எடுக்க வேண்டும் என்பது குறிக்கோளாக இருந்தது. இன்றோ 250 எடுத்தாலே பிரதஷ்டம் என்று கருதப்படுகிறது. நாங்கள் பந்து வீச்சை எதிர்த்து ஆடினோம். இன்றைய ஆட்டக்காரர்கள் மட்டையால் பந்தை அடிக்காமல், பந்து வந்து மட்டையைத் தாக்கக் காத்திருக்கின்றனர்!

தங்கள் காலத்தில் ''டீம் வொர்க் மிகவும் குறைவு'' என்று ஒப்புக் கொண்டார் மெர்சண்ட். ஒவ்வொரு ஆட்டக்காரரும் தனி மனிதராகவே ஆடியதாகவும், ஆனால் இன்றோ கூட்டுறவும், அணி ஒற்றுமையும் மட்டுமின்றி ஃபீல்டிங் தரமும் வெகுவாக அபிவிருத்தி அடைந்துள்ளதாகவும் குறிப்பிட்டார்.

''ஆட்டத்தின் போது ஹெல்மட் உபயோகித்தீர்களா?'' என்று கேட்டபோது மெர்சண்ட் கூறினார்: ''இல்லை. அதற்குத் தேவை இருக்கவில்லை. அப்போதெல்லாம் பந்து வீச்சாளர்கள் உடம்பைத் தாக்க மாட்டார்கள். விக்கெட்டைத்தான் தாக்குவார்கள்!''

பார்த்து, கேட்டு எழுதியவர்: ராஜா.

# கிரிக்கட் விநோதங்கள்

இப்போதிருக்கும் மாதிரி, ஒழுங்கான ஆட்ட விதிகள், முன்காலத்தில் இல்லை. அப்போது, சிலவிநோதநிகழ்ச்சிகள் நடந்தன.

தற்போதைய விதிகளை மனத்தில் கொண்டு தலையைப் பிய்த்துக் கொள்ளாமல், படித்து ரசியுங்கள்.

கீழ்க்கண்ட நிகழ்ச்சிகள் அனைத்தும், கிரிஸ்டபர் மார்டின் ஜென்கின்ஸ் என்பவர் தொகுத்தெழுதிய, ''CRICKET DISASTERS & BIZARRE RECORDS' புத்தகத்திலிருந்து பொறுக்கியெடுத்தவை:

● 1970–இல் கிரிஸ் டெய்லர், என்பவர், ஒரு மாட்சில் அடித்த பந்து, மிகஉயரத்தில் செல்ல, பவுண்டரி ஓரத்தில் இருந்த ஒரு 'பீல்டர்' அதைப் பிடிக்க, பவுண்டரியின் ஓரமாக, சரியாக, அந்தக் கோட்டின் மீது ஓடினார். அவர் துரதிர்ஷ்டம்! பந்து அவர் கையில் விழுவதற்குப் பதிலாக, அவர் தலையில் 'ணங்'கென்று தாக்கி, எல்லைக்கப்பால் போய் விழ, 'ஸிக்ஸர்' ஆகிவிட்டது!





அவர் 'காட்ச்' பிடிக்க முயலாமல் போயிருந்தால் கூட நான்கு ரன்கள்தான் போயிருக்கும். ஆனால் அவர் தலையில் பட்டதனால், அது ஸிக்ஸராகப் போய்விட்டது!

● லெஸ்டர் ஷையரைச் சேர்ந்த எட்டி ஹட்சன் என்பவர் ஆடும்போது, ரன் அவுட் ஆவதிலிருந்து தப்புவதற்காக, தலைதெறிக்க ஓடி, ஸ்டெம்புகளின் மேல் விழ, கால் எலும்பு முறிந்து, காலை மடக்கக் கூட முடியவில்லை.

அவருடைய 'டீம்' ஆட்கள் அவரை, 'ரிடையர்' ஆகும்படி வற்புறுத்தியதை அவர் ஏற்க மறுத்து விட்டார்.

மாறாக, அடுத்த பந்தை அந்த ஒற்றைக் காலுடனே நின்று ஆடி, ஒரு 'ஸிக்ஸர்' அடித்து, 'மாட்ச்'சையே வென்றுவிட்டார்!

● ஸர் லியரி கான்ஸ்டன்டைன் என்ற வெஸ்ட் இண்டீஸ் ஆட்டக்காரரின் பந்து வீச்சு பாட்ஸ்மென்னுக்கு சிம்ஹ சொப்பனம்.

இங்கிலாந்தில், லங்காஷையர் லீக் மாட்ச் ஒன்றில் ஆடும்போது, அவர் 'டீம்' 116 ரன்களுக்கு அவுட் ஆயிற்று.

இவர் பந்து வீசிய முதல் ஓவரில் 3ரன்கள் கொடுத்தார்.

இரண்டாவது ஓவரில், ஒரே ஒரு ரன் கொடுத்து, 3 விக்கெட்டுகளை வீழ்த்தினார்.

3–வது ஓவரில், இரண்டு ரன்கள் கொடுத்து 2 விக்கெட்டுகள்!

4–வது ஓவரில், மறுபடியும் இரண்டு ரன்களுக்கு 2 விக்கெட்டுகள்.

5–வது ஓவரில், 3 விக்கெட்டுகள் மறுபடியும் எடுத்து, இரண்டே ரன்கள் கொடுத்தார்!

இதில் 7 பேர் கிளீன் போல்ட் வேறு!

● 'நுணலும் தன் வாயால் கெடும்' என்ற பழமொழிக்கேற்ப: பீட்டர் ஜியார்ஜ் என்பவர் 1960–ல் ஒரு மாட்சில் பாட் செய்து கொண்டிருந்தார். தொடர்ந்து 3 தடவை, பந்து அவர் காலில் பட, பந்து வீசியவர் எல். பி. டபிள்யூ கேட்டபோது அம்பயர் அவுட் கொடுக்கவில்லை.

நான்காவது முறையும் தொடர்ந்து, பந்து அவர் காலில் பட, கிண்டலாக, 'பாட்டிங்' செய்து கொண்டிருந்த பீட்டர் ஜார்ஜே 'ஹௌ ஸ் தட்''' என்று கத்தி விட்டார்.

அம்பயர், கத்தியது பாட்ஸ்மன்தான் என்று தெரியாமலேயே, அவுட் கொடுத்து விட்டார்!

● 1965—ல் ஆர். என். புச்சனுல், என்பவர் 'பாட்டிங்' செய்து கொண்டிருக்க போது, பந்து, அவர் தலையில் பட்டு, குல்லாய் ஸ்டம்பின் மேல் விழ, 'பெயில்ஸ்' விழாததால், 'அவுட்' ஆகாமல் தப்பித்தார்! பின் அவர் அடித்த ரன்கள் 141!

● 1948—ல் டோனலி என்பவர் ஆடுகையில், பந்து அவர் காலில் பட்டு, உயரே எழும்பி, ஸ்டம்புக்குப் பின்புறம் விழுந்து, முன்பக்கம் உருண்டு, பௌல்ட் ஆக்கிவிட்டது!

● 1983—ல், ஆக்ஸ்போர்டு பல்கலைக்கழக மாட்ச் ஒன்றில், ஒரு கிளப் 243 ரன்களுக்கு 'அவுட்' ஆகி, எதிர் கிளப்பை 165 ரன்களுக்கு 'அவுட்' ஆக்கிவிட்டது. ஆனால், அதன் இரு 'ஓபனிங்' ஆட்டக்காரர்கள் அவுட் ஆகவில்லை.

எப்படி? ஒருவர், மூக்கில் அடிபட்டு, ரிடையர் ஆகி, பிறகு ஆட வரவில்லை. மற்றொருவர், முதலில் ஆட ஆரம்பித்துக் கடைசி வரை அவுட் ஆகாமலிருந்தார்!

● வில்சன் ஹார்ட்வினென்பவர் பீட்டர்கிரீன் என்பவரின் பந்தை, ஓங்கி அடிக்க, அது உயரே சென்று எதிர்ப்பக்கம் இருக்கும் ஒரு வீட்டின் ஜன்னலை உடைத்துக் கொண்டு, அந்த வீட்டிலுள்ள படுக்கையறையினுள் சென்று, அங்கிருந்த படுக்கையில் போய் விழுந்தது.

அந்தப் படுக்கைக்குச் சொந்தக்காரர் வேறு யாருமல்ல பந்து வீசிய பீட்டர் கிரீன்தான்!



● 1870—ல் எம்.ஸி.ஸி.யில் ஒரு மாட்சில், ஒருவர் பந்தை ஓங்கி அடிக்க, அது நேராக 'பீல்டர்' கையில் விழப்போகையில் அந்த பாட்ஸ்மேன் பெவிலியனுக்குத் திரும்பி விட்டார். ஆனால், காட்ச் பிடிக்கப் போனவர் அதைக் கோட்டை விட்டார்.

அந்த பாட்ஸ்மேனே திரும்பிவந்து, ஆட மறுத்தார். ஸ்கோர் புத்தகத்தில், 'காட்ச் பிடிக்கப்பட்டு அவுட்டானதாக நினைத்து ரிடையர் ஆனூர்' என்று குறித்தனர்!

ஆதாரம்: ஸ்போர்ட்ஸ்டார்
தகவல்: மாலி

● டெஸ்ட் பந்தயத்தில் ஓர் இன்னிங்ஸில் மிக அதிக ரன்களை எடுத்தவர் சோபர்ஸ்தான். பாகிஸ்தானுக்கு எதிராக 1958—ல் நடைபெற்ற பந்தயம் ஒன்றில் இவர் 10 மணி நேரம் 14 நிமிடங்கள் விளையாடி 365 ரன்கள் எடுத்து அவுட் ஆகாமல் இருந்தார்.

● ஒரே ஓவரில் (6 பந்துகள்) தொடர்ந்து ஆறு சிக்ஸர்களை அடித்தது சோபர்ஸ் மட்டும்தான்! 1968—ல் நாட்டிங்ஹாம்ஷயருக்கும், கிளாமோர்கனுக்கும் நடந்த மாட்சில் இவர் ஏற்படுத்திய சாதனை இது!





● பாகிஸ்தான் வீரர் முஷ்டக் முகம்மது, தமது 15—ஆவது வயது முடிந்த சில நாட்களிலேயே டெஸ்ட் பந்தயத்தில் ஆடினார். மிகச் சிறிய வயதில் டெஸ்ட் பந்தயத்தில் ஆடியதற்கான உலக ரிகார்டை ஏற்படுத்தியவர்.

● மிகப் பிரபல பாட்ஸ்மேனுன டான் பிராட்மேன், தம்முடைய கடைசி டெஸ்ட் இன்னிங்ஸில் பூஜ்ஜியத்தில் அவுட் ஆனூர்.

—ஏ. கே. நாசர்.





அலசல்




இன்றைய பெண்கள் கிரிக்கெட்டின் நிலை என்ன? அது ஏன் பாபுலர் ஆகவில்லை? போன்ற விஷயங்கள் பற்றி கிரிக்கெட் வீராங்கனை **சுமதி அய்யர்** சுமார் மூன்று மணி நேரம் பேசினார். அவர் சொன்ன சில கருத்துக்கள்:

- ஆண்கள் கிரிக்கெட் பல நூறு வருடங்களாய் இருக்கிறது. பெண்கள் கிரிக்கெட்டோ — இந்தியாவைப் பொறுத்த வரை — மாட்ச் என்று ஆரம்பித்தது 73 வாக்கில்தான். இருந்தாலும் கடந்த சுமார் 10—12 வருடங்களில் ஏராளமாய்த்தான் முன்னேறியுள்ளது.

- கிரிக்கெட்டைப் பொறுத்தவரை ஆண், பெண் வேறுபாடே இல்லை என்பதைப் பலர் ஒப்புக் கொள்வதே இல்லை. கிரிக்கெட்டெல்லாம் பெண்களுக்குச் சரிப்பட்டு வராது என்கிற எண்ணம் இன்னும் இருக்கிறது; பெண்களால் தொடர்ந்து பலமணி நேரம் வெயிலில் நின்று ஆட முடியுமா? என்கிறார்கள். 'இதில் பிரச்சினை எதுவுமே இல்லை. சொல்லப் போனால், ஐந்து நாட்கள், தொடர்ந்து உட்கார்ந்து மேட்ச் பார்ப்பதைவிட, மேட்ச் ஆடுவது சுலபம்.

- பத்திரிகைகளும், மற்ற மீடியாக்களும் பெண்கள் கிரிக்கெட்டுக்கு, போதிய விளம்பரம் தராததும் பாப்புலர் ஆகாததற்கு ஒரு காரணம். அரசாங்கம் கூட, ஆண்கள் மாட்சுக்கு லீவு அறிவிக்கிறது. ஆனால் பெண்களுக்கு இல்லை!

- பெண்கள் கிரிக்கெட்டை கிரிக்கெட் போர்டு ரொம்பவும் அலட்சியம் பண்ணுகிறது. பாருங்கள்! 83 டிசம்பரில் நடந்திருக்க வேண்டிய ராணி ஜான்ஸி கோப்பைக்கான மாட்ச் 84 டிசம்பரில் தான் நடந்தது. 84—ல் நடந்திருக்க வேண்டிய மாட்சுகள் இன்னும் ஒன்று கூட நடத்தப்படவில்லை.

- ஆட்டத்திறமை என்று பார்த்தாலும் நம் அணி எந்த வெளிநாட்டு அணிக்கும் குறைந்தது கிடையாது. ஆஸ்திரேலியா, வெஸ்ட் இண்டீஸ், இங்கிலாந்து, நியூஸிலாந்து என்று பல நாட்டுப் பெண்கள் டீம்கள் இந்தியா வந்திருக்கின்றன. அத்தனை மாட்சுகளில், ஒன்றில் தான் தோற்றிருக்கிறோம். மற்றதெல்லாம் டிரா. இன்னொரு விஷயம். சொன்னால் நம்ப மாட்டீர்கள். இந்திய பெண்கள் டீம், அயல்நாட்டு மண்ணில் அதிகார பூர்வமாய் இதுவரை ஒரு மாட்ச் கூட ஆடியதில்லை!

- இந்தியாவில் நடக்கும் மாட்சுகளில்கூட, பிளேயர்ஸ் நடத்தப்படும் விதம், அவர்களுக்கு அளிக்கப்படும் வசதிகள் பற்றிச் சொல்ல வேண்டுமானால் ஒரே வார்த்தைதான்: பரிதாபம்! பிளேன் டிக்கட் வேண்டாம்! முதல் வகுப்பில்... அதுகூட இல்லையெனில் ரிசர்வ்டு கம்பார்ட்மெண்டிலாவது அழைத்துப் போகக் கூடாது? எத்தனை தடவை, மாட்ச் ஆடப்போகும் போதும், திரும்பி வரும்போதும், அன் ரிசர்வ்டு கம்பார்ட்மெண்ட்டில், நின்று கொண்டும், தரையில் உட்கார்ந்து கொண்டும் வந்திருக்கிறோம் தெரியுமா?

- வேலை வாய்ப்பு என்று பார்த்தாலும் பெண் கிரிக்கெட் ஆட்டக்காரர்களுக்குக் கம்மிதான். (சுமதி கனரா பாங்கில் இருக்கிறார்.)

- இப்போது ஸ்டேட் டீம் என்றால், அந்தந்த மாநிலத் தலைநகரத்தில் இருப்பவர்களுக்கே சான்ஸ் கிடைக்கிறது. இது கூடாது. உதாரணமாக, தமிழ்நாடு டீமில், மதுரை, திருச்சி, சேலம் கோயமுத்தூர் போன்ற இடங்களில் இருக்கிற திறமையான பெண்களைத் தேடிக் கண்டு பிடித்து, சேர்த்துக் கொள்ளவேண்டும்.

- ஆஸ்திரேலியா, இங்கிலாந்து, போன்ற நாடுகளில் கல்யாணம் ஆன பின்பு கூட பெண்கள் கிரிக்கெட் தொடர்ந்து ஆடுகிறார்கள். இந்தியாவைப் பொறுத்தவரை; திருமணம் ஒரு தடைக்கல்லாகவே இன்றும் விளங்குகிறது.

பேட்டி: **எஸ். சந்திரமௌலி**

படம்: **யோகா**

# மது... மை டியர்

"நாளைக்குப் புது வருஷம் பிறக்கப் போகுது. நல்லபொழுதா நமக்கு விடியட்டும்னு வேண்டிக்கோ. அடுத்த வருஷம் இதே தேதில நாம ரெண்டு பேருக்கும் நல்ல இடத்தில வேலைகிடைச்சதும்மாஅட்டகாசமா சந்தோஷமா வந்து நிக்கணும்னு வேண்டிக்கோ..."

ரகு காதில் கிசுகிசுத்தான்.

வேலை கிடைக்க வேண்டியதுதான்! படித்து முடித்து மூன்று வருஷங்களை முழுங்கியாகி விட்டது.

பெருமாள் கோயில் பெரிய படியைப் பித்தளைத் தகட்டில் கால் படாமல் தாண்டும் போது அவர்கள் எதிர்ப்பட்டனர்.

மூன்று பெண்கள்.

இரண்டு பெண்கள் பதினைந்து, பதினாறில் ஆஃப் சாரியிலும், ஒரு பதினான்கு வயதுப் பெண் பாவாடை ஷர்ட்டிலும்.

பெரிய பெண்ணின் கையில் ஒரு கூடையும், அடுத்தவள் கையில் எண்ணெய்த் தூக்கும்.

'டக்கர்டா' என்றான் ரகு சூழ்நிலையை மறந்து.

கடைசிப் பெண் திரும்பிப் பார்த்த பார்வையில் ரகு பார்வையை மாற்றிக் கொண்டான்.

ஒரு நிமிஷம் முன்பு பெரிய மனிதன் போல அக்கறையுடன் உபதேசித்தவன் அதே இடத்தில் வைத்தே பெண்ணைப் பார்த்ததும் மாறிப்போனதை நினைக்க வெட்கமாக இருந்தது.

டோக்கனைக் காசுடன் கொடுத்துச் செருப்பை மாட்டிக் கொண்டதும் "கொஞ்சம் இரு அவர்கள் வரட்டும்" என்றான் ரகு.

"சாரி. இது தேவையில்லாத விஷயம்."

"உனக்குத் தேவையில்லேன்னு நீ கிளம்பு"

**மாயவன்**



வழியில்லே. எதிர்த்தாற்போலிருந்த கடையில் அவன் சிகரெட் வாங்கிப் பற்றவைத்துக் கொண்டு காத்திருந்தான்.

தூரத்தில் அவர்கள் வருவதைப் பார்த்து, ரகு உஷாரானுன். சிகரெட்டைக் கீழே போட்டு, மிதித்தான்.

யதேச்சையாக நடந்து வந்தவர்கள் எங்களைப் பார்த்ததும் சுதாரிப்பானுர்கள்.

எங்களைப் பார்க்காமலே கடந்து போனுர்கள். கடைசிப் பெண் கொஞ்சம் மெதுவாக வர இருவரும் திரும்பி, ''மது.. சீக்கிரம் வா...''என்றனர்.

ரகு உடனே, ''மது... ஹாப்பி நியூ இயர்...'' என்ருன் சப்தமாக.

அவர்கள் வேகம் கூடியது.

''மச்சி! வீட்டைக்கண்டு பிடிச்சுட்டேன். அவங்க படிக்கற ஸ்கூலையும் கிளாசையும் கூட விசாரிச்சுட்டேன்...'' என்ருன் ரகு மறுநாள் சந்தோஷமாக.

பிறகு தினந்தோறும் சாயங்காலம் நாலு மணிக்கு டீக்காக டிரெஸ் செய்து கொண்டு ஸ்கூட்டரில் என் வீட்டிற்கு ஆஜராகிவிடுவான்.

அவர்கள் மூன்று பேரும் வீட்டில் நுழையும் போது திரும்பிப் பார்த்தனர் என்றும், கதவைச் சாத்தும் பொழுது கடைசிப்பெண் டாட்டா காட்டினுள் என்றும் ரகு என்னிடம் கதை விட்டான்.

ரகு என்னை விட்டுவிட்டு, அவன் மட்டும் அந்த வீட்டினுள் நுழையத் தீர்மானித்திருந்தான்..ஸ்கூட்டரை வாகவமாக வீட்டின் வாசலில் நிறுத்திய பொழுது முண்டா பனியனுடன், திரண்ட தோளும், அகன்ற மார்புமாக வெளிப்பட்ட அவர்களின் தந்தையைப் பார்த்ததும் குனிந்து, ஸ்கூட்டரில் ஏதோ ரிப்பேர் செய்வதுபோல் பாசாங்கு காட்டிவிட்டு, ஓடிவந்துவிட்டான்.

''என்ன, ரகு சண்டையில முக்கியமான சட்டத்துல என்னைக் கழட்டிட்டியே..'' என்ற போது, பதில் சொல்லவில்லே.

''சரி... நீ போய்க்காண்பியேன். ஏதேனும் ஒரு காரியத்தை வெச்சு நுழைஞ்சுடு. பிறகு நான் அந்த வீட்டுப் பக்கமே வரமாட்டேன்''

♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦♦

''பானையை உடைச்சு பொங்கலே வெளியே எடுத்துட்டேன்! பொங்கலே உடைக்கணும் ஒரு சம்மட்டி கொண்டா பத்மா!''



என்ருன். ''சரி '', என்று சொல்லிப் பேச்சை நிறுத்தினேன்.

காலையில் மார்க்கெட் போகும்போது அந்த வீட்டில் இருந்து ஒரு பன்னிரண்டு வயசுப் பையன்இறங்குவதைக் கவனித்தேன்.

அவன் என் பக்கம் வரும் வரைமெதுவாக நடந்தேன்.

''ஆமாம், இந்தத் தெருவில ஆதிமூலம்னு ஒருத்தர்...'' என்று கேட்டேன்.

''ஆதிமூலமா...'' என்று கேட்டுவிட்டு நாடியைச் சொறிந்தான்.

''என்னவா இருக்காரு...?''

''இன்னிக்கு ஞாயிற்றுக்கிழமை இல்லியா, ஃப்ரீயாத்தான் இருப்பாரு... இண்டியன் பேங்க்ல இருக்காரு'' என்றேன் அவன் பாணியிலேயே.

படக்கென்று சிரித்துவிட்டான்.

''வாங்க எங்கஅப்பாகிட்டே கேட்கலாம்'' என்றான்.

''நல்ல சமயம்! கடவுளே இந்தத் தெருவில் ஆதிமூலம் யாரும் இருக்கக் கூடாது!'

வாசல் கேட்டைத் திறந்து கொண்டு பாதி திறந்த கதவின் வழியாக ஸ்கிரீனை விலக்கிக் கொண்டு உள்ளே போனேம்.

நாங்கள் வருவதை ஜன்னல்வழியாக மூன்று பெண்களும் கவனித்ததை நான் பார்த்துக் கொண்டேன்.

''உட்காருங்க...'' என்ருன் ஒரு நாற்காலியைப் போட்டு.

உட்கார்ந்ததும், ஃபேனைத் தட்டிவிட்டான்.

ஒரு சாதாரண வீடானலும் நன்கு கவனித்து வீட்டை அழகு படுத்தியிருந்தார்கள்.

கொல்லைப்புறத்திலிருந்து வந்தவரிடம் அவர் மனைவி விஷயத்தைச் சொன்னுள்:

'அவர் பக்கத்தில் வந்ததும் எழுந்திருந்து 'வணக்கம்'' என்றேன்.

அவர் உட்கார்ந்தார்.

''வந்து...இந்தத்தெருவில ஆதிமூலம்னு'' நாக்குழறியது.

திடுக்கிடும்படியாக, ''நான்தாங்க ஆதிமூலம்...'' என்ருர்.

எனக்குத் தலைசுற்றியது. இப்படியொரு சாத்தியம் இருக்கும் என்று எதிர்பார்க்கவில்லே. எப்படி சமாளிக்கப் போகிறேன்!

''சாரி சார்! நீங்க இண்டியன் பேங்கல'' என்றதும்,

''ஐயையோ! தவருக விசாரிச்சு வந்திருக்கீங்க. அது அடுத்த தெரு! நான் பிரைவேட் கம்பெனில இருக்கேன். இந்த ஊருக்கு வந்து மூணு மாசம்தான் ஆறது...'' என்ருர்.

ஆளுக்கொரு புஸ்தகத்துடன் படிப்பதாக பாவனை பண்ணிக் கொண்டு, எங்களையே கவனித்துக் கொண்டிருந்தனர், பெண்கள்.

''உங்க பேர் என்ன...?''

சொன்னேன்.

''அப்பா பேர்...என்ன செய்யருர்.. சொந்த ஊரே இதுதானு...'' என்ருர்.

'என்னடா இது! இண்டர்வியூவே நடத்திவிடுவார் போல இருக்கே' என்று சலித்துக் கொண்டேன். ஆனல் அந்தக் கேள்விக்குப் பதில் சொன்ன பிறகு எனக்கு அங்கே மதிப்பும் வரவேற்பும் கூடிப்போனது மிகமிக ஆச்சரியமான ஒன்று!

''ஓ... அவர் பேரனு நீங்க! அவர் அந்தக் காலத்தில பெரிய லாயராச்சே! சாரட்ல இல்ல கோர்ட்டுக்குப் போவாரு! நான்கூட என் சின்ன வயசுல பார்த்துஇருக்கேன். ராஜாஜி கூட உங்க தாத்தாவுட்ல தான் வந்தா தங்குவாரு...''

அவர் பேசப் பேச என் காதுகளையே என்னால் நம்ப முடியவில்லை.

''நீங்க என்ன படிச்சிருக்கீங்க?'' என்று கேட்டார்.

சொன்னேன்.

''மேல படியுங்க. விட்றாதீங்க. உங்க தாத்தா மாதிரி ஆகணும்...''

'வயசானால் ஆயிடலாம்' என்று மனதிற்குள் சொல்லிக் கொண்டேன்.

''அடிக்கடி வீட்டுக்கு வரணும்'' என்று கேட்டுக் கொண்டார்.

கதவைத் திறந்து வெளியே வரும்போது, தெருவின் கடைசியில் ரகு ஸ்கூட்டருடன் காத்திருந்தான்.

ஜன்னலில் முகங்கள் பூத்தன.

அவர் 'நம்பிக்கையாய் வேலை கிடைத்து விடும் நன்கு முயற்சி செய்யுங்கள்.' என்று சொன்னது ஒரு புது தெம்பைக் கொடுத்திருந்தது.

ரகு ''சக்ஸஸா?'' என்று கேட்டான்.

''கிராண்ட் சக்ஸஸ்'' என்றேன்.

''பயில்வான் இருந்தாரா?'' என்று கேட்டான். ''அவர்கிட்டேதான் இவ்வளவுநேரம் பேசிட்டு வர்றேன்...'' என்றதும் நம்ப முடியாமல் பார்த்தான்.

''பெரிய ஜோக்கைச் சேனு! ஆதிமூலம்னு ஒரு மனுஷரைத் தேடிக்கிட்டு வந்ததா கதை வுட்டேன், கடைசில அவர் பேரு ஆதிமூலம்!''

''அடப்பாவி! அதுக்கு அப்புறமும் பிழைச்சு வந்தியா...?'' என்று ஆச்சரியப்பட்டான்.

**வா**ரத்திற்கு ஒரு தடவை ஞாயிறு பகல் பொழுதில் போய் ஜாலியாசப் பேசிப் பொழுதைப் போக்கிக் கொண்டிருந்தவனுக்கு அவர்கள் பழக்கம் உற்சாகம் தர வாரத்தில் இரண்டு நாள், மூணுநாள் என்று அவர்கள் வீட்டிற்குச் செல்வது அதிகரித்தது.

மதுமிதா தான் வரைந்த படங்களைக் காட்டினாள். ''இன்னும் நிறைய டெவலப் பண்ணிக்கோ. லைன் ட்ராயிங் உனக்கு நல்லாவே வர்றது. ம.செ.வின் படங்களை நல்லா கவனி...'' என்றேன்.

அவள் கண்களில் உற்சாகம் கொப்பளிக்க என் நினைவாற்றலை மெச்சினாள்.

நினைத்துப் பார்த்தால் ஒரு இனிய கனவு மாதிரி இருக்கிறது.

**ஆ**று மாதங்கள் கழிந்துவிட்டன.

''இப்போது ராஜியுடனோ அல்லது வித்யாவுடனோ தனியாகப் பேசிக் கொண்டிருப்பதிலிருந்து, மதுமிதா ஸ்கூலிலிருந்து திரும்பத் தாமதமானால் அழைத்து வருவது வரை அத்தனை சுதந்திரம், உரிமை!

மதுமிதாவின் பிறந்தநாள் அன்று நான் பரிசாகக் கொடுத்த 'கனவுகள் — கற்பனைகள் — காகிதங்கள்' புஸ்தகம் எல்லாராலும் வெகுவாகப் பாராட்டப் பெற்றது.

அதன் கடைசிப் பக்கத்தில் 'என் கனவுகள் — கற்பனைகள் — நீ' என்று எழுதியிருந்தேன்.

மது கவனித்தாளோ இல்லையோ வித்யா பார்த்திருக்கிறாள்.

வித்யா ஆரம்பம் முதலே என்னை நேசித்து வந்திருக்கிறாள் போலும்! அவள் அடிக்கடி சோம்பல் முறிப்பாள். கொஞ்சம் சப்தமாகச் சிரிப்பாள்.

நான் முதலில் இதைப் பெரிதாக நினைத்துக் கொள்ளவில்லை.

என் கவனம் எல்லாம் ஒரு பூவைப் போல் மென்மையாகவும், அமைதியாகவும் இருக்கும் மதுமிதாவைப் பற்றியே இருக்கும்.

**எ**னக்கு வெற்றூரில் வேலை கிடைத்ததும், ''ஸ்வீட் எங்கே?'' என்று முதலில் கேட்டது மதுதான்.

இரண்டு மாதங்கள் கழித்து மூன்று நாட்கள் லீவு கிடைக்க வீவில் ஊருக்குப் பறந்தேன்.

அன்று அம்மா, ''எங்கேடா'' என்று கேட்டாள்.

''இப்போ வந்துருவேன்'' என்று மட்டும் சொல்லி விட்டு சைக்கிளில் கிளம்பினேன்.

கேட்டைத்திறந்து சைக்கிளை உள்ளே தள்ளி ஸ்டாண்ட் மாட்டும் பொழுது ஜன்னல் வழியாக வித்யா ராஜியின் சந்தோஷ முகங்கள் தென்பட்டன. ஸ்கிரீனை விலக்கியதும் அவர்களின் அம்மா, ''வாங்க... இவங்க அப்பா ஊர்ல இல்லை. இருங்க?''—என்று நாற்காலியைக் காட்டினாள்.

முதல்ல் பேசியது ராஜிதான்.

''வேலையெல்லாம் எப்படி இருக்கிறது. நான் போட்ட கார்டு கிடைத்ததா? பெரிய இடத்ல வேலை கிடைச்சாச்சு. ஏதோ எங்க ஞாபகம் இருக்கிறதே பெரிய விஷயம்தான்'' என்றாள்.

''ஐயோ! உங்களையெல்லாம் மறக்க முடியுமா... எவ்வளவு அரட்டை அடிச்சிருக்கோம்! பேசிப் பழகியிருக்கோம்! என்னோட மறக்கமுடியாத சந்தோஷ நேரங்கள் இல்லையா அது..''

''உங்க ஆபீஸ்ல எத்தனை லேடீஸ். அன்மேரீட் எத்தனை... எல்லார்கிட்டேயும் நல்லா பழகுவீங்களா... யார் யாருக்கும் ஜோக் அடிக்கறதுக்கும் உங்களுக்குச்சொல்லியாதரணும்'' என்றாள் வித்யா.

''ட்டேய் போரடிக்காதே வித்யா..''என்றேன்.

''ஆமாம்! இனிமேல் எங்க பேச்சு போர் தான்'' என்றாள்.

''சரி.. மது எங்கே?'' என்றேன்.

''நாளைக்கு எக்ஸாம் பிரிபேர் பண்ணிக்கிட்டிருக்கா...''

''நான் வந்திருக்கேன்! ஒரு நிமிஷம் வந்து பார்க்கக்கூடாதா...?''

''ஸாரி. அவளை அங்க இங்க நகரக்கூடாதுன்னு நான் கண்டிஷன் போட்டிருக்கேன். போன டெஸ்ட்டுலே மார்க் ரொம்பகம்மி!''

எனக்குச் சட்டென்று ஒரு உண்மை புரிந்தது. மது அடக்கி வைக்கப்பட்டிருக்கிறாள். வித்யாவின் காதல் தோல்வி – நான் கொடுத்த ஏமாற்றம், எனக்கு மதுமேல் உள்ள அன்பு—

# பட்டுப் புடவை பரிசுத்திட்டம்

போட்டி 37



## ராஜீவுக்கு ஒரு அட்வைஸ்

வோட்டுரிமை உள்ள அனைவருக்கும் ஆலோசனை வழங்கவும் உரிமையும் உண்டு. புதிதாகப் பிரதமர் பதவி ஏற்றிருக்கிறார் ராஜீவ். அனுபவம் அதிகமில்லாத இவருக்கு மக்கள் சரித்திரம் காணாத அளவில் மாபெரும் ஆதரவு அளித்திருக்கிறார்கள். எழுபது கோடிக்கு மேற்பட்ட மக்களின் எதிர்காலத்தை நிர்ணயிக்கிற பெரும் பொறுப்பை ஏற்றுள்ள இந்தஇளைஞருக்குஎன்னஅறிவுரை கூற விரும்புகிறீர்கள்? நீங்கள் மிக முக்கியமானதென்று கருதும் ஒரே ஒரு 'அட்வைஸ்' மட்டுமே வழங்கலாம். கீழே வெற்றிடத்தில் எழுதி இந்த அரைப் பக்கத்தைக் கத்தரித்து அனுப்புங்கள். பிரசுரமானால் பரிசு. தவிர ஒருவருக்குக் குலுக்கல் முறையில் பட்டுப் புடவை. உறையின் மேல் ''ராஜீவுக்கு அட்வைஸ்'' என்று குறிப்பிடவும்.

**முடிவு தேதி 28-1-85**

**இன்னும் 16 பட்டுப் புடவைகளே பாக்கி. வாரம் தவறாமல் போட்டிகளில் பங்கு கொண்டு அவற்றில் ஒன்றைப் பெற்றுவிடுங்கள்.**

என் பெயர் :.................................

விலாசம் : .................................

.................................

எல்லாம் சேர்ந்து வித்யாவை அப்படி மாற்றியிருக்கிறது.

''வித்யா' நான் ஒரு நிமிஷம் மதுவைப் பார்க்கலாமா? ஒரே ஒரு நிமிஷம்.''

வித்யா உதட்டைக் கடித்துக்கொண்டு யோசனை செய்தாள்.

''ம்... சரி! எதுவும் கேள்வி கேக்காதீங்க. ஒ..கே..'' என்றாள்.

கதவின் பக்கம் போனபோது அவள் புஸ்தகத்தைக் கீழே வைத்துவிட்டு ஸ்டூலில் இருந்து இறங்கி வந்தாள். ''ஹலோ! சௌக்கியமா'' என்றாள்.

முகத்தில் சந்தோஷம் பொங்கியது.

''ம். நல்லா படிக்கறயா?''

''ம்...'' என்றாள்.

''ஆமாம்! நான் உனக்கு லட்டர் போட்டேன் இல்லையா, பதில் எழுதக்கூடாதா?''

என்ன பதில் சொல்லப் போகிறாள் என்று காத்திருந்த போது,

''ஹலோ...காப்பி''என்று வித்யா காப்பி டம்ளரை நீட்டினாள்.

''சரி அப்புறம் பேசலாம்! போய்ப்படி மது'' என்றாள் வித்யா.

எனக்கு வித்யாவின் மேல் எரிச்சலாக வந்தது! ராட்சசி! உன்னை எப்படி நேசிக்க முடியும்! நீயும்... உன் ஆம்பளைத்தனமான காதலும்! உனக்கு நான்தான் கிடைத்தேனா!

மூன்றும் நாள் ஊருக்குத் திரும்பும் பொழுது மறுபடியும் சொல்லிக் கொள்ளப் போனேன். அவள் அப்பா என்னிடம் அரை மணி நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

அவள் அம்மா எனக்கு அவசரமாக ஐஸ் சர்பத் தயாரித்துத் தந்தாள்.

வித்யாவும் ராஜியும் பேசிக் கொண்டிருந்தார்கள். ''வரேன்.. சரி மது எங்கே?''

''படிக்கறா...!'' என்றாள் வித்யா காட்டமாக!

மதுவை அடைத்து வைத்திருக்கிறாள் என்பது புரிந்துபோனது. சட்டென்று ஒரு நிமிஷம் ஒரு வெறி என்னுள் புகுந்தது.

செருப்பை மாட்டுவதற்கு முன் அவள் ரீடிங்ரூம் உள்ளே நுழைந்தேன். மது புஸ்தகத்தை வைத்துக் கொண்டு நாங்கள் பேசுவதையே கேட்டுக் கொண்டிருப்பது புரிந்தது.

''மது... நல்லா படி! கிளாஸ்ல ஃபர்ஸ்ட் வரணும்! பரிசுவாங்கினதும், மார்க்வந்ததும் எனக்கெழுது... உனக்கு நல்ல ப்ரெசென்டேஷன் வாங்கிண்டு வர்ரேன்... ஓ.கே.'' என்றேன்.

அவள் தலையாட்டினாள்.

''பயப்படாமல் படி!''என்றபோதுவித்யா என்னைப் பார்த்தாள்.

வித்யா பார்த்துக் கொண்டிருக்கும் பொழுதே மதுவின் கன்னத்தில் தட்டி,

''வர்ரேன் மது! மார்க் லிஸ்ட் வந்ததும் லட்டர் போடு. பெரிய ப்ரெசென்டேஷனோட வர்ரேன். ஓ.கே..'' என்றேன் வித்யாவிற்கு மறுபடியும் உறைக்கிற மாதிரி. சைக்கிளைஉருட்டிக் கொண்டு வெளியே வரும் போது, ஜன்னலில் மதுவின் மதுரமான முகமும் இருந்தது!




சென்னை நகரிலும் அதன் சுற்றுப்புறங்களிலும்
பல அருமையான வீட்டு மனைத் திட்டங்களை உருவாக்கித்தந்த
P.V. முரளி தரும் மற்றுமோர் வீட்டுமனைத் திட்டம்.

# ஸ்ரீ லக்ஷ்மி நகர்




அரசின்
முழு
அங்கீகாரம்
பெற்றது.

CRDTCP
M 83
252 —
L. P. 199.

சென்னையைச்
சுற்றிலும் 13 இடங்
களில் ரூ.2,000/-
முதல் வீட்டு மனைகள்
கிடைக்கிறது.

தவணைமுறை
யிலும்
கிடைக்கிறது.

MMDA-வின் 'குட்டி சென்னை' நகரமான மறைமலை நகரையொட்டி அரசாங்கத்தால் கட்டப்பட்டுள்ள 22,000 வீடுகளுக்கு எதிரிலுள்ள இப்புதிய 'ஸ்ரீ லக்ஷ்மி நகர்' அனைத்து வசதிகளுடனும், மின்சார இரயில் நிலையத்திலிருந்து நடை தூரத்திலும், குறைந்த விலையிலும் கிடைக்கிறது.

1800 சதுர அடிகள் கொண்ட பிளாட் ஒன்றின் விலை ரூ. 7,875/-
2400 சதுர அடிகள் கொண்ட மனை ஒன்றின் விலை ரூ. 10,500/-

உடனடியாகப் பத்திரம் பதிவு செய்பவர்களுக்கு சலுகைகள் வழங்கப்படும்.
மனைகளை நேரில் பார்வையிட உடனே தொடர்பு கொள்ளுங்கள் :

# முரளீஸ் எஸ்டேட்ஸ்

30, மஹாலக்ஷ்மி தெரு, (உஸ்மான் ரோடில் உள்ள சிவா விஷ்ணு கோயிலுக்கு எதிரில்)
தியாகராய நகர், சென்னை-600 017, போன் : 440777.

முரளியின் முதலீட்டு நிறுவனம்

உங்கள் சேமிப்புகளை, அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைகள் அடமான பத்திரங்களில் முதலீடு செய்து, பதிமூன்றே மாதங்களில் **22%** கூட்டுவட்டி பெற்று பயனடையுங்கள்.

மேலும் அரசு மற்றும் பொது நிறுவனங்களின் ஃபிக்சட் டெபாசிட்டுகளில் முதலீடு செய்ய எங்கள் நிபுணர் குழுவிடம் சிறந்த ஆலோசனைப் பெறுங்கள்.
விபரங்களுக்கு உடனே தொடர்பு கொள்ளவும் :

# இந்துஸ்தான் இன்வெஸ்ட்மெண்ட் சர்வீஸஸ்

30, மஹாலக்ஷ்மி தெரு
தியாகராய நகர், சென்னை-600 017, போன் : 440777.




# நெருப்பு மலர்

**முன்கதை சுருக்கம்**

இருத்திகாவை மேல் படிப்புக்குத் தில்லிக்கு அனுப்புகிறாள் அன்னை புவனேசுவரி. ரயிலில் அறிமுகமாகிறான் ராணுவ அதிகாரி அர்ஜுன். அறிமுகம் காதலாக மலர அவன் தகப்பனார் பாஸ்கரப்பாவின் ஆசியும் கிடைக்கிறது. புதுதில்லியில் கல்லூரி ஹாஸ்டலில் தங்கும் இருத்திகா, தன் தாயாரின் விருப்பத்துக்கு இணங்க ஒரு நாள் விஷ்ணுபிரசாத் என்பவனைப் போய்ப் பார்க்கிறாள். அப்போது அவனுக்கும் தன் தாயாருக்கும் உள்ள தகாத உறவு பற்றி அவளுக்குத் தெரியவருகிறது. விஷ்ணுபிரசாத் தானும் புவனேசுவரியும் சேர்ந்து எடுத்துக் கொண்ட பல புகைப்படங்களைக் காட்டுகிறான். அதைவிட அதிர்ச்சி அளிப்பதாக, அவன் இருத்திகாவையே அடையவும் முயற்சி செய்கிறான். அவனிடமிருந்து தப்பி அர்ஜுனிடம் அடைக்கலம் புகுகிறாள் இருத்திகா. ஆனால் அர்ஜுனுக்கு ராணுவத்தின் அழைப்பு வந்துவிடுகிறது. பஞ்சாபில் கலகக்காரர்களை ஒடுக்க அவன் போகவேண்டியிருக்கிறது. இந்தச் சூழலில் இருத்திகா டில்லியில் தங்குவது ஆபத்து என்றும் சென்னை திரும்பி அவள் தன் தாயுடனேயே தான் பஞ்சாபிலிருந்து திரும்பி வரும் வரை இருக்க வேண்டும் என்றும் கருதி அனுப்பி வைக்கிறான் அர்ஜுன்.

ஆனால் இருத்திகாவுக்கு முன்பாகவே விஷ்ணு பிரசாத் சென்னை வந்து, புவனேசுவரியுடன் மகாபலிபுரத்துக்கு உல்லாசப் பயணம் போயிருப்பது தெரியவர, வெறுப்பும் மனக் கசப்பும் மிக, இருத்திகா வீட்டை விட்டு வெளியேறி, அனந்தசாமியின் ஆதரவை நாடுகிறாள். உத்தமரான அனந்தசாமிக்கு இருத்திகாவைக் குழந்தைப் பருவத்திலிருந்து தெரியும். தன் வீட்டின் அறைகளை வாடகைக்கு விட்டு வாழ்க்கை நடத்துகிறார் அவர். அவர் வீட்டுக்கு வந்து சேரும் இருத்திகா, தன்னைத் திருப்பி அழைத்துப் போக வரும் தாயாருடன் போக மறுத்து, அனந்தசாமி தனக்கு ஒதுக்கிய அறையிலேயே தங்குகிறாள். அதே வீட்டின் வேறு ஒரு அறையில் தங்கியிருக்கும் வாலிபக் கவிஞன் சாயிராம், இருத்திகாவுக்கு அறிமுகமாகிறான்.

## 24

**ம**றுநாள் காலையில் இருத்திகாவுக்குச் சாயிராமை அறிமுகப்படுத்தினார் அனந்தசாமி. ஒல்லியாய், ஒடிந்து விழுகிற தோற்றத்தில் பெரிய கண்களை இன்னும் பெரிதாக்கிக் காட்டுகிற தடித்த கண்ணாடியில், மாநிறத்திற்கும் சற்றே குறைந்த நிறத்தில் சேர்க்கக் கூடியவனாக நின்றுகொண்டிருந்தான் அவன். தினமும் எழுந்து, பல் தேய்த்துச்சமையல் அறைக்கு வருகிற மாதிரி லுங்கியும், கையில்லாத பனியனும், தோளில் தொங்கின துவாலையுமாக இயல்பாக வந்தவன் அனந்தசாமியுடன் மிக அழகாக ஓர் இளம் பெண் நின்று கொண்டிருப்பதைப் பார்த்துத் தன் உடைக்காகக் கூச்சப்பட்டு அறைக்குத் திரும்ப நினைத்தான்.

அனந்தசாமி அவனைத் தடுத்து நிறுத்த முயன்றார்.

''எங்கே போறே சாயிராம். உன்னே வாப்பா....''

''இதோ வரேன் சார். ஒரே நிமிஷத்துலே வரேன்....''

சொல்லிவிட்டு ஓடிப் போய் ஒழுங்காய் பாண்டும் சட்டையும் போட்டுக் கொண்டு இரண்டே நிமிடங்களில் திரும்பி வந்து குழந்தை மாதிரி சிரித்துக் கொண்டுநின்றான்.

''இப்ப சொல்லுங்க சார்....'' என்றான்.

''எதுக்கப்பா இவ்வளவு அவசரமா ஓடினே? இவங்களை உனக்கு அறிமுகப் படுத்தத்தான் கூப்பிட்டேன்....''

''அதுக்காகத்தான் சார், நானும் ஓடினேன். இவங்க எதிரிலே லுங்கியோட இருக்கவேண்டாம்னு பாண்ட், சட்டைபோட்டுக்கிட்டு வந்தேன்....''

''அதுலேஎன்னப்பா, லுங்கியோடுஇருந்ததனால் என்ன வந்தது....?''

''அதுஅவ்வளவுசரியாஇருக்காதே, சார்..''

அவன் இருத்திகாவை ஏறிட்டுப் பார்த்துச் சிரித்தான். அந்த முகமும், பார்வையும், சிரிப்பும் அவளை ஆச்சரியப்படுத்தின...... நிறையவே குழந்தைத்தனமும், வெகுளித்தனமும் மீதமிருப்பது புரிய 'இவனு பி.ஏ. முடித்திருக்கிறான்...? இவனு கவிதைகள் எழுதுகிறான்.... ஒருவேளை பாப்பா பாட்டு ஏதாவது குழந்தைகளுக்கு எழுதியிருப்பானோ? அனந்தசாமிக்கும் குழந்தை மனசுதானே. அதனால் அவரை ரசித்திருப்பாரோ என்ற சந்தேகம் தோன்ற அவள் அவனையே பார்த்துக் கொண்டிருக்க, ''என்னம்மா. அப்படியே நின்னுட்டே. நான் சொன்ன சாயிராம்மா.... பார்க்கவும் பழகவும்தான் குழந்தை. ஆனால் கவிதை எழுதறப்போ எங்கிருந்துதான் அத்தனை வேகமும், ஆக்ரோஷமும் வரும்னே தெரியலேம்மா.... நீ படிச்சுப் பார்க்கணும்....'' என்று அனந்தசாமி அவளது எண்ணங்களைப் புரிந்து கொண்டவராக அறிமுகப்படுத்த சாயிராம் வெட்கத்தோடு கூடிய புன்முறுவல் படர, ''போங்க சார்....'' என்றான்.

''இவங்க யாருன்னு சொல்லலையே சார்?''

''பெயர் இருத்திகா. என் சிநேகிதருடைய பெண். எனக்கும் பெண் மாதிரி. நீ, இவள் எல்லாருமே எனக்குக்குழந்தைகள் தானேப்பா....''

-இந்துமதி

''ஏன் சார், படிக்கறுங்களா....?''

''ம்ஹூம், ஒரு வாரம் முன்பு வரை படிச்சுண்டிருந்தான். இப்போ உன்னை மாதிரியே அம்மாவோடு சண்டை போட்டுக் கொண்டு இங்கே வந்திருக்கிறுன்....''

''நீங்ககூட கவிதை எழுதுவீங்களா?''— அவன் தன் கண்களை இன்னும் அகலமாக்கிக் கேட்க அவள் சிரித்தாள்.

''ஏன் கவிதை எழுதறது மட்டும்தான் அப்பா அம்மாவை எதிர்த்துக்க வழின்னு நினைச்சீங்களோ....''

''ஆமாங்க, என்னைப் பொறுத்த வரை அதாங்க. எங்க அப்பா அம்மாவிற்கு — ஸாரி, அம்மாவைச் சேர்க்கக் கூடாதுங்க. அவளுக்கு ஒண்ணுமே தெரியாதுங்க. ரொம்ப குழந்தை மாதிரிங்க—''

''உங்களை மாதிரின்னு சொல்லுங்க....'' சடாரென்று கிருத்திகா சொன்னதும் அவன் வஜ்ஜையோடு புன்முறுவல் செய்து மெது வாகப் பேசினுன்.

''பின்னே என்னங்க. பேனு பிடிக்கிற இந்தக் கையை இரும்பும், கத்தியும் பிடிக்கச் சொன்னுல் எப்படிங்க....? அப்படியும் பட்டறையில் இரண்டு நாள் வேலை செய் தேங்க. மூன்ருவது நாள் அந்தச் சூடும், அனலும் தாக்குப் பிடிக்க முடியாம நேரா பஸ் ஏறி ரயில் பிடிச்சு ஓடி வந்துட்டேங்க..''

''சூட்டிற்கும், அனலுக்கும் பயந்து ஓடி வந்துட்டு என்னவோ கவிதை ஆசையில் ஓடி வந்த மாதிரி சொல்லிக்கிறீங்க...?''

''நான் அனல் சூடுன்னு சொன்னது பட் டறை சூட்டையில்லீங்க. எங்கப்பாவுடைய வார்த்தைகளை....''

அதைக் கேட்டுப் பெரிதாய்ச் சிரித்தார் அனந்தசாமி. ''பார்த்தாயாம்மா. இது தான் ஒரு கவிஞனுக்குள்ள வார்த்தை ஜாலம்....'' என்று சொல்லி ''சாயிராம்! கிருத்திகாவைக் கெட்டியாகப் பிடிச்சுக்கோ. இவளோடகூடப் படிச்ச ரெண்டு மூனு பொண்கள் ஸினிமா டைரக்டர், மிநூலிக்



டைரக்டரோட பெண்கள். இவன் பொரிக பண்ணினால் நிச்சயமா உனக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைக்கும்....'' என்றார்.

சடாரென்று தன் நாற்காலியை அவள் நாற்காலிக்கருகில் இழுத்துப் போட்டுக் கொண்டு சிறு பையனைப் போல் கெஞ்ச ஆரம்பித்தான் சாயிராம்.

''ஏங்க, நிஜமாவாங்க....? அப்படின்னு இன்னைக்கே போகலாங்க.... என்னைக்கூட்டிட்டுப் போங்க... ஒரு நானூறு பக்க நோட்டுப் புஸ்தகம் முழுவதும் கவிதை எழுதி வச்சிருக்கேங்க. எடுத்துக்கிட்டு வரேங்க... ஆமாம், யாரோட பெண்களெல்லாம் உங்களுக்குச் சிநேகிதம்....?''

''ம்... பாலச் சந்தருடைய பொண்ணு?''

''எந்த பாலச்சந்தர். கே.பி.யா?''

''ஆமாம்...''

''அடேடே. நான் அவருடைய பரம ரசிகன். என் கவிதைகளைப் புஸ்தகமாக வெளியிட்டால் முதல் பிரதியை அவர்கிட்டே தான் கொடுக்கணும்னு நினைச்சுக்கிட்டிருக்கேன்.... என் ஆசை, அபிலாஷை, லட்சியம் எல்லாம் உங்க மூலம்தான் நிறைவேறப் போகிறது. அதான் கடவுள் உங்களை இங்கே கொண்டு வந்து சேர்த்திருக்கிறார். ப்ளீஸ், என்னைக் கூட்டிட்டுப் போங்க. இன்னிக்கே போகலாமா, சொல்லுங்க....?''

அவனது படபடப்பையும், பரபரப்பையும், ஆச்சரியமாகப் பார்த்தாள் அவள். தயங்கிக் கொண்டே, ''அவங்க வீட்டுக்குப் போய் ரொம்ப நாளாகிறது. அவர் இப்போ இந்திப் படங்களில் பிஸியாக இருப்பதாகக் கேள்விப்பட்டேன். ஊர்லே இருக்காரான்னு தெரியலே.... எதற்கும் ஒரு டெலிபோன் பண்ணிப் பார்க்கறேனே...?''

''ஐயையோ வேணுங்க. டெலிபோன் பண்ணி அவர் ஊரில் இல்லைன்னு சொல்லி, வர வரைக்கும் காத்துக் கிட்டு.... அந்தப் பொறுமையெல்லாம் இல்லீங்க. நேர்லே போவோம். பார்ப்போம். அவர் இல்லைன்னால் அடுத்து உங்களுக்குத்தெரிந்த அந்த சினிமாக்காரங்க வீடுகளுக்கும் போய்விட்டு வந்துடலாம். ஒரு முயற்சிதானே...? இதுல தப்பு ஒண்ணுமில்லையே....? மாட்டேன்னு மறுத்துடாதீங்க... ப்ளீஸ்... போகலாம்னு சொல்லுங்க...''

அவனது கெஞ்சலைத் தாங்க முடியாத அனந்தசாமி, ''போய் விட்டுத்தான் வாயேன்மா....''என்று பொரிக செய்தார்.

''போவதைப் பற்றியில்லை மாமா..... அவர்கள் ஊரில் இருக்கிறார்களா என்று விசாரித்துக் கொண்டு அப்புறம் போகலாமே என்று பார்க்கிறேன்....''

''வேணுங்க.விசாரிச்சுக்கிட்டுப் போவதற்குள் நாளாயிடும். இன்னிக்கே கிளம்பிடலாம். ஒருத்தர் இல்லைன்னாலும், ஒருத்தர் இருப்பார். என்ன சொல்றீங்க...'' என்று சாயிராம் அவசரப்பட்டதும், அவள், ''சரி..'' என்று சிரித்தாள்.

''நானும் மாமாவும் சேர்ந்து சமைச்சு முடிச்சுட்டோம். குளித்து, சாப்பிட்டப்புறம் கிளம்பிடலாம்.... இதுக்கு நீங்க என்ன சொல்றீங்க...?'' — அவன் அதே பாவனை



## அருள்வாக்கு

இரண்டாயிரம் வருஷங்களுக்கு முன் இந்தியாவுக்கு வந்த மெகஸ்தனிஸ் அப்போது நம் ஜனங்கள் எவ்வளவு ஸத்யத்தோடு வாழ்ந்தார்கள் என்பதைக் கூறியிருக்கிறான். 'இந்திய மக்களுக்குப் பொய்யே சொல்லத் தெரியாது; தெருவில் போட்டுக் கிடக்கிற பணத்தைக்கூட எடுத்துச் செல்லமாட்டார்கள்' என்றெல்லாம் மெகஸ்தனிஸ் சொல்லியிருக்கிறான். அந்தக் காலத்து ஜனங்களின் மனசு மாதிரியே இப்போதும் இருக்கக் கூடாதா என்று ஆசையாக இருக்கிறது.

அன்றைக்கு அவர்கள் அவ்வளவு உயர்வாக இருந்ததற்குக் காரணம் என்ன? இன்று நாம் இவ்வளவு தாழ்ந்து போய்விட்டதற்குக் காரணம் என்ன? அந்தந்தக் காலத்தின் சூழ்நிலையே அந்தந்த மனப்பான்மைக்கும் காரணமாக இருக்கிறது. பழங்காலத்தில் பொது ஜனங்கள் எல்லோரும் கோவிலுக்குப் போனார்கள். அங்கே அவர்களுக்கு நல்வழி கூறுவதற்காக மகாபாரதம் முதலிய ஸத்கதைகள் நடைபெற்றன. இதற்காகவே ராஜாங்கத்தில் மானியம் தரப்பட்டு வந்தது. நாடகம், கூத்து எல்லாம் கூடத் தெய்வ சம்பந்தமாகவே இருந்தன. தங்கள் தொழிலைச் செய்வது ஆலய தரிசனம், ஸத் கதை சிரவணம் இவற்றுக்கே மக்களின் பொழுது சரியாக இருந்தது. இதனால் யோக்கியர்களாகவே இருந்தார்கள். இப்போது ஜனங்களைக் கவர்ந்திழுப்பதற்கு என்ன என்னவோ ஆபத்துக்கள் எல்லாம் வந்துவிட்டன. தர்மத்துக்கு விரோதமான படக்காட்சிகள், கதைப் புத்தகங்கள் எல்லாம் அதிகமாகிவிட்டன. ஜனங்கள் இதற்கிடையில் தத்தளித்துக் கொண்டிருக்கும்போது பலவிதமான அரசியல் கட்சிகள் வேறு அவர்கள் புத்தியைக் கலக்கிக் கொண்டிருக்கின்றன. எங்கேயும் சஞ்சலம், அதிருப்தி, யோக்கியதைக் குறைவு, லஞ்சம் இவை அதிகரித்துவிட்டன.

இவை நிவிருத்தியாக வழி ஒன்றுதான். பழைய காலத்தைப் போலக் கோவில்களைச் சமூக வாழ்வின் மத்திய ஸ்தானமாக்கிவிட வேண்டும். அன்றுபோல் இப்போதும் தெய்வ சம்பந்தமான பழம் கலைகளை வளர்க்க வேண்டும்.

-ஜகத்குரு ஸ்ரீகாஞ்சி காமகோடி
சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராசார்ய சுவாமிகள்



உ

ஸ்ரீ அம்பாள் துணை

# ஸ்ரீ காமாட்சி அம்மன் கோவில்

## திருப்பணி கைங்கரியப் பத்திரிகை

பேரன்பர்களே, வணக்கம்!

சைவ சமயாச்சாரியர்களாகிய நால்வர்களால் திருப்பதிகப் பாடல் பெற்ற ஸ்தலங்களில் மிகச் சிறப்பு வாய்ந்ததும் நீர் வளமும் நில வளமும் நிறைந்து நிற்கும் கொங்குவள நாட்டின் நாந்தோன்றி ஸ்ரீ வெங்கட்ரமண ஸ்வாமி மலைக்கு வடபாலும், ஸ்ரீ பாலசுப்பிரமணிய ஸ்வாமி எழுந்தருளி நின்ற நவநீதகிரி என்னும் வெண்ணெய் மலைக்குத் தென்பாலும், அமராவதி நதியால் சூழப்பட்டு மூர்த்தி, தலம், தீர்த்தம் ஒருங்கே அமையப்பெற்றது மான கற்பபுரி என்னும் கருவூரின்கண் ஸ்ரீ அலங்கார வள்ளி ஸ்ரீ சௌந்தர நாயகி சமேத ஸ்ரீ கல்யாண பசுபதி ஈஸ்வர ஸ்வாமி எழுந்தருளியிருக்கும் திருக்கோவிலுக்கு மேற்கிலும், மேற்கு பிரதட்சண ரோட்டிற்குக் கிழக்கிலும் எழுந்தருளியிருக்கும் **ஸ்ரீ அன்ன காமாட்சி அம்மனின்** ஆலயத்தை ஜீர்ணோத்தாரணம் செய்து கும்பாபிஷேகம் செய்யும்படி, கலியுக பிரத்தியட்ச தெய்வமாக விளங்கிக்கொண்டு அடியார்களை அருள்பாலித்து வேண்டுவோர் வேண்டுவதை வாரி வழங்கும் அகிலாண்ட கோடி பிரும்மாண்ட நாயகியான ஸ்ரீ அன்னை பராசக்தி திருவுள்ளம் தோன்றியதால், இந்த ஆலயத்தைப் புதுப்பித்து நல்ல முறையில் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் செய்ய வேண்டி இந்த வேண்டுகோளை விடுத்தனம். இந்தக் கைங்கரியத்திற்கு ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஜகத்குரு ஸ்ரீ சங்கராச்சாரிய ஸ்வாமிகள் அவர்கள் அனுக்ரஹம் செய்து ஆசி வழங்கி ஸ்ரீமுகம் வழங்கியிருக்கிறார்கள். பேரன்பர்கள் ஷை கைங்கர்யத்திற்கு தங்கள் தங்களால் இயன்ற பொருளுதவியைக் கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பி இந்த திருப்பணியில் கலந்து கொண்டும், ஸ்ரீ ஜெகன் மாதாவான **ஸ்ரீ அன்ன காமாட்சி அம்மனின்** திருவருளைப் பெற்று சகல சௌபாக்கியங்களும் அடைந்து நீடூழி வாழப் பிரார்த்திக்கின்றோம்.

பொருள் உதவியை M.O. அல்லது டிராப்ட் மூலம் அனுப்ப வேண்டிய முகவரி: திரு. **A. மாரியப்ப முதலியார்**, திருப்பணிக் கமிட்டி தலைவர், ஸ்ரீ காமாட்சி அம்மன் கோவில், 11, பைபாஸ் ரோடு, கரூர், PIN-639 001, திருச்சி ஜில்லா.

இங்ஙனம்

**A. மாரியப்ப முதலியார்**

திருப்பணிக் கமிட்டி தலைவர், கரூர், (முன்னாள் கரூர் மன்றத் தலைவர்)

யல கேட்க அவன் மீண்டும் வெட்கப்பட்டுச் சிரித்தான்.

''போங்க... நீங்க என்னைக் கலாட்டா பண்றீங்க... நானும் சமையலில் உங்களுக்கு உதவி பண்றேன். போய்க் காய்கறி வாங்கி வந்து அரிந்து தருகிறேன். என்ன கறிகாய் வேணும், சொல்லுங்க?''

''ஏன் மாமா சாப்பிட நாம் மூன்றே பேர் தானே, இன்னும் யாராவது உண்டா....?''— இருத்திரா கேட்டாள்.

''நம்ம மூணு பேர் தாம்மா....''

''அப்படின்னு அரைக்கிலோ வெண்டைக் காய், நூறு தக்காளி, சாம்பாருக்கு நாலு முருங்கைக்காய் வாங்கிட்டு வந்திடுங்க....''

''சரிங்க...'' என்று வேகமாகப் புறப் பட்டுப் போன சாயிராம் ஒரு நிமிடத்திற் கெல்லாம் திரும்பி, சமையலறை வாசலில் வந்து நின்ற போது இருத்திரா மட்டுமே இருந்தாள். அனந்தசாமி குளிக்கப்போயிருந் தார்.

அறை வாசலில் வந்து நின்ற அவனைத் திரும்பிப் பார்த்த இருத்திரா, ''என்ன?'' என்றாள்.

'' ஒண்ணுமில்லீங்க...'' என்று அவன் தயங்கி,''பை ஒன்று கொடுங்க... ''என்று கேட்டான்.

''பை எதுவும் எடுத்துக்காமலா கிளம்பி னீங்க....?'' என்று புன்சிரிப்பாய்ச் சிரித்த இருத்திரா துணிப் பை ஒன்றை எடுத்துக் கொடுத்தாள். அவன் அதற்குப் பின்னரும் தயங்கி நிற்க அவள் மீண்டும்,'' என்ன?'' என்று அவன் முகத்தைப் பார்த்தாள்.

''இல்லீங்க... அறை வாடகை, சாப் பாட்டுச் செலவு எல்லாவற்றையும் சார் குறிச்சு வைச்சிருக்காரு. சினிமா சான்ஸ் கிடைச்சதும் எல்லாத்தையும் மொத்தமா திருப்பித் தர்றதா சொல்லியிருக்கேன்...''

அவன் தயங்கித் தயங்கிச் சொல்ல அவள் புன்னகை மாறாமல் அவனையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

''ஆமாம், இதையெல்லாம் இப்போ எதுக் காகச் சொல்றீங்க...?''

''இல்லீங்க... இப்போ கறிகாய் வாங்கக் காசு கொடுத்தீங்கன்னு அதையும் அந்தக் கணக்கில் சேர்த்துடுங்கன்னு சொல்ல வந் தேன்....''

சட்டென்று கீழ் உதட்டைக் கடித்துக் கொண்டாள் இருத்திரா. காய்கறி வாங்கச் சொல்லிவிட்டுப் பணம் கொடுத்தனுப்பாத தவற்றை உணர்ந்து கொண்டாள். அந்தப் பணத்தை எவ்வளவு நாசூக்காகக் கேட்கிறான் என்று நினைத்தபோது அந்தக் குழந்தைத் தனத்தின் மீது ஏற்பட்ட இனம் தெரியாத அன்போடும், பாசத்துடனும், ஒருமரியாதை யும் சேர்ந்து கொள்ள அவள் தன் அறைக்குப் போய் சூட்கேஸைத் திறந்து அர்ஜுன் கொடுத்திருந்த பணத்திலிருந்து நூறு ரூபாய் நோட்டு ஒன்றை உருவி எடுத்து வந்து கொடுத்தாள்.

''இனிமேலிருந்து மாமாமாதிரி நானும் கணக்கு எழுதி வச்சுக்கறேன். நீங்க சினிமா பாட்டெழுத ஆரம்பிச்சதும் திருப்பிக்கொடுத் துடலாம். என்ன...?'' என்று தன் மனத்தின் அன்பைக் காட்டிச் சிரிக்க அவன் ஒருவினாடிக் கும் குறைவான நேரம் தலை குனிந்து நின்று பின் நிமிர்ந்தான்.

''அது சரிங்க. ஆனால் கறிகாய் வாங்க எதுக்குங்க நூறு ரூபாய்...? நீங்க சொன்ன காயெல்லாம் மிஞ்சிப் போனால் ஐந்துரூபாய் கூட ஆகாதுங்க....''

''இருக்கட்டும், வச்சுக்குங்க. தினமும் காய் வாங்கித்தானே ஆகணும்...?''

''தினமும் இதே மாதிரி சேட்டு வாங்கிட் டுப் போறேங்க. என் கையில் பணம் இருந் தால் செலவாயிடுங்க...'' —அவன் தயங்கிச் சங்கடப்பட்டுச் சொல்ல, இருத்திராமென்மை யாய்ப் புன்னகை மாறாமல் கேட்டாள்.

''பணம் எதற்கு மிஸ்டர் சாயிராம்... செலவழிப்பதற்குத்தானே...?''

''அது சரிங்க.... ஆனால் அடுத்தவங்க பணத்தை எடுத்து நாம் செலவழிக்கக்கூடாது இல்லையா...?''

சடாரென்று இருத்திராவின் முகம் மாறிற்று. உதட்டுச் சிரிப்பு மறைந்தது. குரலில் ஒரு வருத்தம் எட்டிப் பார்த்தது.

''அப்போ என்னை அடுத்தவளாகத்தான் நினைக்கிறீங்க... இல்லையா? உங்களைச் சார்ந்தவளாக நினைக்கலே இல்லையா?''

அந்தக் குரலில் தொனித்த ஏதோ ஒன்று நெஞ்சைத் தொடச் சடாரென்று தலையை உயர்த்தினான் அவன்.

''ஐயையோ.... அப்படிச்சொல்லலீங்க.''

''பின்னே.... எப்படிச்சொன்னீங்க...?''

''வந்து... வந்து சரிங்க. எதற்கு வீண் வம்பு. பணத்தை நானே வச்சுக்கறேங்க...'' என்று அவன் நூறு ரூபாயை மடித்து சட் டைப் பையில் செருகிக் கொண்டு போக—

இருத்திரா அவன் போவதைக் கனிவாகப் பார்த்துப் புன்சிரிப்பாகச் சிரித்துக் கொண் டாள்..... (தொடரும்)

---

பேப்பர் படிப்பவன் : ''நடிகர்க ளெல்லாம் சேர்ந்து முடிவு எடுத்திருக் காங்களாம் !''

''இவன் : என்ன முடிவு ?''

''எல்லார்கிட்டேயும் இருக்கிற செல் லாத செக்கையெல்லாம் போகி அன்னிக்குத் தீயில் போட்டுடறதா!''

—வாணிபாலன்



# "உங்கள் சமையலறையில் காஸ் கசியும் வாடை வந்தால் என்ன செய்ய வேண்டுமென்று உங்களுக்கு தெரியுமா?"



கலவரமடைய வேண்டாம். முதலில் பிரஷ்ஷர் ரெகுலேட்டர் ஸ்விட்ச்/சிலிண்டர் வால்வை மூடவும். பின்பு உங்கள் ஸ்டவ்வில் உள்ள காஸ் டேப்புகளை மூடவும். எல்லாவித நெருப்புக்களையும் அணைக்கவும்: அகல் விளக்கு மற்றும் அகர்பத்தியைக் கூட. மின்சார ஸ்விட்ச்சுகள் எதையும் தொடவேண்டாம். அனைத்து ஜன்னல்கள் மற்றும் கதவுகளை திறக்கவும். இப்போது உங்கள் விநியோகஸ்தரை உடனடியாக அழைக்கவும்.

பிரச்சனை ஆபத்தானதாக இருந்தால், தீயணைப்பு பிரிவினரை அழைக்கவும்.

காஸ் கசிவைத் தடுப்பதற்கு கீழ்க்காணும் எளிய விதிகளை பின்பற்றவும்.

1) ஒவ்வொரு இரவும், மற்றும் வீட்டிலிருந்து வேலைக்கோ அல்லது விடுமுறைக்கோ புறப்படும் முன்பும் சிலிண்டரை மூடி வைக்கவும்.

2. ரப்பர் ட்யூபுகளில் விரிசல், ஓட்டைகள், தேய்மானம் ஏற்பட்டிருக்கிறதா என்று தவறாமல் சோதிக்கவும்; குறிப்பாக அதன் நுனிகளில்.

3. சிலிண்டர் இருக்கும் பக்கம் குழந்தைகளைப் போகவிடாதீர்கள்

4. நீங்களாகவே ஒருபோதும் சிலிண்டரை சரிசெய்தல் பழுது பார்த்தல், அல்லது சோதனை செய்தல் கூடாது.

5. காஸ் ஸ்டவ் எரிந்து கொண்டிருக்கும்போது ஒருபோதும் கவனிக்காமல் இருக்க வேண்டாம்.

பாதுகாப்பிற்காக இந்த எளிய விதிகளை கவனமாக பின்பற்றவும்




ARTIG 4373 TAM

**குக்கிங் காஸை உங்கள் சிறந்த நண்பனாக்கிக் கொள்ளவும்.**

பொதுமக்கள் நலனை முன்னிட்டு பாரத் பெட்ரோலியம் கார்ப்பரேஷன் லிமிடெட்டினால் வெளியிடப்பட்டது.

## நாடகப்பிரியா 1500

# “நாங்கள் போடுவது நாடகமே இல்லை!”

....என்று பலர் சொல்கிறார்கள். எங்களுக்கே அந்தச் சந்தேகம் இருக்கிறது!'' என்று வரவேற்புரையிலேயே சர்ச்சைக்கு வழி வகுத்துத் தந்து விட்டார் எஸ். வி. சேகர். அப்புறம் என்ன, மற்றவர்கள் இதையே பிடித்துக் கொண்டு கிழி கிழி என்று நாராக்கினார்கள்.

பத்து ஆண்டுகளுக்கு முன்பாக முதல் நாடகம் அரங்கேற்றிய நாடகப்பிரியா இன்று 1500 நாடகங்களுக்கு மேல் நடத்தியிருக்கிறது. அதைக் கொண்டாடும் போது தங்களைப் பாராட்டச் சிலரை அழைத்ததுடன் தங்களால் பாராட்டப்படவும்சிலரை அழைத்திருந்ததைப் பாராட்டத்தான் வேண்டும். நாடகப் பிரியாவால் அன்று வாழ்த்தப் பட்டவர்கள் நாடக மேடைக்கு அரும் தொண்டாற்றி வந்துள்ள, வருகிற இவர். டைரக்டர் திரு. கே. பாலசந்தர், திரு. கே. கே. ராமன், திரு. கே. எஸ். நாகராஜன், திரு. ஹெரான் ராமசாமி, பார்த்தசாரதி சுவாமி சபா காரியதரிசி திரு. சேஷாத்திரி ஆகியோர்.

டைரக்டர் பாலசந்தர் ஆவேசமாகவே ஆரம்பித்துக் கோபமாகவே தொடர்ந்தார்: ''இவர்கள் ஆயிரமாவது நாடகம் அரங்கேற்றும் போதும் என்னை அழைத்தார்கள். அப்போதே சொன்னேன், இப்போதும் சொல்கிறேன், உங்களிடம் ஆற்றல் இருக்கிறது. அதை வீணடித்துக் கொண்டிருக்கிறீர்கள்! துணுக்குத் தோரணம் கட்டிச் சிரிக்க வைப்பதுதான் நாடகமா? நாடகத்துக்கு ஒரு இலக்கணம் உண்டு. ஒரு பாரம்பரியம் உண்டு. நான் நகைச்சுவையின் எதிரி அல்ல. ஆனால் நாடகம் பார்த்துவிட்டு வீடு திரும்பினால் சில வாரங்களுக்காவது அதன் பாதிப்பு நம் மனத்தில் இருக்க வேண்டும். திரும்பத்திரும்ப எண்ணிப் பார்க்குமாறு அதில் விஷயம் இருக்கவேண்டும். சேகரின் நாடகங்களைப் பார்த்து விட்டுச் சிரிக்கிறோம்; நானும் ரசித்தேன், சிரித்தேன். ஆனால் இந்த அரங்கத்தை விட்டு வெளியே போனதும் மறந்து போவோம்.... என்னைப் பாராட்டி விட்டால் நான் வாயை மூடிக் கொண்டு இருந்து விடுவேன் என்று எண்ணினீர்கள். இரண்டாயிரமாவது நாடகத்துக்கு மறுபடி என்னை அழைத்தால் வருவேன்; திரும்பவும் இதையே சொல்வேன்!''

பிலுபிலுவென்று பிய்த்து உதறிய பாலசந்தர், ''மறுபடி இதுபோன்ற நாடகங்களையே அரங்கேற்றினால் உண்ணாவிரதமிருப்பேன்!'' என்ற எச்சரிக்கையுடன் முடித்தார்.

அவரை அடுத்துப் பேசிய கல்கி ஆசிரியர், பாலசந்தர் கூறியதிலிருந்து தாம் பகுதியளவு மாறுபடுவதாகக் கூறி ரணத்துக்குக் களிம்பு பூசும் முயற்சியில் இறங்கினார். ''வெறும் ஜோக் ஃபெஸ்டிவலாக இருந்தால் பாலசந்தர் கூறியதை முழுவதும் நான் ஆமோதிப்பேன். ஆனால் எஸ். வி. சேகரின் சில நாடகங்கள் அங்கத பாணியில் அமைந்



தவை. அரசியலில் நாம் காண்கிற அவல நிலைகளையும் திரை உலகில் நாம் பார்க்கிற அபத்தங்களையும் சேகர் ஸடையராகச் சித்திரிக்கும் போது நாம் சிரிப்பதோடு நின்று விடுவதில்லை. வீட்டுக்குப் போன பிறகு சிந்தித்தும் பார்க்கிறோம். ஸடயர் எழுதுவதென்பது ரொம்பக் கஷ்டம். குத்தலைத் தாங்கிக் கொள்வது அதைவிட சிரமம். இருப்பினும் தாக்கப்படுகிறவரும் சிரித்து மகிழுமாறு அமைதல் வேண்டும். இந்தச் சிரமமான பணியில் பாபு, ஜி. கே., போன்ற நாடகாசிரியர்கள் வெற்றி அடைந்ததால் தான் அந்த நாடகங்களுள் ஒன்றைக் (''காதுல பூ'') கல்கியில் பிரசுரிக்க வேண்டும் என்ற எண்ணம் தோன்றியது... செய்தேன். ஆனால் திரு. பாலசந்தர் கூற்றிலும் உண்மை இல்லாது போகவில்லை. கனமான நாடகங்கள் அரிதாகி வருகின்றன. பாலசந்தரின் எதிர்நீச்சலைப் பார்த்துக் காட்சிக்குக் காட்சி நாம் சிரிக்கவில்லையா? அமரர் கல்கி அவர்களைப் பற்றி இங்கே குறிப்பிட்டார்கள். அவருடைய கள்வனின் காதலியை டி. கே. எஸ். சகோதரர்கள் அரங்கேற்றியபோது வசனத்தை வரிக்கு வரி ரசித்துச்





சிரித்தோமல்லவா? ஆனால் வீடு திரும்பும் போது கனமான உயர்தரமான ஒரு நாடகத்தைப் பார்த்த நிறைவும் இருந்தது... அப்படிப்பட்ட நாடகங்களையும் நாடகப் பிரியா அரங்கேற்றும் என்பதற்கு ஓர் அச்சாரமாகத்தான் இங்கே பாலசந்தர் அவர்களையும் அழைத்துப் பாராட்டியிருக்கிறீர்கள் என்று நம்புகிறேன்'' என்றார்.

இந்தச் சமரசத்தை அடுத்துப் பேச வந்த புலமைப்பித்தன், சேகரின் அங்கத அரசியல் நாடகத்தைத் தாம் வெகுவாக ரசித்ததையும் எம். எல். ஏக்களையெல்லாம் அழைத்து வந்து நாடகத்தைப் பார்க்கச் செய்ய வேண்டும் என்று கூடத் தமக்குத் தோன்றியதையும் குறிப்பிட்டது சேகருக்கு ஷொட்டுதானே!

இதோடு விட்டாரில்லை புலமைப்பித்தன்! பாலசந்தரைப் பிலுபிலுவென்று பிடித்துக் கொண்டார். ''பாரதியாரின் வாழ்க்கை வரலாற்றைப் படம் எடுக்கப் போகிறேன் என்று அறிவித்துவிட்டுச் சும்மா இருந்தால் என்ன அர்த்தம்?'' என்று கேட்டார். ''எடுத்தே ஆக வேண்டும்'' என்று வற்புறுத்தினார். ''எஸ். வி. சேகர் உங்கள் வேண்டுகோளை இந்தக் காதால் வாங்கி அந்தக் காதால் விட்டு விடுவதாகக் குறைப்பட்டுக் கொண்டீர்களே. நீங்கள் மட்டும் என்னவாம்? பல்லாயிரக்கணக்கான ரசிகர்களின் கோரிக்கையை இந்தக் காதால் வாங்கி அந்தக் காதால் தானே விட்டுக் கொண்டிருக்கிறீர்கள்! எனக்கும் கூட உண்ணாவிரதமிருக்கத் தெரியுமாக்கும்!''

சிரிக்க வைப்பதன் மூலம் கிடைக்கும் வருவாயில் சில சீரியஸான காரியங்களையும் செய்கிறது நாடகப்பிரியா. சிறுநீரகங்கள் பழுதாகிப் போன திரு. ரத்தினத்துக்கு மாற்றுச் சிறுநீரக ஆபரேஷன் நடக்கப் பொருளுதவி செய்தது. திரு. ரத்தினம் அன்று மேடைக்கு வந்து மலர் மாலையை ஏற்ற போது எல்லோருக்குமே எம். ஜி. ஆரின் நினைவு வந்து கடவுளுக்கு மானசீகமாக நன்றி செலுத்தினர்.

எஸ். வி. சேகரின் தந்தையும் நாடகப் பிரியா தலைவருமான திரு. எஸ். வி. வேங்கடராமன் ''எனது பல கணவன்மார்களுள் முக்கியமானவரான திரு. கே. எஸ். நாகராஜனுக்கு மலர் மாலை அணிவிக்கிறேன்!'' என்ற போது சற்றுத் திகைத்தோம். பிறகுதான் புரிந்தது திரு. வேங்கடராமன் அந்த நாளைய நாடகங்களில் பெண் வேஷம் போட்டவர் என்பதும் இன்றைய நாடக டைரக்டர் நாகராஜன் அந்நாளில் நிறைய நாடகங்களில் நடித்தும் இருக்கிறார் என்பதும். நல்லவேளை, மாலை அணிவித்ததுடன் சரி, மாலை மாற்றிக் கொள்ளாமல் விட்டார்கள்!

நாடகப்பிரியாவின் ஜீவனான 'மியாவ்' சந்தா மறக்கப்படவில்லை; வாழ்த்தப்பெற்றார். லொள்ஜியே கிண்டலை ஏற்று ரசிக்குமாறு செய்தவராயிற்றே!

நாடகத்தையொட்டி எஸ். வி. சேகர் கொடுத்த ஒரு கற்பனை மினி பேட்டியில் கூட அவர் சுயவிமர்சனம் அங்கத பாணியிலேயே அமைகிறது:

கேள்வி: ''புதிய நாடக ஆசிரியர்களை அறிமுகப்படுத்துவது எப்படி?''

எஸ். வி. சேகர்: ''ஒருவருடன் பேசிப் பார்க்கும் போது அவருடைய ஐடியாவும் காமெடி ஃப்ளேவரும் தெரிந்துவிடும். அதன் பிறகு அவருடைய எண்ணங்கள் நமது எண்ணங்களுடன் கிட்டத்தட்ட ஒரே லைனில் போகிறதா என்று பார்த்துக்கொள்வேன். பிறகு நாடகத்தை எழுதித் தரச் சொல்லி (அதில் ஆசிரியருக்கு முழுச் சுதந்திரம் உண்டு.) எழுதிக் கொடுத்த பிறகு எங்களது முழுத் திருப்திக்கு வேண்டாதவற்றை அடித்துவிட்டு (இதில் எனக்கு முழு சுதந்திரம் உண்டு.) பிறகுதான் அரங்கேற்றுவோம்!''

—குட்டிகிருஷ்ணன்

அரசியல்வாதி 1 : ''தேர்தலுக்காக நாங்க போட்ட வாக்குறுதிப் புத்தகம் இருக்குறன் மாதிரி!''

அரசியல்வாதி 2 : ''ரொம்ப நல்ல கருத்துக்களெல்லாம் அடங்கியிருந்துச்சா அதுலே?''

அரசியல்வாதி 1 : ''இல்லே 1330 வாக்குறுதிகள் கொடுத்திருந்தோம்!''

—வாணிபாலன்





# வட்டமேஜை

● தமிழ்ப் பத்திரிகை உலகில் தாங்கள் —. வித்தியாசமாய் நாட்டிற்குத் தேவையான கல்வி, அறிவியல், பண்பாடு, கலாசாரம், அரசியல், உலக நடப்புகள் போன்ற பல துறைகளில் கடந்த ஆண்டுகளில் சிறந்த பணியாற்றியுள்ளீர்கள். பாராட்டுதல்கள். தங்கள் இதழ் மூலம் மேலும் சமுதாயப் பார்வைகள் தொடர வேண்டும். அதற்கு நல்லோர் ஆதரவு தங்களுக்குக் கிடைக்க இந்தப் புத்தாண்டு வழி காட்டுவதாக...

சென்னை. 106 — செல்வி சரசு.

● மணி கிருஷ்ணசாமி பற்றி நான் முதல் முதல் எழுதிய விமர்சனம் 1954ல். மணியை மணிக்கட்டில் அடித்து விமர்சித்திருக்கிறேன் நான். பேட்டியில் கடைசி கேள்விக்கு மணி சொல்லியிருக்கும் பதிலைக் காணும்போது ஏதோ நான் அப்பவே அவரை எம். எஸ்., டி. கே. பி. எம். எல். வி. முதலோரின் வழித்தோன்றல் என்று கூறியதாகத் தொனிக்கிறது. அவருடைய படிப்படியான வளர்ச்சியில் பல சங்கீத மேதைகளின் சிறப்பியல்புகள் சிலவற்றைத் தமதாக்கிக் கொண்டிருக்கிறார் என்று கருத்துப்பட நான் சொன்னது சமீபத்தில்தான்.

சென்னை. 4 — சுப்புடு

● லஞ்ச ஊழல் ஒழிய வேண்டுமானால், பொதுமக்கள் பொறுமையைக் கடைப்பிடித்து தங்கள் காரியங்களைச் சீக்கிரத்தில் சாதித்துக் கொள்ள 'சம்திங்' கொடுப்பதைத் தவிர்க்க வேண்டும் !''

திருச்சி-20 — ஆர். அப்துல் சலாம்

● சமீபத்தில் எனக்கு ஏற்பட்ட ஓர் அனுபவம். நாகர் கோவில் பேருந்து நிலையத்திலிருந்து குருசடியிலுள்ள என் கல்லூரிக்குப் பயணம் செய்து கொண்டிருந்தேன். கூட்ட நெரிசலில் என் 'சீசன் டிக்கெட்' எங்கோ நழுவி விட்டது. கண்டக்டர் பரிச்சயப் பட்டவர்தான். இருப்பினும் உரிய கட்டணத்தைச் செலுத்தி டிக்கெட்டை எடுத்துக் கொண்டு, சீசன் டிக்கெட் கை நழுவிய விபரத்தைச் சொல்லி, கிடைத்தால் எடுத்து வைக்குமாறு வேண்டினேன். மறுநாள் என்னைச் சந்தித்த கண்டக்டர் உற்சாகத்துடன் சீசன் டிக்கெட்டை என்னிடம் நீட்டியதோடு, எடுத்துக் கொடுத்த நபருக்கு இரண்டு ரூபாய் சன்மானம் வழங்கியதாகக் கூறித் தலையைச் சொறிந்தார். நிலைமையைப் புரிந்து கொண்ட நான் மரியாதையாக என் பர்ஸிலிருந்து ''இரண்டு ரூபாய் நோட்டை'' அவரிடம் நீட்டினேன்.

இது புகைப்படம் ஒட்டிய சீசன் டிக்கெட். வேறு யாருக்கும் பிரயோஜனப்படாது. எடுத்தவருக்கும் இதனால் எள்ளளவும் பிரயோஜனமில்லை. தன் கைவசம் கிடைத்த ஓர் அந்நியப் பொருளை உரியவரிடம் சேர்ப்பிப்பதற்கு எடுத்துக் கொண்ட முயற்சிக்குக் கூலி ரூ. 2— இது போன்ற காரியங்களைச் சமூகம் அங்கீகரிப்பதால்தான் லஞ்சம் பூதாகாரமாக உருவெடுக்கிறது.

நாகர்கோவில் — ஜி. ஷைலா ராணி

● குறும்பும் செய்துவிட்டு அதைத் திறமையுடன் சமாளித்த குழந்தைகள் பலரின் செயல் (வாசகர் பங்கு) பரவசப்படுத்தியது.

சென்னை—5 — எஸ். சம்பத்குமார்

## உபத்திரவமான ஊர்வலங்கள்

● இன்று (டிசம்பர் 21) ஈரோட்டில் மாபெரும் தேர்தல் ஊர்வலம் அமைச்சர் முத்துசாமி அவர்களின் சார்பாக நடந்தது. அதனால் முக்கியமான தெருக்களில் போக்குவரத்தே ஸ்தம்பித்துவிட்டது. பஸ் நிலையத்திலிருந்து புறப்பட்ட பஸ்கள் பாதி வழியிலேயே நின்றுவிட்டன.

எனக்குத் தெரிந்தவர் ''சென்னையில் என் அம்மா சீரியஸாக ஆஸ்பத்திரியில் இருக்கிறார். நான் போய் சேருவதற்குள் உயிருடன் இருப்பாளோ, மாட்டாளோ'' என்று கூறிக் கொண்டு பஸ்ஸில் உட்கார்ந்தபடி தவித்தார். தேர்தல் ஊர்வலம், வெற்றி ஊர்வலம், இரங்கல் ஊர்வலம் போன்ற பல ஊர்வலங்களால் பாதிக்கப்படுபவர்கள் பொதுமக்களே, அமைச்சர்கள் அல்ல. இதை அமைச்சர்கள் புரிந்து கொள்வார்களாக!

ஈரோடு — நளினி ராமநாதன்

(கடைசிக்கடிதம் பரிசு பெறுகிறது)



✕ ஸ்டுட்கார்ட்டில் மாணவர் விருப்பச் சுவர்

12

எங்களுடைய பிரயாணம் ஸ்டுட்கார்ட்டில் நிறைவாகத் திட்டமிடப்பட்டிருந்தது. ஸ்டுட்கார்ட்டிற்காக எங்கள் பயண ஏற்பாடுகளைக் கவனித்த 'இன்டர் நேஷனல்' ஒதுக்கியிருந்த மூன்று தினங்களில் ஒரு நாளைத்தான் ஹைடில்பர்க்குக்காக இரவல் வாங்கிக் கொண்டு போய் வந்திருந்தேன். அன்றைய தினம் எங்கள் குழுவைச் சேர்ந்த மற்ற எழுவரும் ஸ்டுட்கார்ட் அருகே விவசாயம்—கோழி வளர்ப்பு சம்பந்தப்பட்ட ஒரு பண்ணைக்குப் போய் வந்திருந்தார்கள். ஸ்டுட்கார்ட்டும் அதன் சுற்றுப்புறங்களும் திராட்சைத் தோட்டம், திராட்சை மதுத் தயாரித்தல், விவசாயப் பண்ணைகள், விவசாயக் கல்வி ஆகியவற்றுக்குப் புகழ் பெற்றவை. விவசாயத் தொழில் நுணுக்கக் கல்லூரிகளும், கேந்திரங்களும் இங்கு அதிகம். நம்மூர்—'கோபார் கேஸ்' போல் இயற்கை எரிவாயு தயாரிப்பு நிலையங்களையும், கோழிப் பண்ணை, விவசாயப் பண்ணைகளையும் கிராமப்புறங்களையும் சுற்றிப் பார்த்துவிட்டு நண்பர்கள் திரும்பி வரவும், ஹைடில்பர்க்கிலிருந்து திரும்பி பெடஸ்டிரியன் ஷாப்பிங் சென்டரைச் சுற்றிப் பார்த்துவிட்டு நான் ஹோட்டலுக்குத் திரும்பி வரவும் சரியாயிருந்தது.

ஹோட்டல் அருகே இருந்த நவீன தியேட்டர் ஒன்றில் இரவு 'பாலே' நடனம் பார்க்க ஏற்பாடாகி இருந்தது.

''பல்லாயிரம் கோழிக் குஞ்சுகளையும்—கண்ணுக்கெட்டிய தூரம் வரை முட்டைகளையும் பார்க்கக் கொடுத்து வைக்கவில்லை நீங்கள்'' என்று நண்பர்கள் என்னிடம் கூறியபோது, ''மலைகளின் நடுவே எழுதப்பட்ட காவியம் போல் பொலிவுடன் விளங்கும் ஹைடில்பர்க் நகரையும், பல்கலைக் கழகக் கட்டடங்களையும் பார்க்கும் வாய்ப்பை நீங்கள் இழந்துவிட்டீர்களே!'' என்று பதிலுக்கு நான் கேட்டேன்.

பாலே அரங்கில் மேடை ஏற்பாடுகளும், அரங்க நிர்மாணமும் தொழில் நுணுக்க அம்சங்களும், ஒலி, ஒளித் திட்டமும் பிரமாதமாயிருந்தன. ஐரோப்பா முழுவதுமே மிக உயர்தரமான இரசிகர்கள்தான் பாலே, ஆபரா, நாடகம், பில்ஹார்மனிக் இசை நிகழ்ச்சிகளுக்கு வருகிறார்கள். நிகழ்ச்சி நடைபெறும்போது அவர்கள் அரங்கிற்கும், கலைஞர்களுக்கும், அளிக்கும் கௌரவமும் மரியாதையுமே அவர்கள் உயர் பண்பாட்டை உணர்த்துகின்றன. அவையினரின் பாராட்டுக்களையும் கரகோஷங்களையும் ஏற்கத் திரும்பத் திரும்ப வந்து மேடையில் வணங்கும் கலைஞர்களின் பவ்யமும் சிரத்தையும் மறக்க முடியாதவை. மேற்கு ஜெர்மனியில் நாங்கள் பார்த்தவற்றில் அரங்க ஒழுங்கும் கலை நுணுக்கமும் நிறைந்த நிகழ்ச்சி என்று ஸ்டுட்கார்ட்டில் பார்த்த பாலேயைச் சொல்ல வேண்டும். அங்கெல்லாம் 'தியேட்டர்' என்றாலே நாடகம் நடக்கும் இடத்தைத்தான் குறிக்கும். சினிமாவைக் குறிக்காது.

ஸ்டுட்கார்ட்டே மலைச் சரிவுகளும் திராட்சைத் தோட்டங்களும் நிறைந்த ஓர் இயற்கை அரங்கம்தான். அதைக் காணும் அங்கு வசிக்கும் மக்கள் அனைவரும் அந்த அரங்கின் இரசிகர்களாகவே விளங்குகிறார்கள். எங்களது ஸ்டுட்கார்ட் விஜயத்தின்போது இதை நேரடியாக அனுபவித்து மகிழ்ந்தோம்.

# ஸ்டுட்கார்ட்டில் பார்த்தவை

ஏழு நாடுகளில்

# எட்டு வாரங்கள்

## நா. பார்த்தசாரதி

மேற்கு ஜெர்மனியில் பத்திரிகைத் துறை செய்தித் துறையின் கேந்திர நகரம் 'ஹாம்பர்க்' என்றாலும் நாங்கள் ஒரு நவீனப் பத்திரிகை அலுவலகத்தைப் பார்ப்பதற்கு ஸ்டுட்கார்ட்டில்தான் ஏற்பாடாகி இருந்தது. அந்தப் பிரம்மாண்டமான பத்திரிகை அலுவலகத்தைப் பார்த்தபின் பிரமிப்பே ஏற்பட்டது. இன்னும் ஒரு நூற்றாண்டு ஆனாலும் நம் நாட்டில் இப்படித் துரிதமும் சுறுசுறுப்பும் வந்துவிட முடியுமா என்ற மலைப்புத் தோன்றியது.

⌘ திராட்சை வளர்க்கும் கலை



மறு நாள் காலை நகரிலிருந்து சிறிது தொலைவிலிருந்த 'ஸ்டுட்கார்ட் மோரிங்கன்' பகுதிக்குப் புறப்பட்டோம். அந்தப் பகுதி 'புதிய செய்திப் பத்திரிகை வட்டாரம்' என்று குறிப்பிடப்பட்டது. 'ஸ்டுட்சார்ட்டர் நாச்ரிச்டன்' என்ற தினசரி உட்படப் பல்வேறு பத்திரிகைகளும், இதழ்களும், அங்கு அச்சாகின்றன என்று சொன்னார்கள். ஒரு மலைச் சரிவில், காடு ஆரம்பமான பகுதியில் அந்த நவீனமான பல மாடிக் சட்டடம் புதுக் கருக்கு அழியாமல் பொலிவுடன் நின்றது. கம்பீரமான அந்தக் கட்டடத்தைச் சுற்றிப் புல்வெளிகள், அழகுப் பூங்கா, மரக் கூட்டம், பார்க்கிங் ஏரியா, எல்லாவற்றுக்கும் தாராளமாக இடம் விடப்பட்டிருந்தது. ஒரு பத்திரிகை அலுவலகம், — அச்சகம் — உள்ளே இருக்கும் என்று நம்ப முடியாத — அசத்தான அடையாளங்கள் — எதுவும் தெரியாத — பெரியதோர் ஐந்து நட்சத்திர ஓட்டல்போல் அமைதியாயிருந்தது.

நாங்கள் மேற்படி நவீன பத்திரிகாலயத்திற்குப் புறப்படுவதற்காசத் தயாரானபோது எங்கள் ஜெர்மன் உதவியாளர் ஒரு சிறு தகவலைத் தெரிவித்தார். மிகவும் தயக்சத்தோடுதான் அவர் அதை எங்களிடம்கூறினார்.

'' நாம் புறப்பட ஒரு பத்துப் பதினைந்து நிமிஷம் தாமதமாகலாம்! அந்தப் பத்திரிகையின் அச்சகத்தைச் சேர்ந்த ஒரு சிறு பிரிவினர் காரியாலய முகப்பில் தங்கள் அதிருப்தியைத் தெரிவித்து 'டெமான்ஸ்ட்ரேஷன்' செய்யப் போகிறார்கள். அவர்களுக்கு நாம் செல்வது இடையூறாக இருக்குமா ? நம்மைச் செல்ல அனுமதிப்பார்களா?

⌘ ஸ்டுட்கார்ட் பிளானடோரியம்



என்று கேட்டு ஃபோன் செய்கிறேன். அந்தத் தொழிலாளர்கள் சம்மதித்தால் போவோம். இல்லாவிட்டால் இதை இரத்து செய்துவிடலாம்'' என்றார்.

அதன் பின்பு ஃபோனில் விசாரித்து அந்தத் தொழிலாளர்கள் சம்மதித்துவிட்டதாகத் தெரிவித்தார். இவர் விசாரித்த பெருந்தன்மையும், அவர்கள் உடனே சம்மதித்த பெருந்தன்மையும் பெருமிதப்பட வைத்தன. இதன் பிறகே நாங்கள் அந்த நவீனப் பத்திரிகை அலுவலக வளாகத்தைப் பார்க்கப் புறப்பட்டோம். முகப்பில் கோஷங்களுடனும் தங்கள் கோரிக்கை வாசகங்கள் அடங்கிய அட்டைகளுடனும் நின்ற அந்தச் சிறு பிரிவுத் தொழிலாளர் எங்களை முகமலர வரவேற்று உள்ளே செல்ல அனுமதித்தனர். கம்ப்யூட்டர்களும் நூறுசதவிகித ஆட்டோமேஷனும் பல ஆயிரக்கணக்கானவர்கள் வேலை பார்க்க வேண்டிய அந்தப் பெரிய காரியாலயத்தில் மிகச் சிலரே தென்படும்படி ஆக்கியிருந்தன.

ஆசிரியர் அறைக்குள் எங்களுக்கு ஒரு சிலவற்றை அற்புதமாக விளக்கிக் காண்பித்தார்கள். ஒரே சமயத்தில் கம்ப்யூட்டர் நினைவுக்கிட்டங்கி (Computer memory stock) மூலம் சேமித்து வைத்திருந்த பல கட்டுரைகள், விவரங்களைக் காண்பித்தார்கள். நகைச்சுவை உணர்வுமிக்க உதவியாசிரியர், '' நாளைக்கே பெர்லின் சிறையில் வாடும் தொண்ணூற்று மூன்று வயது ருடால்ஃப் ஹெஸ் இறந்து விட்டாலோ, போப்பாண்டவர் திடீரென்று திருமணம் செய்து கொண்டாலோ, எலிஸபெத் டெய்லர் சந்நியாசம் வாங்கிக் கொண்டாலோ எங்களிடம் பிரசுரிப்பதற்கு விஷயங்கள் எடிட் செய்யப்பட்டுக் கம்ப்யூட்டர் மெமரியில் தயாராயிருக்கும்'' என்றார். "ருடால்ஃப்ஹெஸ் இறந்து விட்டால்'' என்று ஒரு பட்டனை அமுக்கினார். உடனே ஸ்கிரீனில் ருடால்ஃப் ஹெஸ் பற்றிய சகலமும் அடங்கிய கட்டுரை வந்தது. ஒரே சமயத்தில் ஹாம்பர்க்கிலும், ஸ்டுட்கார்ட்டிலும் அவர்களது பிரசுரம் உள்ள வேறு பல இடங்களிலும் 'மெமரி'யுள்ள இந்த வசதியைப் பயன்படுத்திக் கொள்ள முடியும் என்றார்கள். வியப்பாயிருந்தது.

நொடியில் அச்சிட்டு அடுக்கிப் பின்செய்து பார்சல் கட்டி ஏஜெண்டுகளுக்குப் பெயர் ஸ்லிப் ஒட்டிப் போடுவது வரை எல்லாமே ஆட்டோமேஷன்படி நடந்தன. நிறைய மக்கள் தொகையினருக்கு வேலைகள் தர வேண்டிய எங்கள் நாடுகளுக்கு இது ஒத்து வராது என்று ஒரே சமயத்தில் சீனப் பிரதிநிதிகளும் நாங்களும் கூறினோம். '' இங்கும் அத்தகைய எதிர்ப்பு கொஞ்சம் உண்டுதான்! அதைத் தான் வரும் வழியில் காரியாலய முகப்பில் பார்த்திருப்பீர்களே '' என்று உடனே அவரும் சிரித்தபடி சொன்னார்.

அந்த நவீனப் பத்திரிகை அலுவலகத்தையும் அச்சகத்தையும் பார்த்து முடித்தபின் கட்டடக் கலை அமைப்பில் மிகவும் நூதனமாக உருவாக்கப்பட்டுள்ள ஒரு பிளானட்டோரியத்தையும் ஒரு சர்ச்சையும் பார்த்தோம். அந்த சர்ச் முகப்பில் சர்ச் மாதிரியே இல்லை. ஒரு பழைய நெற்களஞ்சியம் போல் காட்சியளித்தது.

அங்கே ஸ்டுட்கார்ட்டிலுள்ள விவசாயக் கலாசாலையிலும் அதைச் சார்ந்த இடங்களிலும் ஒரு புதுமையான ஏற்பாட்டைப் பார்த்தோம். மாணவர்கள் தங்கள் விருப்பங்களையும், கோரிக்கைகளையும், அபிலாஷைகளையும் எழுத, ஒட்ட, வெளியிட ஒரு தனிப் பகுதியையே ஒதுக்கியுள்ளார்கள். விருப்பங்களை வெளியிடும் சுவர் என்று இதற்குப் பெயர் வேறு வைத்திருக்கிறார்கள்.

ஸ்டுட்கார்ட்டிலும், ஜெர்மனியின் வேறு சில பகுதிகளிலும் திராட்சை வளர்ப்பது என்பது ஒரு பெரிய கலையாகவே போற்றப்படுகிறது. திராட்சை பயிரிடுவது, ஒயின் தயாரிப்பது எல்லாமே ஒரு புகழ்மிக்க பாரம்பரியமான கலாசாரமாகக் கருதப்படுகிறது. பிரம்மாண்டமான ஒயின் பீப்பாய்களை இன்னும் மரங்களிலேயே செய்து பேணிக் காக்கிறார்கள். திராட்சை வளர்ப்பதில் திறமையைக் காட்டிப் போட்டி போடும் பல தனி நபர்களையும் வீடுகளையும்கூட ஜெர்மனியில் காணலாம். எங்கள் சுற்றுப் பயணத்தின் நிறைவான அம்சமாக ஸ்டுட்கார்ட்டின் புறநகர்ப் பகுதியில் 'வெயின்ஸ்டூபன்' குன்றிலுள்ள ஒரு வொயின் செல்லர் ரெஸ்டாரெண்டில் டின்னர் ஏற்பாடாகியிருந்தது. ரெஸ்டாரெண்டு உள்ளேயே இலை தழைகளோடு திராட்சைக் கொடிகள் படரவிடப்பட்டிருந்தன. பழைய மர ஒயின் பீப்பாய்கள், திராட்சை மதுப் பிழியும் இயந்திரங்கள், திராட்சை சம்பந்தமான ஓவியங்கள் அந்த உணவு விடுதி முழுவதும் நிரம்பியிருந்தன. சுற்றுப் பயணத்திலிருந்து நிறைவுடன் எங்களுக்குப் பிரியாவிடை தரும் விருந்துபசாரமாக அது ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது.

(தொடரும்)

---

''கட்டிங் சார்ஜ் நாலுரூபாய்க்குப் பதிலா அஞ்சு ரூபாய் கேட்கிறியே, ஏன்?''

''தூங்கி அதிகத் தொந்தரவு கொடுத்ததற்கு எக்ஸ்ட்ரா ஒரு ரூபாய்!''

—அ. தெய்வசிகாமணி.



வாடிக்கையாளர்களுக்கும் பொது மக்களுக்கும்
எங்கள் இதயங்கனிந்த பொங்கல் வாழ்த்துக்கள்

# N.S.K.

பைனான்சியர்ஸ்

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில்
ஃபிக்சட் டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படுகின்றன.
ஒவ்வொரு ரூ. 5000/- [குறைந்தது 2 வருடங்கள்] டெபாசிட்டுக்கும்

# அன்பளிப்பு

வெள்ளிக் குத்துவிளக்கு

வருடாந்திர வட்டி
விகிதங்களின் மேல்
**3%** கூடுதல் வட்டி



Pays
**24%**

மாதாந்திர வட்டி விகிதங்கள்

| 1 வருடம் | 2 வருடங்கள் | 3 வருடங்கள் | 5 வருடங்கள் |
|---|---|---|---|
| 17% | 18% | 19% | 21% |

(minimum deposit acceptable Rs. 1000/- multiple)
உங்களுடைய முதலீடு 48 மாதங்களில் எங்கள் "கோல்டன் கேஷ் சர்டிபிகேட்" திட்டத்தின் மூலம் இருமடங்காகிறது.

முதலீடு செய்ய தொடர்புகொள்க:




**N.S.K.** பைனான்சியர்ஸ்
(தி.நகர் பேருந்து நிலையம் எதிர்புறம்) எண். 38-B,பர்கிட் ரோடு
(முதல் மாடியில்) தி.நகர், சென்னை-600 017. போன்: 447135

எதிர்கால சேமிப்பிற்கு என்.எஸ்.கே.


MAALAI MALAR
மாலை மலர்
தேர்தல் வெற்றி
எம்.ஜி.ஆர் மகிழ்ச்சி

ஜனவரி 9 முதல்

# மதுரையில் இருந்து வெளிவருகிறது

# மாலை மலர்

முற்றிலும் மாறுபட்ட மாலை தினசரி

சென்னை, கோவை, சேலம், பாண்டிச்சேரியில்
வெற்றிக்கொடி நாட்டிய
நடு நிலை நாளிதழின் 5 வது பதிப்பு.

MAALAI MALAR

(No. 1-Evening Tamil Daily)

12, CENTRAL BUS STAND ROAD,
MADURAI-625 001. Phone: 27166, 27239

மாலை மலர்

12, சென்ட்ரல் பஸ் ஸ்டாண்ட் ரோடு,
மதுரை-625 001. போன்: 27166, 27239

SIMULTANEOUSLY PUBLISHED FROM MADRAS, MADURAI, COIMBATORE, SALEM AND PONDICHERRY

# நேரம் நல்ல நேரம்

33\. போன வாரம் பதில் சொல்லும்போது, ஒவ்வொரு முறை பரிசு வாங்கும் போதும் உங்கள் நண்பர்கள், உங்கள் குருநாதர்கள் இல்லையேன்னு வருத்தப்படுவேன்னு சொன்னீங்களே, அவர்கள் யார்?

நான் குருநாதர்னு சொல்லும் போது, எனக்கு நாடகத்துல கையை எப்படி வைத்துக்கொள்ள வேண்டும் என்ற ஆரம்பப் பாடம் முதல், எவ்வளவு சத்தமாகப் பேச வேண்டும் என்பது வரை எனக்குச்சொல்லிக் கொடுத்த திரு டி. கே. சண்முகம் அவர்கள். ஆக்கவி அவர்தான் குரு... என்னு 'களத்தூர் கண்ணம்மா'ல எனக்கு நடிக்கக் கத்துக் குடுத்தாக் கூட, அப்போ நான் வெறும் டிஸிப்ளின்லே தான். 'இப்படித் திரும்பு, அப்படித் திரும்பு'ன்னு — மிருகங்களை வைத்து தேவர் பிலிம்ஸ்ல படம் எப்படி எடுக்கறாங்களோ அந்த மாதிரி — சொன்ன அசைவுகளைச் செய்யும் பழக்கப்பட்ட ஒரு பிராணியாகத் தான் நான் பயன்படுத்தப்பட்டேன். அதுக்கப்புறம், கொஞ்சம் துடுக்குத்தனமா பேச வேண்கற ஒரு எக்ஸ்ட்ரா குவாலிஃபிகேஷன் தவிர எனக்கு வேற ஒன்னும் இருந்தது இடையாது. அதீத ஞானத்துடன் செயல் பட்டேன் என்றெல்லாம் சொல்ல முடியாது. அந்த மழலை என்னுடைய பாக்கித் தவறுகளை மறைத்து விட்டது என்றுதான் சொல்ல வேண்டும். அதுக்கப்புறம் நினைவு தெரிந்த பிறகு 'நடிக்கிறதில் இவ்வளவு டெக்னிக்ஸ் இருக்கிறது' என்று எனக்குச் சொல்லித்தந்து என்னைப் பண்படுத்திய என் முதல் குருநாதர் திரு டி. கே. சண்முகம் அவர்கள். அவர்கள்தான் நடிகனுக்கு உண்டான ஒழுக்கங்கள் என்று சொல்லித்தந்தவர். சோஷியல், மாரல் ஒழுக்கங்கள் மட்டுமல்ல; நாடக நடிகனுக்கு உள்ள டிஸிப்ளின் - அவன் எப்படி அதை மதிக்க வேண்டும் என்று கற்றுக் கொடுத்தார். மேடையில் ஏறுவதற்கு முன்னால் அதைத் தொட்டுக் கும்பிடுவது மட்டுமே டிஸிப்ளின் ஆகிவிடாது; மனத்திற்குள் இருக்கும் ஒரு உற்சாகம் ஒவ்வொரு நாடகத்திலும் இருக்கும் ஒரு உற்சாசம் — அதை எல்லாம் சொல்லிக் கொடுத்தவர் டி. கே. எஸ். அவர்கள். என்னுடைய வெற்றிகளைப் பார்க்கும் போது — பெரிய வெற்றியோ சிறிய வெற்றியோ எதுவானாலும் பார்க்கும் போது என் தாய்க்கு நிகராகச் சந்தோஷப் படக் கூடியவர் அவர். அவர் இன்று இல்லை. நான் பரதநாட்டியம் ஆடிப் பார்த்தபோது, ''இது நல்ல கலை, ஆனால் இதில் பெண்மையின் நளினம் வந்து விடாமல் பார்த்துக் கொள்!'' என்று சொன்ன அந்தக் கலைஞன் இல்லை... ஆனால் கொஞ்ச காலம் திரு டி. கே. பகவதி அவர்கள் பார்த்து ரசித்தார்.

அதற்குப் பிறகு என். எஸ். நடராஜன் என்று எனக்கு நடனம் பயிற்றுவித்த குருநாதர். பரத நாட்டியத்தில் தையா தை என்று ஆரம்ப பாடம்முதல் பலவற்றைச் சொல்லிக் கொடுத்த அந்த குருநாதர் இன்று இருந்திருந்தால், நான் இந்த மாதிரி டிஸ்கோ நடனம் ஆடுவதைக் கூட பொருட்படுத்தாமல் ஏதோ நடனத்தின் புகழ் பாடுகிறானே என்று சந்தோஷப்படுவார். அவரும் இல்லை.

அதற்குப் பிறகு சினிமாத் துறையில் கொஞ்சகாலம் என்னுடைய வெற்றிகளைப் பார்த்துப் பெருமையாக, நான் வெற்றி பெறுவதற்கு முன்னாலேயே, ''பெரிய ஹீரோவாக வருவான் பார்!... என்னுடைய பிள்ளைகள்ள ஒருத்தன் வந்து கலெக்டராயிடுவான். ஒருத்தன் பெரிய ஆக்டர் ஆயிடுவான்!'' என்று என்னைத் தன்னுடைய மகனுகக் கருதிச் சொல்லிக் கொண்டிருந்த திரு தங்கப்பன் அவர்கள். 'ராஜபார்வை'ல முக்கிய பொறுப்புக்கள் பலவற்றை ஏற்றுப் பண்ணினேன்னு, அதுக்குக் காரணம் தங்கப்பன் மாஸ்டர்எனக்கும், ஆர்.ஸி. சக்திக்கும் கொடுத்த ஒரு சுதந்திரம்... காமிராவைக்

○ ''அபத்தமா இல்லையா என்பது அடிக்கப்படுபவரையும் அடிப்பவரையும் பொறுத்தது.''



கொடுத்து, ''போய் ஏதாவது பாட்டுக்கான ஷாட்டுகளை எடுத்துக் கொண்டு வாருங்கள்' என்று சொன்ன அந்த மனிதனின் பெருந்தன்மை... அந்த மனிதன் எங்கள் மேல் வைத்திருந்த நம்பிக்கை... அந்த நம்பிக்கையில் வளர்ந்து விட்ட எங்களுக்கு இவர்கள் இல்லாதது ஒரு பெரிய சூன்யமாக இருக்கிறது.. அவர்களை என்னுடைய சோர்வுற்ற நேரங்களில் சந்தித்து

# கமல் பதில்கள்

அறிவுரைகள் கேட்க வேண்டும் என்று மனம் துடிக்கிறது. கடைசியாக — ஆனால் சொல்லும்போது முதன்மையாக வரக் கூடியவர்— என்னுடைய தாய். அவர் ஆரம்பத்தில் என்னுடைய 'பதினாறு வயதினிலே' கூடப் பார்க்கவில்லை. என்னுடைய ஆரம்ப காலத்துல 'பரவாயில்லைடா, ஓரளவுக்குச் சுமாரா நடிக்கறான்!'னு ஜனங்க ஒத்துக்க ஆரம்பிச்சாங்களே, அந்தப் படத்தைக் கூட அவங்க பார்க்க முடியல்லே.''என்னடா, கோவணம் கட்டிக்கிட்டு இந்த ஸ்டைல்? இது எப்படி இருக்கும்?''னு கேட்டதோட சரி. அதுக்கப்புறம் அவங்களுக்கு நேரம் இல்லே அந்தப் படத்தைப் பார்க்க. நேரம் இல்லேன்னு. நெஜமாவே நேரம் இல்லே. வாழ்க்கையிலேயே நேரம் இல்லே அவங்களுக்கு... அதனால இவங்களை எல்லாம் அடிக்கடி நெனைச்சுப் பார்த்துப்பேன். இன்னும் பல நண்பர்கள்... கோவிந்தராஜன்னு ஒரு நண்பர். ''நீ வந்து அடுத்த வருஷம், 73ல ஃபியட் கார் வாங்கறே... ரெண்டு பேரும் உட்லண்ட்ஸ்ல போயி இட்லி சாப்பிடறோம்!'' அப்படீன்னு வேடிக்கையா, விளையாட்டா என்னுடைய எதிர் காலத்தைக் கணித்து எனக்கு உற்சாகம் ஊட்டிக் கொண்டிருந்த நண்பர்.''நீ பெரிய ஆக்டரா வரப் போறே. சும்மா பயப்படாதே...'' என்று அறிவுரை கொடுத்த — வக்கீலுக்குப் படித்த அந்த நண்பன் முப்பது வயதில் இறந்து போய்விட்டான். அவன் இன்றிருந்தால் எனக்கு இன்னும் சந்தோஷமாய் இருந்திருக்கும். இவர்களை எல்லாம் நினைத்து நினைத்து நான் சந்தோஷமும் துக்கமும் மாறி மாறிப்பட்டுக் கொண்டிருக்கிறேன்.

34. கே. ரவிச்சந்திரன், ஈரோடு.

கவிதை பற்றி, இலக்கியம் பற்றி, வாழ்க்கை நிஜம் பற்றிப் பேசுகிற நீங்கள், இண்டலெக்சுவலாகக் கேள்விகள் எழுப்பும் நீங்கள், அபத்தமான காரெக்டர் காட்சிகளில் நடிக்கும் போது என்ன நினைப்பீர்கள்? உதாரணம்— தனிமனிதனாக ஹீரோ, பத்துப் பேரை அடித்து வீழ்த்துகிற மாதிரி?

உயர்ந்த இலக்கியம் தெரிந்தவர்கள் குழந்தைகளுக்காகக் கூட எழுதுகிறார்கள். அற்புதமான ஓவியங்கள் வரையக்கூடியவர்கள் கேலிச் சித்திரம் போடுகிறார்கள். அதில் அபத்தம் ஏதும் இல்லை. இரண்டுமே கலைகள்... ஆக நீங்கள் கொடுத்த உதாரணம் — பத்துப் பேரை ஒருவர் அடிக்கும் அபத்தம் என்றீர்களே அது. அடிக்கப்படும் பத்துப் பேரின் திறமையையும் அடிப்பவனின் திறமையையும் பொறுத்தது. அது சாத்தியப்படாத ஒன்று அல்ல. நடந்திருக்கிறது; நான் கண்ணால் பார்த்திருக்கிறேன். பத்து இல்லை என்றாலும் ஐந்தாறு பேர்களை ஒருவன் அடிப்பதைப் பார்த்திருக்கிறேன். கோபம் வந்து, என் எதிரிகள் சற்றே தளர்ந்தவர்களாயிருந்தால் நானும் பத்துப் பேரை அடிப்பேன், எதிரிகள் யார் என்பதையும் எதிரியைத் தாக்குபவன் கையில் என்ன இருக்கிறது என்பதையும் பொறுத்தது அது. துப்பாக்கி இருந்தால் நூறு பேரை ஒரு கை பார்க்கலாம்... கையில சிலம்பக் கம்பு இருந்தால் இருபது பேரை ஒரு கை! அதுல அபத்தம் இல்லை. ரொம்ப அபத்தம்னு, ரிவர்ஸ் ஷாட்ல, தரையிலிருந்து புவியீர்ப்பை எதிர்த்து ஒருவன் உயரப் பறந்து போய் மாளிகையில் அமர்ந்து கொள்ளும் காட்சி நம்ப முடியாததாய் இருக்கலாம். முடிந்த வரையிலும் என் படங்களில் இவற்றைத் தவிர்க்க நான் முயற்சிபண்றேன்.

35. நாகராசன், அவிநாசி.

உங்கள் கோணத்தில் நமது பண்பாடு, கற்பு பற்றி அறிவு பூர்வமான கருத்து? கோடம்பாக்கத்துச் சமாசாரங்களைக் கேட்க ஒரு கமலஹாசன் தேவையா என்ற எதிர்பார்ப்பே இந்தக் கேள்வி.

திரு நாகராசன் கேள்விக்கு ஒரு சின்ன கண்டனம். ஒரு சின்ன உதாசீனம் தென்பட்டது அவர் கேள்வியில். கோடம்பாக்கத்து விஷயங்களைக் கமலஹாசனிடம் கேட்பதா? கோடம்பாக்கத்து விஷயங்களைக் கமலஹாசனிடம் கேட்பதுதான் நியாயம். புதுக் கவிதை பற்றியோ, கவிதையில் தேமா — புளிமா பற்றியோ சுமலைக் கேட்பதைவிட, கோடம்பாக்கம் விஷயத்தைக் கேட்பதுதான் நியாயமானது. காரணம் நான் தொழில் செய்யும் இடம் கோடம்பாக்கம். அதை நீங்கள் எல்லோரும் வழக்கமாகச் செய்யும் ஏதோ ஒரு கேலி தெரிகிறது. கோடம்பாக்கத்தில் வடபழனி கோயில் கூடத்தான் இருக்கிறது. என்ன சொல்கிறீர்கள் நீங்கள் என்று எனக்குப் புரியவில்லை; கோபப்படுகிறேன் என்று நினைக்கக் கூடாது... கோடம்பாக்கம் என்றால் பலரால் கேலியாகப் பேசப்படுகிறது. நீங்கள் அந்த அர்த்தத்தில் சொன்னீர்களா என்று எனக்குத் தெரியாது.

கோடம்பாக்கம் விஷயம் என்றால் என்ன? கோடம்பாக்கத்திலிருந்துதான் ஒரு தமிழக முதல்வர் உருவாகியிருக்கிறார். அதே கோடம்பாக்கத்திலிருந்துதான் முன்னாள் தமிழக முதல்வரும் வந்திருக்கிறார். உங்களுக்கு வேறு என்ன வேண்டும் கோடம்பாக்கத்திலிருந்து? தமிழகத்தை ஆள்பவர்கள் கோடம்பாக்கத்திலிருந்துதான் வந்திருக்கிறார்கள். ஆக கோடம்பாக்கத்து விஷயங்களைக் கமலஹாசனிடம் கேட்பதை நான் பெருமையாகக் கருதுகிறேன்... அது போக, ஒரு சைடு கேள்வி கேட்டிருந்தீங்க. அது என்னன்னு பார்ப்போம், ஆனா — பதில் அடுத்த வாரம்!

தொகுப்பு : சித்தார்த்

''மன்னவா! போர்... போர்...''
''எங்கே... எங்கே...?''
''அந்தப்புரத்தில்!''

கோவை ரம்யா.



# நீங்கள் கேட்டவை - தராசு

## அமிதாப்பின் இடத்தைக் கமல் பெறுவாரா?

○ குமார மங்கலம், விருதுநகர்.

? நாடாளுமன்றத் தேர்தலில் தோற்றிருந்தாலும் அக்கட்சியின் மாநில அரசைக் கலைக்க மாட்டேன் என்ற ராஜீவின் பெருந்தன்மை, தார்மீக அடிப்படையில் ராஜினாமா செய்த ஹெக்டேயின் பெருந்தன்மை, எது உங்களைக் கவர்ந்தது?

! இரண்டுமேதான். ராஜீவ்டையது புத்திசாலித்தனத்துடன் கூடிய பெருந்தன்மை. ஹெக்டேயுடையது சாணக்கியத்துடன் கூடிய பெருந்தன்மை.

○ திருமதி தேவனுதன், மதுரை.

? அமிதாப்பின் அரசியல் பிரவேசத்தையொட்டி ஏற்படப் போகும் வெற்றிடத்தைக் கமல் பிடிப்பாரா?

! பிடிப்பார், ரஜினி வழிவிட்டால்.

○ ராகவன், செங்கல்பட்டு.

? அ. தி. மு. க. கூட்டணி வென்றதற்கு அனுதாபம்தானே முக்கிய காரணம்?

! முழுமுதற்காரணம் அதுவே என்று கூற முடியாதபடிக்கு சத்தான விஷயம் ஒன்று இருக்கிறதே! போதாக் குறைக்குக் கருணாநிதியும் இதர தி. மு. க. குட்டித் தலைவர்களும் எம். ஜி. ஆரின் உடல்நிலை பற்றித் தேவையில்லாதவற்றையெல்லாம் பேசித் தொலைத்ததானது வெறுப்பை வளர்த்தது.

○ வெ. பாலன், கொடைக்கானல்

? இன்னும் இருபது ஆண்டுகள் உயிருடன் இருப்பேன் என்று ரஜனீஷ் கூறியிருப்பது பற்றி..?

! இளம் தலைமுறையினர் பலரைக் குழப்புவதற்கும், கெடுப்பதற்கும் இன்னும் இருபதாண்டுகளுக்கு அவருக்கு வாய்ப்பு.



○ இருபதாண்டு



○ வென்ற காரணம்



○ அமிதாபின் இடம்



○ பெருந்தன்மை

○ முத்துசாமி, கொடவாசல்.

? ஆந்திராவில் தெலுங்குதேசம் மகத்தான வெற்றி பெற்றிருக்கிறதே?

! அநீதியான முறையில் என். டி. ஆர். அமைச்சரவை பதவி நீக்கம் செய்யப்பட்டதைக் கண்டிக்கும் வோட்டு அது. ஜம்மு காஷ்மீரிலும் இவ்வாறே மக்கள் தீர்ப்புக் கூறியுள்ளனர். மற்ற மாநிலங்களில் ஒற்றுமையற்ற எதிர்க்கட்சிகளை நம்பி ஆட்சிப் பொறுப்பை ஒப்படைக்கத் தாங்கள் தயாராக இல்லை என்பதையே மக்கள் தெளிவாக்கியுள்ளனர்.

○ எஸ். வேங்கடேசன், கும்பகோணம் ★

? இனிமேலாவது எதிர்க்கட்சிகளுக்குப் புத்தி வருமா?

! ஏற்கெனவே புத்தி அளவுக்கு மீறி இருப்பதால்தான் இப்படி. தனி நபர்களின் சுய முக்கியத்துவமும் ஆணவமும் அதிகமாகி ஒற்றுமை காண முடியாமல் தடுக்கிறது. அதைப் பார்க்க இருக்கிற புத்தி கொஞ்சம் குறைந்தால் கூடத் தேவலாமோ என்று தோன்றுகிறது!



★ ரூ. 10 பரிசு பெறுபவர்:
எஸ். வேங்கடேசன்.
30, காமாட்சி ஜோஸியர் தெரு,
கும்பகோணம்.



# பரதநாட்டியத்தில் போபால்

"ஒவ்வொரு இந்திய நடனக் கலைஞரும் வெளியில் புரியும் சக்தி ஆகிறார். ரசிகரோ கலைஞரோ நடனத்தைக் காமக் கண்ணோட்டத்துடன் அணுகுதல் பாவம் அப்படிச் செய்பவர் லோக்லிக்குப்பலியாகி பண்மமாவார்!" என்று நடனத்தின் தெய்வீகத்தன்மையை எடுத்துச் சொன்னார் உபந்யாசகர் பாலகிருஷ்ண சாஸ்திரிகள். எங்கே?

ஸ்ரீ கிருஷ்ண கான சபாவினர் ஆண்டு தோறும் நடத்தி வரும் நாட்டியக்கலை மாநாடுகள் எப்போதுமே தனித் தன்மையுடன் சோபித்து வந்திருக்கின்றன. சாஸ்திர பூர்வமான நடன வகைகளுக்கு மட்டுமன்றிக் கிராம நடன வகைகளுக்கும் முக்கியத்துவம் அளிக்கும் மாநாடுகள் இவை. கருத்தரங்குகள், கலைஞர்களுக்கு மட்டுமன்றி ரசிகர்களுக்கும் பலனளிக்கும் விதமாகப் பல்வேறு நடன வகைகளில் நுணுக்கங்களையும் தனிப் பண்புகளையும் ஆராய்கின்றன. இவ்வாண்டு குமாரி லக்ஷ்மி விசுவநாதன் தலைமையில் நடைபெற்ற மாநாட்டில் பல சுவையான நிகழ்ச்சிகள்.

நவரசங்களை விளக்கி கலாக்ஷேத்திரா குழுவினர் வழங்கிய நிகழ்ச்சி பாலகிருஷ்ண சாஸ்திரிகள் குறிப்பிட்ட குறிக்கோளின் அடிப்படையில் தெய்வீகத்துக்கு முக்கியத்துவம் கொடுத்தது.

ஒரிஸ்ஸாவைச் சேர்ந்த கவிஞரும் அறிஞருமான ஜீவன் பாணி கலையானது அரசியல் பூகோள எல்லைகளைக் கடந்து நிற்பதை வாக்கு வன்மையுடன் சுட்டிக் காட்டி, பலமுறை கரகோஷம் பெற்றார். பரந்த மனப்பான்மை இன்றியமையாதது; கிராமக் கலை, மரபு அல்லது சாஸ்திர பூர்வமான கலை என்று வித்தியாசம் பாராட்டுதல் அந்நிய பாரம்பரியமே; நம் நாட்டிற்கு அந்த வழக்கம் உரித்தானதல்லவென்றார். திருமதி சோனால் மான்சிங் (இவ்வாண்டின் நிருத்ய சூடாமணி) அளித்த நிகழ்ச்சி கிராமக் கலைகளும் மரபு பூர்வமானதே என்பதைத் தெளிவாக எடுத்துக் காட்டியது.

இருபது பவுண்ட் எடையுள்ள பிரத்யேகமான ஆடைகளை அணிந்து கொண்டு பேராசிரியர் லக்ஷ்மிநாராயண சமகா குழுவினர் வழங்கிய யக்ஷகானம் நிகழ்ச்சி பார்வையாளர்களை ஒரு மாயா ஜால உலகிற்கு அழைத்துச் சென்றது. சமகா ஆங்கிலப் பேராசிரியர். அவர் குழுவில் அனேகம் பேர் கல்லூரி, பள்ளி ஆசிரியர்கள்!.

வரதட்சணை கொடுமை, போபால் பயங்கரம் போன்ற இன்றைய சமூகப் பிரச்னைகள் நடனத்தில் காண்பிக்கப்பட வேண்டும் என்று அபிப்பிராயப்பட்டார். திருமதி மிர்ணாளினி சாராபாய் அவர் வழங்கிய நிகழ்ச்சி ஒரு பதினாறு வயதுப் பெண் வரதட்சணைக் கொடுமை தாங்காமல் தற்கொலை செய்து கொள்வதாக அமைந்திருந்தது. பாரம்பரிய கட்டுப்பாட்டை மீறாமல் புதுமைகளைப் புகுத்தியிருந்தார் இவர்.

திருமதி மிருணாளினி சாராபாயின் கருத்துகளுக்குப் பதில் கூறுவது போல் அமைந்திருந்தது ராஜ்குமார் சிங்காஜித் சிங்கின் உரை: தற்கால சமூகப் பிரச்னைகளைக் கலையில் புகுத்துவதென்பது அபத்தம். நாதஸ்வர வித்வான்களிடம் ராகங்களை நவீனப்படுத்தும்படி ஏன் யாரும் கேட்பதில்லை? ராஜீவ் காந்தியின் தேர்தல் பிரச்சாரம் பற்றி அபி

எஜமானர்: என்னப்பா முனியா! பொங்கலும் அதுவுமா காலங்கார்த்தால வந்திருக்கே...?

முனியன்: பத்துவருஷமா எனக்குப்பொங்கல் இனும் கொடுக்கலை...! சரி நானாவது உங்களுக்கு இனும் கொடுக்கலாமேன்னு வந்தேன்....!

—ஆர். அரிகோபி





○ கலாக்ஷேத்ரா கலைஞர்கள் பக்தி - ரசமே பிரதானம்

# பயங்கரம்



நயமோ காந்தி மகான் கதையைப் பற்றி கதகளி நடனமோ செய்தால் எப்படி இருக்கும்? நவீனத்தை நிகழ்ச்சி அமைப்புபோன்ற விஷயங்களில் கொணர வேண்டுமேயன்றி அடிப்படையை அசைக்கக்கூடாது என்றார்.

சங்கமித்ரா போன்ற நாட்டிய நாடகங்களைத் தயாரித்துள்ள கார்ல்டன் (கனடா) பல்கலைக்கழகப் பேராசிரியர் சுப்ரமணியன் தம் நிகழ்ச்சிகளில் இது வரை சாந்த ரஸத்துக்கே முக்கியத்துவம் தந்து வந்திருக்கிறார். இந்திய நாட்டியம் சிருங்காரத்துக்கு முதலிடம் அளித்து வரும் நிலை மாற வேண்டும் என்று குறிப்பிட்டார் இவர். பயங்கரம், அற்புதம், வீரம் போன்ற ரஸங்களுக்கும் முக்கியத்துவம் தரப்பட வேண்டும் என்றார். மேலும் மேற்கத்திய கலைகளின் அம்சங்களான முரண்பாடும் போராட்டமும் நம் கலையில் புகுத்தப்பட வேண்டும் என்ற அவர் கருத்துக்குப் பதில் கூறியவர்கள், இவை எல்லாமே ஏற்கனவே இந்தியக் கலைகளின் அம்சங்களாக உள்ளதைச் சுட்டிக் காட்டினர். இதற்குச் சான்றாய் அமைந்தது, தனஞ்சயனும் அவர் சிஷ்யை நிருபமா நித்யானந்தனும் வழங்கிய நிகழ்ச்சி.

கடைசி தினத்தன்று ரசிகர்களுக்கு, கருத்து தெரிவிக்க வாய்ப்பு அளிக்கப்பட்டது. பார்வையாளர்களும் கலைஞர்களும் நெருங்கி வர இது ஓர் அரிய சந்தர்ப்பமாய் அமைந்தது.

குமாரி லக்ஷ்மி விசுவநாதன் திறம்பட நிகழ்ச்சிகளை ஏற்பாடு செய்து நடத்திக் கொடுத்தார். அவருடைய சுருக்கமான அறிமுகங்களும் நகைச்சுவை இழையோடிய முடிவுரைகளும் கருத்தரங்குக்கு முழுமை அளித்தன.

கௌரி ராம்நாராயண்

தமிழாக்கம்: எஸ்ஸார்



○ லக்ஷ்மி விஸ்வநாதன். - சுருக்கமான அறிமுகம்; சிரிக்க வைத்த முடிவுரை.



○ சோனால் - கிராமக் கலைகளும் மரபுக்கு உட்பட்டவையே.

○ மிருணாளினி - வரதட்சிணை கொடுமை சித்திரிப்பு.



○ யக்ஷகானம்- மாயாஜால உலகு...



# சினிமாத் தொகுதியில் சில வேட்பாளர்கள்

**மதுராந்தகம் தொகுதியில் நின்ற மாதிரி சினிமாத் தொகுதியிலும் திடீரென்று நிறைய வேட்பாளர்கள் — ஏகப்பட்ட செலவுகள் செய்து நிற்கும் இவர்களை ஒரு கண்ணோட்டம் விட்டால் என்ன என்று தோன்றியதால்-**

## ஜனவரி 1

மசாலாவும் இல்லாமல், கதையும் இல்லாமல், த்ரில்லும் இல்லாமல் (கடைசி பத்தே பத்து நிமிஷங்கள் — விலக்கு) நிற்பதால் ஒன்றிரண்டு குடும்ப வோட்டுக்களைத் தவிர வேறு கிடைக்குமா என்பது சந்தேகமே. கலக்ஷனும், அந்தகுட்டிப்பயலும் மட்டுமே

○ குடும்ப வோட்டுகளுக்காக ஒரு காட்சியா?



○ பிரசாரகர்கள் ராதா, மோகன்



நன்றாய்ப் பிரசாரம் செய்கிறார்கள். பரபரப்பாயிருந்த விஜய்காந்தின் மீட்டிங்குகளுக்கு இப்போதெல்லாம் ஆளே இல்லை. மிளகாய் பஜ்ஜி வியாபாரம் படுத்துவிட்டதா என்ன, வேர்க்கடலை வண்டிகளைத் தள்ள ஆரம்பித்துவிட்டாரே. இந்த வேட்பாளரின் பின்னணியில் மணிவண்ணன் வேலை செய்வதாய்ச் சொல்கிறார்கள். மணிவண்ணனாவது இப்படி ஒரு சொத்தை வேட்பாளரை நிறுத்தியிருப்பதாவது என்று சந்தேகம் வருகிறது.

## அம்பிகை நேரில் வந்தாள்

தாய்மார்களை மலைபோல் நம்பி நிற்கும் வேட்பாளர்.

மாட்டு வண்டியில் 'லொடக்' 'லொடக்' என வந்துகதவைத்தட்டிமோகன்நுழைவதும் கதவைத் திறந்து அன்பாய் உமா உள்ளே அழைத்துச் செல்வதும், படுக்கை தட்டிப் போடுவதும் குடும்பப் பாங்காய் இருக்க அது ஒரு விலை மகள் வீடு என்று தெரியவரும் போது திடுக்தான். அப்புறம் நீளமாய் ரப்பர் காட்சிகள் 'எமனைக் கூப்பிடுய்யா' வி.கே.ராமசாமி வித்தியாசமானஅழுத்தம். 'கதாசிரியர்' ஒய். ஜி. மகேந்திரனுக்குக்கூட டீசெண்டான மேடை. ரொம்ப நாளாய் போஸ்டர்களுக்கு மட்டுமே பயன்பட்டு வந்த ராதா இந்தத் தொகுதியில் நிஜமாய் உழைத்திருக்கிறார். ஆனால் அடாவடிக்கணவனைத்தியாகத்தாலும், பொறுமையாலும் அவர் திருத்துவதற்குள் நமக்குப் பொறுமை அம்பேல் ஆகிவிடுகிறது. ஊர்வசி : கவர்ச்சிப் பிரசாரகர். பெரிய பணக்காரப் பெண்ணும், பிள்ளையாண்டான் யாரு, எந்த ஊரு, எந்தக் குடும்பம், என்ன வேலை என்று தீர விசாரிக்காமல் மோகனுக்கே (மறு)மணம் செய்து வைக்கிறார்களாம். ரசிக வாக்காளர்கள் காதில் பூச்சுற்றும் வேலை நடக்கிறது. உஷார் ! உஷார் ! அவசர அவசரமாக அமைக்கப்பட்ட பிரசார பாடல்களும்கூட எடுபடவில்லை.

## கடமை

ராமநாராயணன் என்னும் ராசியில்லாத் தலைவரால் நிறுத்தி வைக்கப்பட்டிருக்கும் வேட்பாளர். தந்தையை, மகன் கடுவதை ஆரம்பத்தில் காட்டிப்பின்னால் நிஜமாகவே

இப்படி ஒரு திருப்பம் இருக்கிறது என்று சொல்லிவிடுகிறார். இந்த வேட்பாளருக்குப் பணச் செலவு செய்திருக்கும் பி.எஸ்.வீரப்பா இப்போதெல்லாம் சர்வ ஜாக்கிரதையாக இருக்கிறார். அதனாலேயே ரிகார்ட் டான்ஸ் (அனுராதா) டிஸ்கோ டான்ஸ் (ஆனந்த பாபு—ஜோர், ஜோர் !) களுக்கு டான்ஸ் (இப்போதெல்லாம் ஸ்டண்ட் ஸீன்கள் இப் படித்தான் அழைக்கப்பட வேண்டும்) ஆகிய கவர்ச்சிகளை இணைத்துவிட்டிருக்கிறார். போலீஸ் அதிகாரியை அவன் மனைவி வைத்துக் கொல்ல வைத்த வில்லனை போலீஸ் அதிகாரி யின் மனைவி தீர்த்துக் கட்டுவதே தன் கடமை என்று செயல்படுவதைச் சொல்லப் புதையல் புதிர் மாதிரி நிறைய வழிகளில் பாத யாத் திரை செய்து செல்கிறார்கள். பிரசாரப் பாடல்கள் எளிமையான வார்த்தைகளுடன் இருப்பதால் ரசிக்க முடிகிறது. இசையமைத் திருக்கும் சங்கர் — கணேஷ் இம்முறை பரவாயில்லை என்று சொல்ல வைத்துவிட் டார்கள். ஆட்சியைப் பிடித்தால் நான்கு வாரங்கள் தாக்கு பிடிப்பார்கள் என்று யூகிக்க முடிகிறது.

## BRUCE LEE TRUE STORY

அனுதாப அலைகளைக் கொண்டு வெற்றி பெறப் பார்க்கும் ஆங்கில வேட்பாளர். இறைவனடி சேர்ந்த புரூஸ்லீ தோன்றிய, சண்டை போட்ட, சண்டை போட்ட, சண்டை போட்ட, சினிமாவில் நடித்த, மறைந்த விஷயங்களை அசை போடுகிறார்கள். ஆங்கிலத்தில் அசை போட்டாலும் அழகாய்ப் புரிகிறது. புரூஸ்லீயாய் வேஷம் போட் டிருப்பவர் துடிப்பான ஆசாமி. நிறைய வித்தைகள் தெரிந்து வைத்திருக்கிறார். சான்ஃப்ரான்ஸிஸ்கோ வீதியில் நடக்கும் குட்டிச்சண்டை சரியான சேவல் சண்டை. விமான நிலையச் சண்டையில் எதிரியின் பாண்ட் கிழிவது நம்ப ஊரின் ஆதாம் காலத்து நகைச்சுவை. ஸ்டண்ட் ஸீனிற்கு புரூஸ்லீ தேர்ந்தெடுக்க அந்தப் பாழடைந்த செங்கல் கட்டிட ஏரியா — கொலிஸியம், அதாவது. ரோம் நகரின் பழங்கால வீர விளையாட்டு அரங்கம் — அம்மாடியோவ் ! என்ன லொகேஷன்! அந்த செயின், அரையடி கம்பு சண்டை அதி அற்புதம். நம் ஊரில் சிலம்பாட்டம், புலியாட்டம் மயிலாட்டம் மாதிரி நிறைய ஆட்டங்கள் போட்டு மனத் தைக் கவரப் பார்க்கிறார்கள் என்றாலும், டாகுமெண்டரி வாசனை லேசாக அடிக்கிறது. அசலைப் பார்த்தவர்களுக்கு, நகல் ஏமாற்றம் தான்.

## ஆயிரம் கைகள்

பஞ்சாயத்து தேர்தலா, சட்ட மன்றமா, நாடாளு மன்றமா — எந்த இடத்திற்காகப் போட்டியிடுகிறோம் என்று தெரியாமல் நிற்க வந்திருக்கும் பரிதாபமான சுயேச்சை வேட் பாளர். தமது கிராமத்து ஜனங்கள் அத்தனை பேரையும் பிரசாரகர்களாக உபயோகித் திருப்பதால் அந்தக் கிராமத்தில் மட்டும் இரண்டு நாட்கள்தாக்குப் பிடித்தால் அதுவே பெரிய விஷயம். பிரசாரகர் சிரித்தால் அழுவதுபோலும், அழுதால் சிரிப்பது போலும்—கொடுமை. யாரையுமே தெரிய வில்லை. தெரிந்த இரண்டே முகங்கள் வி.எஸ். கோபாலகிருஷ்ணன், கே. ஏ. தங்க வேலு. கௌரவப் பிரசாரகர்களோ என் னவோ ! பாதி மீட்டிங்கிலேயே மைதானம் காலி. இதற்கு மேல் என்ன சொல்வது ?

—ஜெயமன்மதன்



அனுபவ பிரசாரகரும், ஆரம்பப் பிரசாரகரும்



இது அரசின் ஆட்டம்! அனுதாப அலை வெற்றி யைத் தருமா?



சுயேட்சை வேட்பாளரின் சுரத்தில்லாத தொண்டர்கள்

நீரைக் கொதிக்க வைத்தல், பாட்டிலை
கிருமி நீக்கம் செய்தல், வெப்பநிலை சோதனை
செய்தல்—ஆகிய பிரச்சனைகள் இல்லை.





சவுதி அரேபியன் ஏர்லைன்ஸின் விளம்பரம் இது: நீங்கள் வேறு ஒரு ஏர்லைன்ஸ் மூலம் பயணம் செய்கிறீர்களா? அப்படி என்றால் காத்துக் கொண்டிருக்கும் நேரத்தில் பொழுது போக்க இது உதவும்எனத் தங்கள் காலம் தவறாமையை உணர்த்த இப்படி விளம்பரம் செய்துள்ளது சவுதியா. புதிரை விடுவிக்க உங்களுக்கு எவ்வளவு நேரம் ஆகிறது என்று பாருங்கள்.

இங்கே தொடங்குங்கள்




Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd. at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600032. (Phone: 431543)

Assistant Editor: P. S. Mani

Editor: K. Rajendran

